ஸ்ரீ

# காமாக்ஷித் திருப்புகழ்

(புதிய, பெரிய, 3-ம் பதிப்பு)

*(ஸ்ரீகாஞ்சி காமாக்ஷி, மதுரை மீனாக்ஷி, காசி விசாலாக்ஷி*
*கருணாமயமான முதலிய அம்பிகைகள் பேரில்*
*திருப்புகழ், கண்ணி, சிந்து, கீர்த்தனம், தேவாரம்*
*முதலிய நடைகளில் தோத்திரங்களும், அம்பாள்*
*அஷ்டகமாலை, திருவகுப்பு, அலங்காரம் அநுபூதி,*
*உந்தியார், திருப்பள்ளியெழுச்சி, தாலாட்டு,*
*அந்தாதி, திருவருட்பாவை, கிளித்தூது,*
*புஜங்கம், கவசம், போற்றி, வாழ்த்து,*
*கலிவெண்பா, நாமாவளி, சௌந்தர்ய*
*லகரிபொருட்பா, கனகதாரா*
*தோத்திரமாலை, ராஜராஜேஸ்வரி*
*தண்டகம் முதலியவும்*
*விநாயகர், முருகன்,*
*சிவன், ஐயப்பன்,*
*சரஸ்வதி, லக்ஷ்மி,*
*விஷ்ணு துதிகளும்*
*வெங்கடேச*
*அஷ்டகமும்*
*சேர்ந்தது.)*


இயற்றியவரும், பிரசுரகர்த்தரும்:

**காமாக்ஷி தாஸர்**

(R. சோமசுந்தரம் அய்யர்
அட்வகேட்,
5, அருணடேல் தெரு, மயிலாப்பூர், சென்னை-4.)



காபிரைட்] 1971 [விலை ரூ. 5-00

# அர்ப்பணம்



## 1-ம் பதிப்பு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
**ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு**
*1930ல அாபபணம செய்யப்பட்டது.*

## 2-ம் பதிப்பு

முன்னர் முருகனருளுக்கும் பின்னர் காஞ்சி காமாக்ஷி தேவியின் அருளுக்கும் அடியேனை பாத்திரமாகும்படி வைத்த மூல காரணமும் பக்தியிற் பெரும் ஊக்கமும் ஊட்டி வைத்த ஸ்ரீ மீனாக்ஷி தேவியின் அருள் வடிவாய்த் தோன்றிய எனது பததினி, நித்திய சுமங்கலி
**சம்பகலக்ஷ்மி அம்மாள் ஞாபகார்த்தமாக**
*1953ல் வெளியிடப்பட்டது.*

## 3-ம் பதிப்பு

சகல புவனங்களையும் ஆககி, அளித்து, அழித்து, மறைத்து, அநுக்ரஹித்து எங்கும் வியாபித்து நிற்கும் பரப்ரம்ம சொரூபிணியான பராசக்தி ஜகந்மாதா
**ஸ்ரீ காமாக்ஷி தேவிக்கே அர்ப்பணம்.**

2-ம் பதிப்பின் ஸ்ரீமுகம்

உ

ஸ்ரீமத ஜகத்குரு

காஞ்சி காமகோடி பீடாதிபதி

# சங்கராச்சார்ய சுவாமிகள்

# திருமுகம்.

ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி தேவியின் அருட்பிரசாதத்தால் சென்னை மயிலாப்பூர் அட்வொகேட் ஸ்ரீ காமாக்ஷி தாஸர் ரா. சோமசுந்தரமய்யர் ஆக்கிய ஸ்ரீ காமாக்ஷித் திருப்புகழ் முதல் பதிப்பு முழுவதும் பக்தர்கள் ஆதரித்து இப்பொழுது இரண்டாம் பதிப்பு அச்சாவது மிகவும் போற்றத்தக்கது.

இந்த இரண்டாம் பதிப்பில் புதிய பாடல்களும் சேர்க்கப்பட்டிருப்பதுடன் அவர் ஆக்கிய இதர நூல்களிலிருந்தும் முக்கிய பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப்பதிப்பையும் பக்தர்கள் நன்கு வரவேற்று தேவியின் அருட் பிரஸாதம் பெறுவார்கள் என்று நம்புகின்றோம்.

முகாம் : மாயூரம்,<br>31 12—1951.

நாராயணஸ்மரணை.

## முதற்பதிப்பின் சில மதிப்புரைகள்.

Mahamahopadyaya Dr. V Swaminatha Iyer, Thiagaraja Vilas, Thiruvateesvaranpet, Madras, 16-10-1930.

அவ்வகை நூல்களுள் மயிலாப்பூர் அட்வொகேட் மகா-௱-௱-ஸ்ரீ ரா. சோமசுந்தரம் ஐயர் அவர்கள் இயற்றிய ஸ்ரீ காமாக்ஷி திருப்புகழ் என்பது ஒன்றாகும். இதில் சில பாடல்களை இவர் இசையுடன் பாடக்கேட்டு இன்புற்றேன். இந்த நூலால் ஸ்ரீ ஐயரவர்களுடைய சிறந்த பக்தியும் திருப்புகழில் இவர்கள் மனம் ஈடுபட்டிருத்தலும் விளங்கும். ஸ்ரீ காமாக்ஷி அம்மையின் பெருமையை அறிய விரும்புவோர் இப்புத்தகத்தை வாங்கிப் படித்துப் பயனடைவார்களென்று நம்புகிறேன்.

V. Doraiswami Aiyer, Tamil Pandit, P S High School, Mylapore, 2-10-1930 :-

தாங்கள் காஞ்சி காமகோடியின்மீது நெஞ்சம் நெகிழ்ந்து பாடிய ஸ்ரீ காமாக்ஷி திருப்புகழ் முழுவதையும் படித்து அதன் வாக்கின் நயத்தை ஒருவாறு உணர முயன்றேன். பக்திப் பரவசத்தால் வெளிவந்த அந்நூற் செய்யுட்கள் சொற்செறிவும், பொருட்சிறப்பும், சந்த இன்பமும் அமைந்து விளங்குவதைப் பாராட்டாமல் இருக்க இயலவில்லை. உளங்கனிந்து தாங்கள் பாடிய பாடல்களிற் சில படிப்போருள்ளத்தைப் பரவசப்படுத்தும். அஞ்ஞானத்தைப் போக்கி மெஞ்ஞான மூட்டுவன சில. நாத்திகப் பேயை ஓட்டி ஆத்திக ஒளியைப் பரவசப்படுத்துவன சில. அம்பிகையின் கருணைக்கு அடியாரை இயக்குவன சில.

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்** · பிரமாதூத ஐப்பசி தொகுதி 10 பகுதி 10·- இந்நூலை வாசிக்கும்போது இதனை ஆக்கிய ஆசிரியர் கடவுள் பக்தியிலும் அன்பிலும் சிறந்தவர் என்பது புலனாகின்றது. இதிலுள்ள பாட்டுக்கள் எவரும் எளிதில் பொருளுணருமாறு அமைக்கப்பட்டுள்ளன. பக்தர்களின் பஜனைகளுக்கு இதிலுள்ள பாடல்கள் மிகவும் ஏற்றவையாமெனக் கருதுகின்றோம்.

2-ம்பதிப்பின்

# முகவுரை

## அருளின்றி ஓரணுவும் அசையாது.

ஸ்ரீ காமாக்ஷி தேவியின் அருளாலேயே இந்த இரண்டாம் பதிப்பும் வெளிவந்துள்ளது. முதற்பதிப்பு இரண்டாயிரம் காபிகளும் அச்சாகி சில வருடங்களிலேயே தீர்ந்துபோய் விட்டன. இந்நூலைப் பக்தர்கள் செவ்வனே ஆதரித்து வந்தார்கள். பூஜையின் போதும் பஜனைகளின் போதும் தமிழ் நாட்டிற் பக்தர்கள் பாடிவந்ததுமன்றி சங்கீத வித்வான்களும் கச்சேரிகளிற் பாடி வந்தார்கள். இசைத்தட்டுகளிலும் 132-ம் பக்கத்திலுள்ள "காமபீடத்திலோர" போன்ற பாட்டுகள் வந்துள்ளன. ரேடியோவிலும் பாடப்பட்டு வந்தன.

வெகுநாளாக அடியார்கள் இந்தப்புத்தகம் வேண்டும் என்று கடிதம் மூலம் எழுதியும் நேரில் கேட்டும் அடியேன் இரண்டாம் பதிப்பு வெளிக்கொண்டுவர முடியவில்லை. பண வசதிக் குறைவே முக்கிய காரணமாக விருந்தது. 1952-ல் அச்சிடலாம் என்று எண்ணியபோது ஸ்ரீமத் பகவத் கீதை மொழிபெயர்ப்புப் பாவாகிய பொருட்பா என்னும் நூலையும் 'ஸ்ரீவள்ளி மண வெண்பாவும்' அச்சிடவேண்டி வந்தமையால் அப்பொழுதும் அச்சிடுதல் நின்றுவிட்டது.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் ஸ்ரீமத் பகவத்கீதை பொருட்பாவையும், ஸ்ரீ வள்ளிமண வெண்பாவையும் நேரில் வள்ளல் பேபா மர்சசெண்டு P. S நஞ்சப்ப செட்டியாரவரிடம் கொடுத்தபோது இந்நூலை அச்சுப்போடும் பணவசதியில்லாமையை அவர் தெரிந்து கொண்டவுடன் தானே 2,000 பிரதிகள் அச்சிட்டுத் தருவதாகத் தெரிவித்து

புத்தகத்தை உடனே கொண்டுவந்து கொடுக்கும்படி சொன்ஞா. எனனே தேவியின திருவருள்! ஒரு நல்ல தினத்தில புத்தகதனதக கொடுததேன. உடனே ருபேரா அச்சகத்திற்கு அனுபபி விட்டாா இரணடே மாகததில் அவர்களும் அச சிட்டுக கொடுததுவிடடனா. அடியேன நிலே தெரிந்து தாஞக முனவநது உதவிபுரிநத P S நஞசபப செட்டியார் போனற வளளலகளே உளளபடி நான் பார்த்ததிலலே. அவருககு தேவியின அருள பரிபூரணமாயக கிடைககும் எனபதற்கு ஆக்ஷேபணேயில்லே. அவர் தன் பெயரைப் போடவேணடாமென்ருர். அவர் பெயரைப் போட்டால தான எனக்கு மன நிமமதியும திருபதியும உணடாகும என்று கருதிப் போட்டு விடடேன.

நிறக, இந்த இரணடாம பதிப்பு முதற பதிபபை விட இரணடு பஙகுக்கு மேல பெரியது. புதிய திருப்புகழ்களும், கீர்ததனஙகளும, அகவலகளும சேர்ககபபட்டிருப்பதோடு அடியேன முனபதிப்பிறகுபபின இயற்றிய இதர நூல்களாகிய அமபாள் அஷ்டகமாலே, திருவகுப்பு முதலியவகைளிலிருந்து தோநதெடுககபபடட பாடலகளும் மற்ற நூல்களாகிய அம்பாள் திருப்பள்ளி யெழுச்சி, கவசப் பஞ்சதசி, போற்றிப் பஞ்சதசி, வாழ்ததுப பஞசதசி, அலங்காரம், அநுபூதி, காமாக்ஷி அருட்பாவை, உநதியார், தேவி கிளித்தூது, ஆபதசகாயகவசம, சிவசகதிநடன அகவல், தாலாட்டு, சௌந்தர்யலகரி மொழிபெயர்ப்புப் பாககள் இவைகள் முழு நூலகளும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவ்வளவும் சேர்க்கப் பட்டும இதன் விலே சரசமாகவே வைககப்பட்டிருக்கிறது. வரும இலாபம் பகதி சம்பந்தமான இதர நூல்களும் தமிழ், ஆஙகிலம இவைகளில ஆர்த்தம போட்டு விரிவாக எழுதித் தயாராய் இருக்கும் ஈசாவாஸய உபநிடதம், மாணடூகய உபநிடதம் இரணடும் அச்சிடுவதற்கும் உபயோகப் படுத்தப் படும.

இந்நூலில் 105 திருப்புகழ்கள் உள்ளன. ஸ்ரீ அருணகிரியாா சநதங்களிலேயே பெரும்பாலும் உள்ளன. புது சந்தப்

பாக்கள் I (2), II, VIII, IX, 16, 23, 63, 65, 87, 69 முதலியவை

இந்நூலை வெளிவரும்படி செய்த ஸ்ரீ P. S. நஞ்சப்ப செட்டியாருக்கும் சீக்கிரமே அச்சிட்டுக் கொடுத்த குபேரா அச்சுக்கூடத்திற்கும் எனது நன்றி.

எவ்வளவு ஜாக்கிரதையாக நான் திருத்தியும் சில பிழைகள் எனக்குத் தோன்றாமல நின்றுவிட்டபடியால் பிழை திருததம் ஒன்று கடைசியில சோககபபட்டிருககிறது. பாட்டு முதற குறிப்பகராதியும், விஷய அட்டவணையும சேர்ககப் பட்டிருக்கிறது.

இதிலடங்கிய பாடல்களை அமல மனதோடு படிப்பவர்கள, பாடுகின்றவர்கள, பாடிக கேட்பவர்கள், அபிமானிக்கின்றவர்கள், பஜனை, கச்சேரி முதலியவைகளில் உபயோகப படுததுகிறவர்கள், இசைத்தட்டு கொடுப்பவர்கள் எல்லோருக்கும தேவியின் கடாக்ஷம் பரிபூரணமாய் உண்டாகுமபடி உலக மாதா ஸ்ரீ காமாக்ஷி தேவியைப் பரிபூர்ணமாய பிரார்த்திககும்,

ரா. சோமசுந்தரம் அய்யர்,
அட்வகேட்,
10-ஜி, எட்வர்டு எலியட்ரோடு,
மயிலாப்பூர், 1—5—1953.

அடியார்க்கடியன்,
காமாக்ஷி தாஸர்.



ஸ்ரீ காமாக்ஷிதேவயை நம:

முதற் பதிப்பின்

# முகவுரை

அகணடாகாரமான வெளியினகணுள்ள சகல உலகஙகளையும, அணடங்களையும மணடலஙகளையும், சகல உயிர்களையும, சராசராதிகளையும, சகலமூரததிகளையும படைததுக காததது அழிபபது பராசகதியின இயல்பு. அநதப பராசகதியே ஸ்ரீ காமாக்ஷி எனனும திவய நாபம பூண்டு காஞசி காமகோடி பீடததில வீறறிருககினறனள. ''நகரேஷு காஞசி'' எனறு சொனனபடி காஞசி க்ஷேததிரததின மகிமையைபபறறி இவவிடம சொலல இயலாது. பராசகதிககுப பிரியமான பீடஙகள ஆறுயிரத்து நானூறில காமகோடி பீடமே தலைமையானது எனறு சானறோர கூறுவா

இநதக காஞசி காமகோட்டத்தில காயத்ரி மண்டபததில பிரகாசமான பீடததில ஓஙகார கோணததில் பராசகதி ஸவரூபிணியாகிய ஸ்ரீ காமாக்ஷி தேவியானவள சகல உலகஙகளையும, உயிரகளையும, மூர்ததிகளையும், படைப்பதற்குக் காரணமான வடிவஙகொணடு பத்மாஸனியாய, தாமரை மலா போனற காநதியுடையவளாய், முககணுடையவளாய, சநதிர சூடாமணியான கிரீடம தரிதது, பாசம. அஙகுசம், கருபபுவில, பஞசபுஷப பாணம இவை தாஙகிய சதுாபுஜையாய, இரு செவியிலும் சநதிர சூரியாகளைக் காதோலையாகத தரிதது சிவநத பட்டாடை யுடுததி, திவயாபரணஙகள பூணடு, கரஙகளில நிரமபிசசரியும் வளையலகள அணிந்து இளநதளிர் போனற விரலகளில நவரதன மோதிரங்கள அணிநது, நாசியில் ஜ்வாலை வீசும மூககுததியோடும், இடையில சலஙகையோடு கூடிய பொன ஒட்டியாணம தரிதது, அநேக புஷபமாலைகளும, முதது, பவழம,நவரதனம

இவைகளால கூடிய மாலைகளும அணிந்து, நெற்றியில் கஸ்தூரி திலகம இட்டு, சுமங்கலி வடிவங்கொண்டு, சகல சௌபாக்யங்களையும் கொடுக்கவல்ல மாங்கல்யம கண்டத்தில விளங்க, மந்தஹாஸம நிறைந்த மலர் முகத்துடனும், கருணை பொழியும் பார்வையுடனும, நான்கு புருஷார்த்தங்களையும உயர்ந்த பதவிகளையும கொடுக்கக்கூடிய சரண கமலங்களுடனும, சகலகலா ரூபிணியாய, சகல ப்ரபஞ்ச ரூபிணியாய, ஜகன மாதாவாய, காமேஸவரரால விரும்பப பட்டவளாய், பஞ்ச பிரேதாஸனியாய், இருபுறத்திலும் லக்ஷ்மி, ஸரஸவதி சாமரமவீச, ராஜராஜேஸவரியாய், சதாசிவாதி மூர்த்திகளுக்கும கௌரியாதி சக்திகளுக்கும் காரணியாய் ஆதி சக்தி, ஆதம வித்தை, மகா திரிபுர ஸுந்தரி, காமகோடி எனனும நாமங்களோடு திருமூர்த்திகளாலும ஆராதிக்கப்பட்டவளாய பிரகாசித்துக்கொண டிருக்கின்றனள இந்தப பராசக்தியின கலைகளே சகல ஆலயங்களிலும அம்பாளாக விளங்குகின்றன

இப்படிப்பட்ட தேவியின மகிமையைப்பற்றி யார்தான் கூறவல்லார? வசனத்திலேயே கூற இயலாதெனின கவி பாடவும இயலுமோ! இயலாது, எனினும குழந்தையின சொல மழலை சொலலானாலும அதனைக்கேட்டு மகிழாத தாய உலகிலிலலை யாதலால எளியேனும் தாயைப்பற்றி இம மழலைச சொலலை வெளியிடத்துணிந்தேன. தாயும் மகிழ்ச்சி கொண்டனள் என தாயின குழந்தைகள் சிலர் கூறினர மேலும தேவிக்கு உகந்த ஸ்ரீ பாலதண்டபாணியின அவதாரமெனத்தகும ஸ்ரீ காமாக்ஷியின விபரந்தெரிந்தமைந்தனுகிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்தர சேகரேந்திர ஸரஸவதி ஸ்வாமிகள் இம்மழலைச சொலலைச் செவியுற்றனர் அடியேன் நமஸ்கரித்து நின்ற பொழுது அவர்கள் அளவிலாக் கருணைகொண்டு இந்தப் பாடல்களை அச்சுப போடவேண்டும் என்று ஆக்ஞாபித்ததின்பேரில அதனை வெளியிடத் துணிந்தேன். இத்துணிவை தமிழ்வல்ல கவிஞர் மனனிப்பார்கள் என்று நம்புகிறேன்.

இந்தப் புத்தகம் ஜகத்குரு ஸ்வாமிகளுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது.

எளியேன் தமிழ்வல்லனல்லன். இலக்கண இலக்கிய ஞானம் சிறிதுமில்லன் சென்ற ஏழுவருடங்களாக பிரத்யக்ஷ தெய்வமான ஸ்ரீ சுப்ரமண்யக் கடவுளை வழிபட்டு, அவதார புருஷனெனத் தகும் சந்தக்குரு ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய நான்மறைகளுக்கு நிகரான திருப்புகழை மந்திரமெனக் கருதிப் பாடிவந்தனன் முருகன் உவந்து தாயிடம் ஓவாக்கு எளியேனைப் பற்றித் தெரிவித்ததுபோல சென்ற வருடம் ஸ்ரீ காமாக்ஷி தேவியை முதல் தெரிசித்தது முதல் கருணைக்கடலாகிய அப்பாள் ஏதோ சிறிது வாக்குவிலாசத்தை யளித்து அவள் பேரில் பாடும்படி ஆக்ஞாபித்ததை முன்னிட்டு எளியேன் இதை வெளியிடலானேன்

"நன்றே வருகினுந் தீதே விளைகினு நானறிவ
தொன்றேது மில்லை யுனக்கே பரமெனக் குள்ளவெல்லா
மன்றே யுனதென் றளித்துவிட்டே னழியாத குணக்
குன்றே யருட்கட லேயிம வான்பெற்ற கோமளமே":

என்றபடி புகழோ அல்லது குற்றமோ குறையோ எல்லாம் அம்பாளைச் சேர்ந்தது மேலும் எளியேன் தொழிலுக்கேற்ப அவள் உத்திரவு இட்டவாறு செய்வதற்கு மாத்திரம் எளியேனுக்கு அதிகாரமேயொழிய இந்த விஷயம் ஆயிடினும், வேறு எவ்விதமானாலும் எளியேனைச் சேர்ந்ததல்ல பராசக்தியின் விஷயத்தைப்பற்றி இன்னும் பதின்மடங்கு விசேஷமாய்க் கூறவல்லோர் இருப்பார்கள். அப்படிப்பட்ட பெரியோர்கள் பிழைகள் எடுத்துக் கூறினால் அம்பாள் சம்மதத்தின்பேரில் திருத்துவதில் மிகவும் ஆவலுடையவனா யிருக்கிறேன்

இப்புத்தகத்தில் விசேஷமாய் ஸ்ரீ காமாக்ஷி தேவியைப் பற்றி திருப்புகழ்கள் அடங்கியிருப்பதோடு ஏனைய திவ்ய க்ஷேத்ரங்களிலுள்ள அம்பிகையைப்பற்றியும் புகழ் அடங்கி

யுள்ளன. விசேஷமாய திருப்புகழ நடையிலும் விசேஷமாய் ஸ்ரீ காமாக்ஷியைப பறறியும புகழ அடங்கியிருப்பதால் இதறகு ''ஸ்ரீ காமாக்ஷி திருப்புகழ'' எனறு பெயரிடலானேன.

சில விசேஷமாய் ஸ்ரீ அருணகிரிநாதஸவாமிகளை அநுசரிதது சநதஙகளும பிரயோகஙகளும உளளன புது சநதஙகள I (4), II, IV, V, 16, 17, 52, 54 இந்தப பாட்டுகளதான

இது வெளிவருவதறகு மனதாலும் சரீரத்தாலும் உதவி செயத அனபாகளுககும, இதை சீககிரததில அச்சிட்டுக் கொடுதத மதராஸ திருவலலிககேணி பி டி பாணிகமபெனியாருககும, எனனை அஙககரிககொணட மைலாபபூர் திருபபுகழ அடியாாகளுககும ஏனைய திருபபுகழடியாாகளுக்கும எனது வநதனமளிககினறேன.

இதிலுள்ள ஸ்ரீ காமாக்ஷி படம ஏதோ தெரிநதவரையில் முறைககுத தககபடி எளியேன வரைந்திருககிறேன. அதில பிழைகள இருநது தெரிவிததால அதைத திருததி வேறு எழுதி பிளாக செயயத தயாராயிருககிறேன.

இதிலடங்கிய பாட்டுகளை அமலமனதோடு படிப்பவர்கள், பாடுகினறவாகள, அபிமானிககினறவர்கள, பஜனை முதலியவைகளில உபயோகிககின்றவாகள, இவர்களெலலோரும அம்பாளுடைய பரிபூரண கடாக்ஷத்தைப் பெறுமாறு ஸ்ரீ மகா திரிபுரஸுநதரியாகிய ஸ்ரீ காமாக்ஷி தேவியை மனபபூர்வமாய பிராரததிககும,

சமஸகிருத காலேஜிககு
அடுதத குமரவிலாஸ
மயிலாப்பூர்
(10—7—1930)

அடியார்க்கடியன்,
காமாக்ஷிதாஸன்,
R. சோமசுந்தரம் அய்யர்,
அட்வகேட்.

# முகவுரை

## [கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்]

அள்ளும ஆர்வம, துள்ளும நடை, வெட்டுமின்னல் வேகம், அஞ்சா நெஞ்சுரம், அறிவுச் சுரங்கம-இவையே சோமசுந்தர காமாட்சி தாசர். சிவகங்கைக்கு அருகே மானாமதுரையில் பிறந்து வளர்ந்த இந்த மேதாவியை நான் நீண்டகாலமாக அறிவேன். இவர் என்னிடம் வரும்போதெல்லாம் காமாட்சி யம்மனே குங்குமப் பிரசாதம் கொண்டு வருவதுபோல் உணர்வேன். அவர் பாடும் போது சமாதியில் லயித்துக் கேட்பேன். 1926ம் ஆண்டில் நான் சுயராஜ்யா ஆசிரியரா யிருந்த போது, இவரது கம்பீரமான மணிக்குரலைக் கேட்டேன். அதே குரல் இன்னும் கிணிகிணிக்கிறது. காமாட்சி தாசர் நன்ருகப் படித்தவர்; உலகை அளந்து பார்த்தவர், ஆங்கிலத்தை ஆழக்கற்றவர், தமிழில் கவித்திறம் வாய்ந்தவர். ஷெல்லியும், மில்டனும், கம்பனும், புகழேந்தியும் இவர் வாக்கில் பேசுகிருர்கள். வழக்கறிஞர், கிழக்கறிஞர் ஆகிய அட்வொகேட் சோமசுந்தரர் இவர் நீதிமன்றத்தில் நல்ல பெயரெடுத்தவர். நேர்மையான வழக்குகளை நியாயமாக வாதாடிவென்ருர். அறிஞர் மதிப்பைப் பெற்ருர். இல்லறமான நல்லறஞ்செழித்து, வீரதீரரான செல்வரைப் பெற்ருர். குடும்பவாழ்வையே கோயில் வாழ்வாக்கினர். இவர் பொருட்சுவையைவிட அருட்சுவையையே விரும்பினர். இவர் காமகோடி ஆசாரியாரின் ஆசி பெற்றவர். முருகன் அன்பில் மூழ்த்து, காமாட்சியன்பில் தழைத்துச் செழித்த பழுத்த பக்தர். பக்தியும் பாட்டும், பராசக்தி யுபாசனையுமே வாழ்வாகக் கொண்ட இவரைப் போன்ற புலவரை இந்தக் காலம் காண்பது மிகவும் அரிது.

காமாட்சிதாஸர் சென்னை, பம்பாய் நகரங்களில் திரளான சபைகளின்முன் பேசவும் பாடவும் கேட்டுப் பரவசமானேன். காமாட்சி திருப்புகழே அவரது நாமாட்சியை நவிலும்.

அருணகிரி நாதா திருப்புகழை அனவரதமும் ஆர்வமுடன பாடிப் பாடி உருகிய அவர் உள்ளம், அதே சந்தங்களில காமாட்சி திருபபுகழைக் கவினபெறப் பாடியது சாமாட்சி திருபபுகழை பாடப் பாடப் பரவசமாகும்.

எவையெவை கருதில அவையவை யருளும்
எழில மிகவுடைய—தருவாகி
எனதிடர் கடிய இருவினை மடிய
எனதுளமருவி யருள தாயே

என்ற உயர்நத முகதியை வேணடி அம்மனை உபாசிக்கிறார் தாஸா.

பனமயமாய் விளங்கும் சினமய சகதியிடம் பவவினை தீர வேணடுகிறார் பக்தர். காமாட்சிதாஸர் குறளிவித்தை குட்டிசசாததான, மயககு மாயஙகள் குப்புற வீழநது மணணைக கௌவச் செய்தார். அவரது குங்குமப் பொட்டைக கணடாலே கொடுமபேயும அஞ்சிக குழையும. 71-வயதிலும 17 வயது வாலிபத தெமபுடன வாவி நடககும இந்த மூதிளம நலலறிஞனை அருள கவிமணி என்று போற்றுவோமாக.

எனது யோக சமாஜததில் காமாட்சி கோயில் எழுபபி, அதில் அவரை நிரநதரமாக வைத்துக் காணவேணடுகிறேன் அன்னை அருள் அனபரைத் தூணடுக!

நாமாட்சி கொணடானை நல்ல நடையானைக்
காமாட்சி தாசனைக கணடாலே—கோமாட்சி
வீறுளிரும் வெற்றி விளககொளிரும் ஆனந்தப்
பேறுளிரும ஆனமப் பிழமபு

அந்தண பெரியான், அறிவுக் கடலானான்;
முந்து தமிழ்ச் செல்வன, மூதிளைஞன—சந்தமிசை
வாயெல்லாம புன்னகையான; வாழவெல்லாம் காமாட்சித்
தா ளனபு வேளவிவளாத தான

## இந்த 3-ம் பதிப்பின்

# நூன்முகம்

பரப்ரம்ம சொரூபிணியாகிய பராசக்தி ஜகந்மாதா ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி தேவியின் திருவருளால் இந்த மூன்றாம் பதிப்பை அடியேன் வெளியிட முடிந்தது. ஜகத்குரு காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஆக்ஞையின் பேரில்தான் முதல் பதிப்பு அச்சிட்டு வெளி வந்தது. இரண்டாம் பதிப்புக்கு ஸ்ரீ ஸ்வாமிகளே திருமுகம் அளித்துள்ளார்கள்.

இந்த மூன்றாம் பதிப்பில் அநேக புதிய திருப்புகழ்கள், கீர்த்தனைகள், தேவார நடையில் 'திருவாரம்' என்ற ஸ்தோத்திரங்களும், காமாக்ஷியம்மை திருவந்தாதி, காமாக்ஷி கலி வெண்பா, நாமாவளிகள், அம்பாள் அஷ்டகமாலை, திருவகுப்பு, கனகதாரா ஸ்தோத்திர தமிழ் மொழிபெயர்ப்பு பாக்களும், ராஜராஜேஸ்வரி தண்டகம், சகல சௌபாக்ய அஷ்டகம் முதலியவைகளும், வெங்கடேசாஷ்டகமும், விநாயகர், முருகன், சிவன், ஐயப்பன், விஷ்ணு, சரஸ்வதி, இலக்ஷ்மி இவர்கள் பேரில் திருப்புகழ்களும் ஸ்தோத்திரங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த புத்தகத்தை வைத்துக் கொண்டே எல்லா தெய்வங்களுடைய பஜனைகளும் செய்து விடலாம். ஆகையால் இப்புத்தகம் எல்லா பக்தர்களுக்கும் உபயோகப்படக்கூடியது.

அடியேன் தமிழில் வல்லமை பெற்றவன் அல்ல. 1928ம் ஆண்டில் திடீரென்று ஒருநாள் இரவில் தேவி அடியேனை ஆட்கொண்டு தன்மீது பாடும்படி ஆக்ஞாபித்தது ஏதோ சிறிது வாக் விலாசத்தையும் அளித்ததை முன்னிட்டு இந்த நூல் ஆக்கியுள்ளேன். இதில் விசேஷம் இருந்தால் தேவியைச் சார்ந்தது. குற்றம் இருப்பின் அது அடியேனுடையதாகும்.

இந்த காமாக்ஷித் திருப்புகழ் முதல் பதிப்பு 1930 ல் வெளிவந்தது. அது முதலாக இந்தியாவில சகலவிடங்களி-லுமுள்ள தமிழ நாட்டு தேவீ பக்தாகளால இது பாராய-ணம செய்யபபட்டும் பஜனைகளில உபயோகப்படுத்தப படடும பிரபலமடைந்திருபபது தேவியின திருவருளே யாகும. இதிலிருக்கும சௌந்தர்ய லகரி பொருட்பாக்களை அநேகா பாராயணம செயது வருகின்றனர்.

இதில முதன முதலில் ஆக்கப்பட்ட "காமபீடத்திலோா" என்ற பாட்டும குங்குமப்பஞசதியும் தெரியாத பக்தாகள அநேகா இருக்க மாட்டாாகள என்று சொன்னால மிகையாகாது. அனேகா அன்புடனும ஆாவமுடனும இப்பாடல்-களைப பாடிக் கேட்டு ஆனந்திக்க அடியேனுக் கனுக்கிரகம செய்தது தேவியின திருவருளே.

கடவுள் அருளைப பெற்றுயர்ந்த அருளால பக்தர்கள பாடிய பாடலகளை அன்புடன பாடவேணடும என்பது சான்றோா துணிபு. அருள வாயந்த பக்தர்கள பாடலைககாட்டி-லும ஏனையோர் பாடல்கள் அமைப்பிலும இலக்கண இலக்-கியங்களிலும அழகாக இருப்பினும அவைகளின பாராய-யணம் அருள பயக்க மாட்டா. பக்தர்கள் நெஞ்சுருகிப் பாடிய பாடல்கள் ஒவ்வொரு சொலலிலும அருள நிறைந்து நிற்கும. பாடுவோாக்கு அருளைக் கொடுக்கும் வலிமை வாயந்தவை இக பர சௌக்கியங்கள அருள வல்லமை வாயந்தவை பிணிகளைப போக்கும, ஊழ்வினை யகற்றும, இடாகளைப போக்கும், பகையினை யழிக்கும, நினைத்தது பலிக்கும.

இது உபசாரத்துக்காக சொன்னது அல்ல பக்தர்கள் அநுபவ வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம. இதுகாறும காமாக்ஷித் திருப்புகழில அநேக பாடலகள மூலம அநேகர் பலவகை அநுகூலங்களைப பெற்றிருக்கின்றனா. உதாரண-மாகத் ''தேவீ கிளித்தூது சதகம'', ''குங்குமப் பஞசதி'' கவசம, அஷ்டகம இவைகள பாராயணத்தால அநேகா

அதிசயிக்கத்தக்க நன்மைகள் அடைந்திருக்கின்றனர். தேவியிடம் பக்தி செலுத்த வேண்டியது இல்லறத்திலிருப்பவர்களுக்கு மிகவும் அவசியம். தேவியின் பக்தி நாளுக்குநாள் அபிவிருத்தியாகிக்கொண்டு வருகிறது. சிவன் கோயிலில் தேவாரமும். முருகன் கோயிலில் திருப்புகழும் பாட ஓதுவார்கள் அமைத்துப் பாடுவதுபோல் தேவியின் சன்னதியில் காமாக்ஷி திருப்புகழ் பாசுரங்களைப் பாட கோயில் அதிகாரிகளோ தனவந்தர்களோ ஏற்பாடு செய்தால் மிகவும் நன்றாக இருக்கும். காலையில் திருப்பள்ளியெழுச்சி பாடலாம். பள்ளியறை உற்சவத்தின்போது தாலாட்டு பாடலாம். மார்கழி மாத பஜனைகளில் 15 நாள் திருப்பள்ளியெழுச்சியும் 15 நாள் காமாக்ஷி அருட்பாவையும் பாடலாம். நவராத்திரியில் திருக்கொலு வகுப்பும் 'அம்பாள் கொலு' என்ற திருப்புகழும் தேவி பராக்கிரம வகுப்பும் பாடலாம். பிரதி தினமும் எழுந்தவுடன் கை கால்களை சுத்தி செய்து திருப்பள்ளியெழுச்சி அருட்பாவை சொல்லி, கவசமும் சொல்லி குங்கு மப்பஞ்சதசி பாராயணம் செய்து அர்ச்சித்த குங்குமத்தை அணிந்துகொண்டு அன்றைய பணிகளைத் தொடங்கலாம். ஒவ்வொரு வெள்ளிக்கிழமைகளிலும். பௌர்ணமியிலும் நவராத்திரியிலும் வீடுகளில் காமாக்ஷி திருப்புகழ் பஜனை செய்வது நல்லது. கணபதி. முருகன். ஐயப்பன், விஷ்ணு, சிவன், இலக்குமி, சரஸ்வதி இவர்கள் பேரில் ஒவ்வொரு பாட்டுப்பாடி விட்டு திருப்புகழில் வரவு, தீபம், தூபம், நைவேத்தியம் பாடி விட்டு கற்பூர ஹாரத்தி காட்டி விட்டு அருள் வேண்டலில் இஷ்டமான பாடல்களை பாடிவிட்டு நாமாவளி, அந்தாதி, குங்குமபப்பஞ்சதசி, சௌபாக்கிய அஷ்டகம், அஷ்டகம் ஒன்று, திருவகுப்பு ஒரு பாட்டு, அலங்காரம் ஒன்று. அநுபூதி போற்றி. வாழ்த்து. சொல்லிவிட்டு கற்பூரஹாரத்தி முடிவில் செய்யும்போது மங்களம் பாட்டு பாடலாம்.

இப்படிப் பஜனைகளும் பாராயணமும் செய்தால் தேவி யின் அருள் தானே வரும். தேவியின் அருள் பெற்றால் மற்ற எல்லா தெய்வங்களின் அருளும் தானே வரும். ஆதிசங்கரர் வகுத்த காணபத்யம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ் ணவம், சௌரம என்ற சூரிய உபாசனையாகிய ஆறு சமயங் களிலும் நின்று அருளைத் தருபவள் தேவியேயாகும். கணபதி யும், முருகனும் தேவியின் திருக்குமாரர்கள். சிவனும் சக்தியும் ஒன்றே. சூரியன காயத்ரி தேவியேயாகும், விஷ்ணு தேவியேதான் என்பதற்கு சான்று சங்கர நாராயணனும் அர்த்தநாரீசுவரர், ஹரிஹர புத்திரர் முதலிய அநேக விஷ யங்கள உள்ளன. அடியேன் அநுபவ வாயிலாகவும் தேவி யருளால் எல்லா தெய்வங்களின் அருளையும் பெறலாம் என் பதை உறுதியாய்க் கூறமுடியும். முருகனருளால் தேவி யருளைப் பெற்றேன். விநாயகர் அருளால் விநாயகர் திருப் புகழ் இயற்றினேன். அவ்வாறே சிவனர் திருப்புகழ் இயற் றபபட்டது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் கனவிற்றோன்றி கீதையை மொழிபெயர்க்கும்படி ஆக்ஞாபித்து அருளினமை யால் தமிழில் பகவத் கீதை பொருட்பாவென்னும் நூலையும் ஆங்கிலத்தில் பாடல் ரூபமான மொழிபெயர்ப்பும் ஆக்கியுள் ளேன். ஆஞ்சனேயர் அடியேனுக்கு கனவில் தோன்றி அநுக்ரஹம் செய்தது மிகவும் பெரிய விஷயம். தேவியின் அருளால் பிரம ஞானமும் பெறலாம். அடியேனுக்கு உப திடத ஞானமும் அத்துவித ஞானமும் ஏற்பட்டது தேவி யின் அருளாலேயேதான். தேவியின் அருளால் அருட்சித்து களும் பெறலாம்.

பரம்பொருளை மனித ரூபத்திலும் மனித உறவிலும் உபாஸிப்பது தொன்றுதொட்டுள்ள வழக்கம். தேவி உபா சனை மிகவும் பழமையானது. பல வெளி நாடுகளிலும் தொன்று தொட்டு உள்ளது. பரம்பொருளை தாயாக பாவித்து உபாசித்து அருள் பெறுவது சுருதி, யுக்தி, அநு

பவம், இயற்கை எல்லாவற்றிற்கும் ஒத்ததாகும். நாம் எந்த ரூபத்திலும் உறவிலும் உபாஸிக்கிறோமோ அந்த ரூபத்திலும் உறவிலும் நமக்கு பரம்பொருள் அருள்புரிகிறதென்பது மனேஞ தத்துவமும் ஆகும். நம்மில் பெரும்பாலோர் குழந்தைகளாகவே இருக்கின்றோம், நமக்குத் தாயின் அருள் இன்றியமையாதது. தாயின் உபாஸனை உத்தமமானது.

தாயை உபாசனை செயய மந்திரம், தந்திரம், யந்திரம் முதலியவை உள்ளபடி தேவையேயில்லை. சுத்தமான மனசும் 'யான், எனது அற்ற சுத்த ஒழுக்கமும் அவசியம் வேண்டும். சிலர் தேவி உபாசனை என்று யந்திர, மந்திரங்களை வைத்துக்கொண்டு விரும்பத்தகாத வாம மார்க்க பாபச் செயல்களைச் செய்கிறார்கள். அவர்களுக்கு தேவியின் அருள் கிட்டவே கிட்டாது. அவர்கள் முகத்தில் சௌந்தர்யமான தேவியின் களையும் இருக்காது. "நெறி"யிலார்க்கு அருள் இல்லை என்பது எல்லா உபாசகர்களுக்கும் பொது.

சுத்த மனதோடும் ஒழுக்கத்தோடும் தேவியை உபாசனை செய்தால் தேவி நமது யோக க்ஷேமத்தைப் பார்த்துக்கொள்வதோடு, தோன்றாத் துணையாக எப்பொழுதும் பக்கத்தில் இருப்பாள். இகபர சௌபாக்கியங்களைக் கொடுப்பாள். எல்லாவற்றிலும் மேலாக என்றும் தளராத சாந்த மனத்தையும் கொடுப்பாள். அன்னிய பெணகளை தேவியாகவே கருதும் சுபாவம் இருப்பவர்களுக்கு தேவியின் அருள் அதிசீக்கிரத்தில் கிட்டும். எல்லோரும் தேவி பக்தர்களாக ஆகுக.

1928-ல் அடியேனை தேவி ஆட்கொணட மறுதினமே அடியேனால் வரையப்பட்டு சுமார் 40 வருடமாக பூஜையில் இருந்து வரும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் [படம் மிகவும் சக்தி

வாய்ந்தது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்த்ர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அநேக பக்தர்களுடன் வந்து தரிசிக்கப் பெற்றது. அந்தப் படத்தின் புகைப்படம் தான் இந்த புத்தகத்தின் அட்டையிலும் உள்ளேயும் உள்ளது.

இப்புத்தகம் அச்சிட்டு வெளிவர அநேகர் நன்கொடையும் ஈந்தனர். இவர்களுக்கு தேவியின் அருள் பூரணமாக உண்டாகும் என்பதில் ஆக்ஷேபணையில்லை.

இதற்கு முகவுரை எழுதிய கவியோகி சுத்தானந்த பாரதியாருக்கும், இது வெளிவர உதவிய பல அன்பர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

இப்புத்தகததைப் பாராயணம் செய்பவர்களுக்கும் பாடல்களை பஜனைகளிலும், கச்சேரிகளிலும், பூஜைகளிலும் உபயோகப்படுததுபவர்களுககும் பாடக்கேட்டு ஆனந்திப்பவர்களுக்கும், பிரதிகளை வாஙகி இலவசமாய் வழங்குபவர்களுக்கும் தேவியின் அருள் பரிபூரணமாய் உண்டாகும்படி பிரார்த்திக்கும்

R. சோமசுந்தரம் அயயா
அடவகேட,
5, அருணடேல தெரு,
மயிலாபபூா, சென்னை.4.
27—12—1970

அடியார்க்கடியன்,
காமாக்ஷிதாஸர்.

# பொருள் அடக்கம்



## இரண்டாம் பாகம்

பக்கம

## மூன்றாம் பாகம்



## நான்காம் பாகம்

## ஐந்தாம் பாகம்



## ஆறும் பாகம்



## ஏழாம் பாகம்



## எட்டாம் பாகம்

## ஒன்பதாம் பாகம்





# பாட்[ முதற் குறிப்பகராதி

# தேவியின் மகிமை

அன்னையுமை மாண்பதனை யாருரைக்க வல்லாரே
பொன்னையுமே ஏளனஞ்செய் பூவடிவாள்—முன்னமொரு
காளியென வாடினாள் கண்டுசிவ னஞ்சிடவுந்
தூளியெழ வண்டமெலா மங்கு. 1

மின்னற் கொடியிடையாள் மீன்விழியாள் சீர்மிகுந்த
வன்னப் பதமுடையாள் வாணுதலாள்—பொன்னுடையாள்
அன்ன நடையுடையாள் ஆடு மயில்நிகர்த்தாள்
தன்னை நிகரிலாத் தாய். 2

வாசவனின் வச்சிரமும் மாதேவன் சூலமதும்
கேசவனின் சக்கிரமுங் கேவலமாய்—மாசூரன்
கொல்லவிய லாநாளிற் கொனறவனைத் தன் குகனை
வெல்லவெனத் தந்திட்டாள் வேல். 3

ஆக்க லளித்த லழித்த லருட்கண்ணால்
நோக்கல் மறைத்தலிவை நோன்பதுவாய்—வாக்கிலா
மூகனுக்கும் வாக்கருளு மூலமாங் காமாட்சி
யோகநிலை கொண்டா ளுவந்து. 4

பார்தனில் மாலோனின் பத்துவிதத் தோற்றமுஞ்
சீருடனே தேவி திருவிரலின்—கூராம்
உகிரின்கண் தோன்றினவா லொப்பிலாள் சீரைப்
பகர்வதுமிங் காமோ பரந்து. 5

பூமகளும் நாமகளும் போற்றிசெயுஞ் சீர்கொண்ட
கோமளையின் பேரருடான் கொண்டோர்க்குப்—பூமிதனில்
வானவரும் வந்தணைசெய் மாண்புடனே மற்றெல்லா
ஞானமுடன் கூடும் நலம். 6

அடியார்க்குத் தாயுமாய் ஆருயிராய் என்றுங்
குடியா யவருள்ளங் கொண்டே—படிமீது
தாய்போல வன்பர்குறை தன்குறையா யெண்ணியமை
சேய்போலக் காத்திடுவாள் சேர்த்து. 7

என்றுமே காணாத யெட்டுவிதச் செல்வங்கள்
நன்றே நயந்திடுவாள் நம்பினோர்க்—கென்றுங்
கருணைவிழிக் கற்பகமா யன்பரிடம் நின்றே
தருணமதிற் காத்திடுவாள் தாய். 8

கன்றினைக் காக்கக் கனிந்துவரும் தாயேபோல்
என்று மெனைக்காப்பாள் என்தாயே—நன்றுநிதம்
பாடிப் பதம்பணிவார் பன்னாளும் வாழவே
நாடிக் கொடுப்பாள் நலம். 9

அம்பிகையின் செம்பதமே ஆர்வத் துடன்பாடி
நம்பித் தொழுவோர் நலம் பெறுவர் – தெம்புற்று
வாழ்நாள் முழுதும் வளம்பெற்று ஊழ்வென்று
ஏழ்பிறவி நீங்கிடுவார் மேல். 10





காமாக்ஷி தாஸரும் காமாக்ஷியும்

உ

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:



# ஸ்ரீ காமாக்ஷி திருப்புகழ்

---

## I

## விநாயகர் துதி

### (1)

"கைத்தல நிறைகனி" மெட்டு.

ராகம் நாட்டை தாளம் : ஆதி

அத்தியின் முகவனை உத்தமி மகவினை
அத்திரு முருகனின் முதல்வோனை
அப்பணி சடையரு மெத்தகை யமரரு
மர்ச்சனை முதலிடு பெருமானை
பக்தர்க ளுளமதில் நித்தமு மருவிய
பட்சமொ டவரிடர் களைவோனை
பத்திர வகைபல புட்பமொ டிணையடி
பக்திகொள் மனமொடு பணிவேனே ;
சித்தர்க ளமரர்கள் முக்தர்கள் முனிவர்கள்
சிற்சபை யதிபரு மயனுரும்
சிற்பர மருளொரு சக்கிர முடையவர்
செப்பிய புகழுட னடிபேணும்
தத்துவ மிகவுள கச்சியி லொளிபெறு
சக்தியி னெழிலிய லதுபாட
தப்புகள் சிறிதுமில் முத்தமிழ் தருமொரு
சற்குரு வெனவருள் புரிவாயே.

(2)

"உம்பர்தரு" மெட்டு

நாட்டை : கண்டத்ரிபுடை :

அன்பர்தமக் காகமிகப் பரிவாகி
    அம்பையருட் பாலனெனத் திகழ்வோனே
என்புருகிப் பாடுமவர்க் கெளியோனே;
    இன்பமிகப் பேரருளைத் தருவாயே ;
துன்பமறத் தீனர்களுக் கருள்வோனே
    தொந்திவயிற் றேயுலகைக் கொளுவோனே
தம்பிமணக் கோலமுறத் தயவாகித்
    தந்திமுகத் தோடருளைத் தருவோனே;

(3)

ஆனந்த பைரவி : ஆதி:

தனித்த தந்தமும் நடித்த கண்ணொடு
    தடித்த தும்பியு முடையோனே
சரித்த தொந்தியும் வகித்த ஐங்கர
    தனித்த மந்திர வடிவோனே
கனித்த செங்கனி யினித்த கண்டொடு
    கனித்த வுண்டிகள் பலவோடே
களிக்க செம்மலர் பரித்து நின்றிரு
    கழற்றி லன்பொடு பணிவேனே;
எனைத்தி னந்தினம் வளர்க்கு மம்பிகை
    இனித்த கஞ்சியி லுறைவாள்தன்
இணைப்ப தந்தனை உளத்து ளன்புடன்
    இனித்த சந்தமொ டிசைபாட
எனக்கு வந்திரு திருப்ப தந்தனை
    எடுத்து மென்றலை யதுமீதே
இருத்தி செந்தமி ழுரைக்கு மொண்பணி
    எனக்கு கந்தருள் புரிவாயே.

(4)

நாதநாமக்ரியை : சதுஸ்ரகதி : ஆதி

பக்தர்க ளற்புத மௌனவோதும்
பற்பல சித்துக ளருள்வோனே
விக்னம கற்றிடு கணநாதா
வித்தைய ளித்திடு குருநாதா
சக்திப ரத்தினி யருள்பாலா
சக்திய ளித்திட வருவாயே;
முக்திய ளித்திடு முதல்வோனே
முக்கணர் மெச்சிய பெருமானே.

(5)

ராகம் : மோகனம் தாளம் : ஆதி

இடர்கள் பிணிகள் கலிகள் வினைகள்
எவையுமொழிய விடுவோனே
இனிய தமிழி லரிய கவிக
ளௌிியன் மொழிய வருள்வோனே
படியி லடிமை மிடியு மகல
பகைகள் பலவு மறவேயுன்
பதமு மருளி நிதியு மருளி
பவிசு மருள வரவேணும்;
நடன சபையி னதிபர் பரமர்
நதிகொள் சடையர் அருள்பாலா
நளினி புகழு மரனு மகிழும்
நடனி யருளு மொருசேயே;
அடியர் குறைகள் ஒருநொடியி லகல
வருளு முருகன் முதல்வோனே
அயனு மரியு மமரர் பதியும்
அடிகள் புகழு மெழிலோனே.

(6)

ராகம் : மத்யமாவதி தாளம் : ஆதி

அந்தமி குங்கலி யாணிசு மங்கலி
அன்புமி குஞ்சிவ காமச வுந்தரி
அண்டமெ லாமருள் மங்கள நாயகி
குண்டலி கோமளி விண்டுபி ஞனவள்

மரகத வடிவுடை எழிலுடை நங்கை
நிருமலி பயிரவி பரசிவ மங்கை
அடுத்த சேயினை எடுத்து பால்தரு
பெருத்த நாயகி பரக்ரு பாநிதி
—உமைதரு மொருசேயே;

தந்திமு கங்கொள்வி நாயக னும்பெரு
தொந்திகொ ளுங்கண நாயக னுஞ்சிவ
சங்கர னூர்தரு மைந்தனு மாகிய
மங்கள நாயக னென்றப ராபரன்
அருமறை முறைதரு முதலவ னெங்கும்
அடியவர் குறைவற மகிழ்வு நின்று
அடுத்த தீவினை யொழித்து மாநிதி
கொடுத்து மேதினி வழுத்துமாறுயர்
—பதமருள் முதல்வோனே:

தந்தன தந்தன தானத னந்தன
தந்தன தந்தன தானத னந்தன
தந்தன தானன தந்தன தானன
தந்தன தானன தந்தன தானன
தனதன தனதன தனதன வென்று
நடமிடு முனதிரு சரணமி ரண்டும்
அடுத்து தூமலர் எடுத்து மாலைகள்
தொடுத்து பூஜைகள் கொடுக்கு மேழையின்
—வினையது பொடியாக

வந்தினி யின்றுன தாரருள் தந்தெனை
இங்கித மும்பெறு மாறுச கம்புகழ்
மங்களம் யாவும டைந்திட மேவிடு
சங்கடம் யாவுமொ ழிந்திட வேயுன
தருளொடு பொருணிறை பதவிய டைந்து
அடியனு மகிழ்வுற பரகதி தந்து
இடத்தி லேயொரு வலத்தி லேபல
புறத்தி லேயெனை யடுத்து நாளுமுன்
—அருளது புரிவாயே.

(7)

## "விநாயகர் பதிகம்"

அத்திமு கத்தவன் ஆதிவி நாயகன்
முத்திகொ டுத்திடும் மூஷிக வாகனன்
சித்திய ளிப்பவன் சீரடி நித்தமும்
பக்தியு டன்பணிந் தேத்திடு வோமே. 1

ஆதியு மந்தமு மற்றப ரத்தினன்
வேதமெ லாம்புகழ் சித்திவி நாயகன்
பாதம தைத்தினம் பக்தியு ளத்துடன்
ஓதிடு வார்க்குறும் ஊழ்வினை போமே. 2

இக்குவு டன்கனி இட்டலி மோதகம்
மொக்கிடு மூஷிக வாகன மூர்த்தியை
எக்கண மும்பரி வோடுநி னைப்பவர்
விக்கினம் நீங்கிந லம்பெறு வாரே. 3

ஈசனு மேதின மேத்திடு நாயகன்
பாசம றுத்திடு பார்வதி பாலகன்
பூசனை நித்தமி ழைப்பவர் சித்துளன்
மாசறு பத்மப தம்பணி வோமே. 4

உற்றவி டர்ப்பிணி யோடவி டும்பரன்
பற்றறு ஞானியர் பற்றுவி நாயகன்
நற்றவ முற்றவர் நாடுக ஜானனன்
சிற்றடி யைத்தினஞ் சித்தினில் வைப்பாம். 5

எக்கரு மத்திலும் வெற்றிபி றந்திட
விக்கினம் யாவையும் நீக்குவி நாயகன்
பொற்கழ லைத்தினம் போற்றிடு முத்தமர்
நற்கதி பெற்றுநல் வாழ்வுறு வாரே. 6

மூவரும் போற்றிடு முக்கிய மூர்த்தியை
யாவரும் நாடிடு மத்திமு கத்தனை

தீவிரப் பக்திசெ லுத்திவ முத்திடில்
தேவரும் போற்றிடுஞ் சீருற லாமே. 7

நாரணன் நான்முக னுருட னிந்திரன்
ஆரண னுந்தின மார்வமு டன்புகழ்
வாரண மாமுக னைத்தினம் போற்றிடிற்
பூரண வாழ்வொடு பூதியு மாமே. 8

ஆனைமு கத்தனை ஐந்துக ரத்தனை
பானைவ யிற்றனை பார்வதி மைந்தனை
ஊனையு ருக்கியு ளத்தினில் வைப்பவர்
வானைய ளாவுவ ளர்பெறு வாரே. 9

சத்திப ரத்தினி யுத்தமி புத்திரன்
முத்தமி ழைத்தரு சித்திவி நாயகன்
சுத்தப தந்தரு தூயப தத்தினை
சித்தினில் வைத்தவர் சீர்பெறு வாரே. 10

(8)

## விநாயக பஞ்சரத்தினம்

ராகம் : நாட்டை தாளம் : திச்ரகதி ஆதி

மோத கங்கைக் கொண்ட யீசன்
முத்தி சித்தி தாய கன்
மூஷி கத்தில் வாக னங்கொள்
மூவர் போற்று முன்ன வன்
பூத நாதன் தேவ நாதன்
பூர ணக்கு பாக ரன்
புற்பு தப்பி றப்ப றுத்துப்
போத மீயுஞ் சிறப்ப ரன்
வேதம் நாலு மோது கின்ற
வித்த கப்ப ரத்தி னன்
விக்கி னந்த விர்க்கு மோர்வி
நாய கன்க ழைதி பன்

பாத பங்க ஜம்வ ணங்கி
பக்தி கொண்டு போற்றி ஞோம்
பாரில் நலமெ லாம டைந்து
பவுசு கொண்டு வாழ்வ மே. 1

கற்ப கத்தை மிஞ்சி யன்பர்
கருது முன்ன மீப வன்
காம தேனு மணியு மாகிக்
காத்த ருட்க்ரு பாக ரன்
சிற்ப ரத்தி லுற்று வாழுஞ்
சித்தி புத்தி நாய கன்.
சிவப தத்தை யீய வல்ல
சித்ர மிக்க யீஸ்வ ரன்
முற்ப வத்தின் வினைய றுத்து
முக்தி யீயு மற்பு தன்
முத்த மிழ்க்கு நாய கன்க
ணேச னன்பர் பங்கி னன்
பொற்ப தங்கள் பூஜை செய்து
புனித மாய்வ ணங்கி ஞோம்
புகழ்ப டைத்த நிதிய டைந்து
பூதி பெற்று வாழ்வ மே. 2

இதய கமலம் வீற்றி ருக்கும்
ஈஸ்வ ரன்க ணேஸ்வ ரன்
இமைய வர்க்கு மீச னுன
ஈடி லாம கேஸ்வ ரன்
சதியு மைக்கு கந்த பாலன்
சக்தி மிக்க தற்ப ரன்
சங்க டந்த விர்க்கு மீசன்
சரண்பு குந்து போற்றி டில்
பதியு முண்டு நிதியு முண்டு
பவிசு முண்டு பதியி லே
பக்க பலமு மிகவு முண்டு
பரத்தி லேறி யுறையு நற்
கதியு முண்டு விதி யறுக்கு
மதியு முண்டு கஞ்சி வாழ்
கவுரி யருளு முருக னருளும்
வலிய வந்து கூடு மே. 3

ஆக மங்க ளோது கின்ற
அம்பி கைக்கு கந்த வன்
ஆதி யந்த மற்ற யீசன்
அமரர் போற்று மற்பு தன்
ஏக தந்த மோடி லங்கும்
யானை மாமு கத்த வன
எம்பி ரானு மிடர கற்று
மீசன் மாக ணேச னும்
யோகி யோர்கள் நாடு மீசன்
உயர்ப தத்தை யீப வன்
ஓமெ ழுத்தின் ரூப னுண
உத்த மப்ப ரம்பொ ருள்
வேக மோடி வந்து எங்கள
வினைய கற்று மீச னின்
விமல பாதம் போற்றி நாமும்
வெற்றி கண்டு வாழ்வ மே 4
சித்தி புத்தி நாத னை
சீர்மி கும்வி நாய கன்
செந்த மிழ்க்க விக்கு நாதன்
சித்தில் வாழ்க ஜான னன்
முத்தி சித்தி யீயு மந்த
முனிவர் தேடு மூல வன்
மூல மந்த்ர மாகி நிற்கும்
மூவர் போற்று முன்ன வன்
சத்தி யுமைய ளித்த பாலன்
சரவ ணற்கு மூத்த வன்
சகல விடர்த விர்க்கு மீசன்
சரணம் நித்தம் போற்றி டில்
புத்தி கிட்டுஞ் சித்தி கிட்டும்
பூதி யெட்டுங் கிட்டி யே
புவியும் போற்றும் வானும் போற்றும்
புனித வாழ்வு கிட்டு மே. 5

(9)

## விநாயகர் அலங்காரம்

கட்டளைக் கலித்துறை

ஆதி முதல்வனை அம்பிகை பாலனை ஆகமங்கள்
ஓது முதல்வனை ஓங்கா ரரூபனை ஒப்பிலாத
வேத முடிவினை மெய்ஞ்ஞான தேவனை வேண்டுவோர்க்கு
யாது மருளுங் கஜமுகனை அன்புடன ஏத்துவோமே. 1

அத்தி முகத்தானை அன்ப ருளத்தானை அண்டினோர்க்கு
முத்தி யளிப்பானை மும்மலந் தீர்க்கும் முதலவனைப்
பக்தி யுளங்கொண்டு பாடிப் பதமே பணிந்திடுவோர்
சித்தி பலவாய்ந்து பாரிற் பகரொணுச் சீர்பெறுவரே. 2

(10)

## கீர்த்தனைகள்

ஹம்ஸத்வனி] பல்லவி [ஆதி

நமோ நமோ விநாயகன்
பதாம் புஜம் நமோ நமோ (நமோ)

அநுபல்லவி

உமாபதி ரமாபதி, பிரஜாபதி வலாரியும்
க்ருபாகர, கணேஶ்வர சதா பஜே பஜே யெனும் (நமோ)

சரணம்

இகந்தனிற் பரந்தனிற் சிறந்திடுஞ் சுகந்தரும்
சகம்புகழ் ப்ரஸித்தியுஞ் சகலசித்தி முக்தியும்
அகந்தனில் மகிழ்ச்சியும் முகந்தனில் மலர்ச்சியும்
உகந்தென திடர்களைந்து செல்வமெட்டுந் தந்திடும் (நமோ)

(11)

பல்லவி

ஹம்ஸதவனி அல்லது தன்யாசி] [ஆதி

மகா கணபதியின் பதந்தொழு மனமே
மகிழ்வுட னநுதினமே

அநுபல்லவி

தகாத விடர்களைப் புகாது தடைசெய்து
மகா கருணையொடு சகாயமீமருளிடும் (மகா)

சரணம்

மகபதி பசுபதி அரியயன் அமரர்கள்
மலரடி யதனையு முதன்முதல் தொழுதிடு
மகிமை மிகுமரிய மத்தள வயிறுள
மூஷிக வாகன விக்ன விநாயக (மகா) 1

திரிபுர மெரித்திடச் சென்ற சிவனுடைய
தேரி னச்சினைப் பொடிபொடி செய்தார்
சரவண பவனும் வள்ளி மணம்புரிய
தஞ்சமெனத் துதித்த மகிமை யோடுதிகழும் (மகா) 2

(12)

பல்லவி
ஹம்ஸத்வனி அல்லது மத்யமாவதி]

விநாயகனைத்தொழு முனமே
அநுதினமே ஏ மனமே நீ

அநுபல்லவி

கணதி பதியென சுராதி பனுமயன
முராரி யொடுபர சதாசி வனும்புகழ் (விநாய)

சரணம்

நாடி வருமடியர் கோடி யிடர்களைந்து
நாளு மவர்துணை யாகி நிதிகள்பல
கூடி யவர்கள்புவி மீது சுகமுறவே
கோல மதியருளி யாளு மகிமையுள (விநாய)

(13)

வெண்பா

நாடும் நலம்பலவும் நற்றமிழின் ஞானமொடு
கூடும் பொருளனைத்துங் கோலமுடன்—வீடுதரும்
அஞ்சுகரத் தானைமுகன் அம்புயமாஞ் செஞ்சரணந்
தஞ்சமெனச் சார்வார் தமக்கு 1

சக்தி யருளுண்டாஞ் சாலப் பொருளுண்டாஞ்
சித்தி பலவுண்டாஞ் சீருண்டாம்— பக்தியுடன
தும்பி முகத்தவனைத் தூயக் கணபதியை
நம்பித் தொழுவார் தமக்கு. 2

(14)

போற்றி

அத்தியின் முகமே கொண்ட அருட்பெருஞ் சுடரே போற்றி
சத்தியின் மைந்த ஞன தனிப்பெருந் தேவே போற்றி
முக்தியின் வித்தே போற்றி மூஷிக வாகஞ போற்றி
பக்தர்கள் உளத்த மர்ந்த பாலனே போற்றி போற்றி. 1

விக்கின மகற்றிக் காக்கும் விநாயக மூர்த்தி போற்றி
பக்கம துறைந்து காக்கும் பகவதி பாலன் போற்றி
சிக்கினை யறுத்துச் சாலச் சித்திக ளீய வல்ல
முக்கணர் மெச்சும் மூல முதல்வனே போற்றி போற்றி. 2

(15)

வாழ்த்து

வாரண முகத்தோய் வாழ்க வல்வினை தீர்ப்போய் வாழ்க
பூரண ஞான மீயும் புண்ணிய மூர்த்தி வாழ்க
நீரணி சடையான் போற்றும் நிமலனே வாழ்க வாழ்க
ஆரணி உமையாள் யீன்ற அருட்பெருஞ் சேயே வாழ்க. 1

பகவதி பாலன் வாழ்க பஞ்ச கரததன் வாழ்க
இகபர சுகங்க ளீயும் இபமுகத தேவன் வாழ்க
மகபதி முதலாம் வானோர் மதித்துமுற் பூசை செய்யும்
சகமெலாம் போற்றும் சக்திக் கணபதி வாழ்க வாழ்க. 2



# ஸ்ரீ சுப்ரமண்யர் துதி.

---

**சங்கராபரணம் : மிச்ர. ஜம்பை 3+ஆதி 1.**

*தனத்த தனதனனு தனதன தனதனன*
*தனத்த தனதனனு தனதன தனதனன*
*தனத்த தனதனனு தனதன தனதனன தனதான.*

அருட்கு நிதியெனவே பவமிகு மலைகடலை
கடக்கு மொருதுணையாய் இருவினை மலமதனை
அழிக்கு மொருபொருளாய் அடியவ ருளமலரில்
முரல்வேத

அளிக்கு நிகரெனவே யிருவிழி கருணையுடன்
ஒளிக்கு மழகுடனே மதிமுக மதில்வினைக
ளகற்று திருநகையே திகழுற முடியிலரை
மதிசூடும்

திருக்கு மரிலலிதாள் ஒளிவிடு மதனுடைய
கொடிக்கு நிகரிடையாள் ஆகடார கமருளி
சிறக்கு மடி யிணையா ளெழுதரு வடிவுடைய
எமதாயி

ஜெகத்தி லரிதெனவே வருமொரு நகர்தனிலெ
சிவர்க்கு யிடமதிலே திகழுறு முமையவள்தன்
திருப்பு கழையெளியேன் மொழியிட இனியதமிழ்
அருள்வாயே ;

செருக்கு கஞொழியவே பகிரதி நதிதனைதன்
முடிக்கு ளணிசிவனார் மனமது குளிரிடவெ
செவிக்கி னியபொருளே யுரைதரு குமரகுரு
பரவேலா,

செவிக்க ணணையிடையே துயிலொரு மதிவதன
திருக்க ணுடைதிருமால் அதிசய மிகவுடைய
திருப்ப தியினிடைவாழ் அரிதிரு மருகனென
வருவோனே,

மருப்பு முனைகொடுபா ரதமதை யிமயகிரி
யடைக்க யெழுதுமகா கணபதி குறமகளை
வனத்தி லுனைமணமோ டணையவு மருள்முதல்வர்
இளையோனே,

வசிட்ட ரொடுவருகா சிபரொடு முனிவர்களு
மகத்ய முனியொடுகீ ரனுடனெ அருணகிரி
வகுத்த புகழ்தனிலே வளருமொர் தமிழையருள்
பெருமாளே.

## II

சிந்து—பச்சைமலை பவழமலை யென்ற மெட்டு

பழநிமலை மீதமர்ந்த பாலசுப்ர மண்யனே
பவழமலை மீதுவந்த பார்புகழ்ந்த கந்தனே ;

கழுகுமலை மீதமர்ந்த காளகண்டர் மைந்தனே
கனகமயில் மீதுவந்த கானமங்கை பங்கனே ;

தணிகைமலை மீதமர்ந்த சீர்மிகுந்த கந்தனே
தனிமயிலி லேயமர்ந்து தாவிவந்து முந்துமே ;

குருமலையில் ஞானசெஞ்சொற் கூறவந்த மைந்தனே
குருவெனயென் மீதிலன்புமே சொரிந்து முந்துமே ;

இமயமலை யிசர்பங்கில் மேவுமங்கை மைந்தனே
இனிமையுட ேைடிவந்து ஏழைபங்கில் முந்துமே ;

அமரர்சிறை மீளவென்று வேல்சுமந்த கந்தனே
அடிமைவினை தீரவென்று ஆடிவந்து முந்துமே ;

அழகர்மலை மீதமர்ந்த ஆறிரண்டு கண்ணனே
அழகுடனே ஓடி வந்து ஆளவென்று முந்துமே ;

நகரிலரி தானகஞ்சி வேவிவந்த அன்னைமேல்
நவிலவரி தானதங்க மேனிகொண்ட வஞ்சிமேல் ;

அடியருள மூறிவந்த தேனையுண்ட வண்டுமேல்
அடிமைபுகழ் பாடஉந்தன் பாதஅன்பு சிந்துமே.

# III

## வேல்

வீர வேல் வெற்றி வேல்
முருகவேள் திருக்கை வேல்

அன்பர் குறைகள் தீர்க்கும் வேல்
ஆர்த்திகள் தவிர்க்கும் வேல்
ஆதரித்துப் போற்றும் வேல்
அருள் சுரக்குந் தங்க வேல் 1 (வீர

ஆறுதல் அளிக்கும் வேல்
அச்ச மின்றி காக்கும் வேல்
அருகி ருந்து பகைய றுத்து
அல்லும் பகலும் காக்குமே 2 (வீர

இடமிருந்து காக்கும் வேல்
வலமி ருந்து காக்கும் வேல்
எப்பு றத்துஞ் சுற்றி நின்று
இடைவி டாது காக்குமே 3 (வீர

ஈசர்க் குபதே சம்செய்த
எங்கள் முருகன் தங்கவேல்
ஈடி லாத நிதிக ளீந்து
மிடிய னைத்தும் நீக்குமே 4 (வீர

உமை யளித்த சக்தி வேல்
ஒப்பி லாத வஜ்ர வேல்
ஒளி மிகுத்த சித்ர வேல்
உலகம் போற்றும் ஞான வேல் 5 (வீர

ஊழ்வினை யகற்றும் வேல்
உன்னு மடியர்க் குருகும் வேல்
ஒப்பிலாத கருணை யோடு
உற்ற பிணிகள் நீக்குமே 6 (வீர

எட்டிக் குடி நாதன் வேல்
ஏழ்பி றப்ப றுக்கும் வேல்
அட்ட சித்தி யளிக்கும் வேல்
கட்டம் யாவும் நீக்கும் வேல் 7 (வீர

ஏது மிங்கு கதியி லாது
ஏங்கி நிற்கும் வேளையில்
ஏவ லாளி போல வந்து
எதிரில் நின்று காக்குமே 8 (வீர

ஐங்க ரனுக் கிளைய ஞான
ஆறுமா முகத்தன் வேல்
அஞ்ச லஞ்ச லெள்று
அபய மீந்து காக்குமே 9 (வீர

ஒருமுறை வேல் முருகா வென்று
உளம் நெகிழ்ந்து ஓதிடில்
ஓடி வந்து பக்கம் நின்று
உற்ற வினைகள் தீர்க்குமே 10 (வீர

ஓதி முருகன் நாமமே
உலகி லெங்கும் ஓங்கவே
ஒரு மன்பர் வினைக டீர்த்து
உயர்ப தங்க ளீயுமே 11 (வீர

ஔடதமாய் மந்திர மாய்
ஆளுந் தெய்வ மதுவுமாய்
அடியர் வினை தீர வைத்து
அருள் புரிந்து காக்குமே 12 (வீர

பழநிமலை பாலன் வேல்
பாவம் போக்கும் படிக வேல்
அழக ஞான குமரன் வேல்
அடல் மிகுத்த வஜ்ர வேல் 13 (வீர

தணிகை மலைத் தேவன் வேல்
தாபந் தவிர்க்கும் தங்க வேல்
பணியு மடியர் மிடிகள் தீர்த்து
பவிச ளிக்கும் பாலன் வேல் 14 (வீர

தனித்து நின்ற போதிலும்
சபையிற் சென்ற போதிலும்
இனித்துப் பக்கத் துணையி ருந்து
என்று மென்னைக் காக்குமே 15 (வீர

மோகனம் ] "தந்த பசிதனை" [ ஆதி மெட்டு

அந்த முடையமலை மங்கை யுமையருளு
மைந்த னெனவொளிரு—முருகோனே
அன்ப ருளமதில்நி றைந்து பழவினைக
ளைந்து அருள்புரியும்—வடிவேலா ;
எந்த னிடர்கலிக ளெந்தன் முதுவினையு
மெந்தன் மிடியதுவு—மறவேதான
இன்று மயிலின்மிசை வந்து பரமகதி
தந்து நிறைவுபெற—அருள்வாயே ;
வந்து அரியபல குன்றி லமருமொரு
கந்த னெனவளரு—மயில்வீரா
மஞ்சு நிறவனரி கொஞ்சு மருகனென
வந்த குமரகுரு—பரவேலா
இந்து நதியரவு தும்பை மலர்முடிய
ணிந்த பரமசிவ—குருநாதா
எங்கள் கணபதிம கிழ்ந்த விளையருக
னென்று வுலகுபுகழ்—பெருமாளே.

கமாஸ் ] "அகரமுமாகி" மெட்டு [ ஆதி

மணலது வாகி புனலது மாகி
கனலது மாகி—வளியாகி
வரையதி லாத வெளியது மாகி
மனமது மாகி—புலனாகி

மணமது மாகி மலரது மாகி
உயிரது மாகி—உடலாகி
மறைகளு மாகி சகலமு மாகி
மகிமைகொ ளேக—னெனுமீசா ;
குணமுட னேழை குவலய மீது
குறைகளி லாத—நிறைவோடு
குவிநிதி கூடு மிகசுக மோடு
பரசுக வாழ்வும் — அருள்வாயே ;
இணையுயர் வேது மிலனென வேத
மெழிலுட னோது—மயில்வீரா
இமகிரி மாது தருமுரு கேச
னெனவுல கோது—பெருமாளே.

# III

## சிவஸ்துதி

கங்கையு டன்பிறை யிந்துவ ணிந்தவன்
காம னெரித்தவனும்
கண்டமிசைக் கறை யுண்டுல கந்தனைக்
காத்தக்ரு பாகரனே
மங்கையி டந்தனி லிட்டும கிழ்ந்ததி
மகிமையு டன்திகழும்
மகபதி பசுபதி கயிலையி லதிபதி
மான்மழு கொண்டவனும்
எங்குநி றைந்தரு ளீசதி வாகரன்
என்று மிருக்கு மரன்
இங்கெ னுளந்தனில் மேவுப்ர பாகரச்
சிவயநமப் பொருளோய்
சங்கைய ணிந்தவர் தங்கையெனத் திகழ்
சங்கரி சகமகிழும்
சகலசு கந்தரு மம்பிகை யின்புகழ்
சாற்றவெ னக்கருளே.

ராகம் : நாட்டை ]    சிவ பஞ்சகம்    [ தாளம் : ஆதி

அம்பரம் நின்றொரு பரம்பரமென்றால
    கஞ்சுழ லும்படி—நின்றசிவன்
கும்பிடு மன்பரு ளந்தனிலென்றுமி
    ருந்துவ ரந்தரு—கின்ற சிவன்
அம்பிகை மங்கள சுந்தரி வந்திட
    பங்கில்ம கிழ்ந்துறை—கின்ற சிவன்
செய்பத மும்பல மங்கள முந்தரு
    மொண்சிவ சங்கர—னென்றவனே 1

நஞ்சினை யுண்டுல கங்கள்சு கம்பெற
    மங்கள முந்தரு—கின்ற சிவன்
செஞ்சடை யின்கணி ளம்பிறை யும்பணி
    யுங்குளிர் கங்கையை—ணிந்த சிவன்
பஞ்சமு கன்சிவ சங்கர னம்பிகை
    பங்கின னும்பர—னென்ற சிவன்
தஞ்சமெ னுஞ்சிவ நெஞ்சினர் சிந்தையி
    லென்றுமு வந்தருள்—கின்றவனே 2

ஆறுட னம்புலி சூடிடு சங்கர
    னாரென வும்பெயர்—கொண்ட சிவன்
நீறுட னுந்திகழ் மேனியர் கண்டுட
    னேயவர் சிந்தைபு—குந்த சிவன்
சேறுமி கும்பிற வாழிக டக்கிடு
    ஞானமு கந்தருள்—கின்ற சிவன்
பேறுத ரும்பர ஞானசு தந்திர
    னாதி கம்பர—னென்றவனே 3

பேரது வும்பல வாயிர மிங்குள
    பீடுடை சங்கர—னென்ற சிவன்
சீருள சம்புச தாசிவ னன்பர்ச
    காயனு மென்றொளிர்—கின்ற சிவன்
கோரும்வ ரந்தரு சீலமி குந்தச
    பாபதி யென்று—மிருந்த சிவன்
பாருள வன்பரை யாளநி னைந்துள
    மேகுடி கொண்டருள்—கின்றவனே 4

தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்தன—வென்று முனம்
சந்தமு டன்பல கிண்கிணி தங்குச
தங்கையுடன் பெரு—மன்றமதில்
வந்துந டம்புரி கின்றசி வன்பர
விந்தைத ரும்பர—னென்றவனே
தொந்தம றும்படி யிங்கெனை நின்பத
மும்பெற வந்தருள்—மங்களமே. 5

ராகம்: கரகப்ரியா ] [ தாளம்: கண்டத்ரிபுடை

சிவயநம நமசிவய—எனவோதி
திருவடியில் நறுமலர்கள்—பலதூவி
உவகையுட னுனதரிய—புகழ்பாடி
உனதருளை அடிமைபெற—வரவேணும்;
அவையிலொரு திருநடன—மிடுமீசா;
அடியர்மிடி யகலநிதி—யருள்வோனே;
புவியிலுன தரியதரி—சனமீய
புலிநகரி லுறையுமொரு - பெருமானே.

ராகம்: புன்னாகவராளி ] தாளம்: ஆதி

நதியு மதியு முடியி லணியு—மெங்களீசனே;
நடன சபையி னதிப னெனவும்—வந்தநாதனே;
விதியு மகல யிளைய னபய—மென்றுகூறவே
விரைவில் நமனை யுயிர்கொ ளிறைவ—னென்ற
சதியு மிடது புறம தமரு—மங்கை பாகனே; [யீசனே;
சகல சுகமு மெளிதி லருளு—கின்ற ஈசனே;
மதியு மருளி நிதியு மருளி—இந்த யேழையை
மருவி யுனது பதமு மருள—வந்து தோணுவாய்.

ராகம்: ரீதிகௌளை ] [ தாளம்: ஆதி

சிவசிவ என்று நிதமுமொ ழிந்து
திருவடி நம்பு—மடியார்பால்
திருவருள் பொங்க அவரிடர் மங்க
திருவுள முங்கொள்—ஜகதீசா;
அவனியில் வந்து மிடிக ணிறைந்து
அவதியு மிஞ்சி—யிருள்மூடி

அலைவுறு மூன்ற னடியனு மின்றுன்
அருள்பெற வென்று—வரவேணும் ;
அவைதனி லென்றும் நடமிடு கின்ற
அரியய னென்று—மறியாத
அடிமுடி கொண்ட புரகர னென்ற
அருமைமி குந்த—பரமேசா ;
தவமிடு மம்பை யுமையெனு மங்கை
தனையொரு பங்கில்—அணிநாதா ;
சடைமுடி யின்கண் மதியொடு கங்கை
தனையணி கின்ற—பெருமானே.

ராகம் : தன்யாசி ] [ தாளம் : ஆதி

அருணா சலத்தி—லொருஜோதி
அனலா யுதித்த—பெருமானே ;
சரணு கதிக்கு—ருகுநாதா ;
சகலா கமப்பொ—ருளுமான
கருணா கரக்க—டவுளாகி
கலைஞா னமுற்று—மருள்வோனே ;
திருமா லயற்கு—மரியானே
சிவஞா னசித்தி—அருள்வாயே.

சிவனார் திருவெண்பா

சக்தி யருளுண்டாஞ் சாலப் பொருளுண்டாம்
சித்தி பலவுண்டாஞ் சீருண்டாம்—பக்தியுடன்
பஞ்சமுகத் தீசன் பரமசிவன் பாதமே
தஞ்சமெனச் சார்வார் தமக்கு. 2

செஞ்சடையா னீசன் திருநாம மஞ்செழுத்துந்
தஞ்சமெனச் செப்புந் தவமுடையார்—பஞ்சரிதிச்
சீர்பெறுவர் சீலக் குணம்பெறுவர் பார்புகழும்
பேர்பெறுவர் பின்பெறுவர் பேறு. 3

ஆலமுண்ட அண்ணலே ஆதி முதற்சிவனே
நீலகண்ட னாகிய நித்தியனே—கோலமுடன்
சீலப் பதம்பாடிச் சீர்பதமும் யானடையச்
சாலச் சிவஞானம் தா. 4

## போற்றி

அருணைமா நகருள் வாழும்
ஆதியாஞ் சிவனே போற்றி
தருணமே அடியார் துன்பந்
தவிர்த்தருள் ஈசா போற்றி
கருணையே உருவாய் வந்த
கற்பகத் தருவே போற்றி
சரணமே கதியென் றோரைத்
தாங்குவாய் போற்றி போற்றி. 1

ஆதியே போற்றி முக்கண்
அண்ணலே போற்றி யம்மை
நாதனே போற்றி மன்றுள்
நடமிடு மீசா போற்றி
ஜோதியே போற்றி சாலத்
தூயனே போற்றி ஞான
போதமே ஈயும் எங்கள்
புண்ணியா போற்றி போற்றி. 2

## வாழ்த்து

சிற்சபை ஈசன் எங்கள்
சிவபெரு மானே வாழ்க
நற்சுவை நாவிற் கீயும்
நமச்சி வாய வாழ்க
பொற்சர ணுமையாள் பங்கன்
பூரணப் பரமன் வாழ்க
சொற்சுவை மிஞ்சு மீசன்
தூயநற் புகழும் வாழ்க 1

பதந்தொழும் அடியார் பங்கிற்
பரிந்துறை ஈசன் வாழ்க
இதந்தரு முமையாள் பங்கன்
ஈடிலாச் சிவனே வாழ்க

சுதந்திர வாழ்வை யீயுஞ்
தூயசுந் தரனே வாழ்க
சிதம்பர நாதற் போற்றுந்
திருப்புகழ் வாழ்க வாழ்க 2

## IV

### விஷ்ணு ஸ்துதி

சங்குசக் கிரதாரி சாரங்க தாரியுஞ்
சகமுழுது மான ஹரியும்
சாது ரக்ஷகதேவர் ஜயதேவ ருளதேவர்
சதுர் மறைகள் புகழ் தேவரும்
மங்கை லக்ஷ்மி தேவி யைத்தினமு மகலாது
மார்பிலணி மாமாயனும்
மதுசூதன் மாதவனு மபிராம தேவனெனு
மாலோனுங் கோபாலனும்
சங்கரம காதேவ னுங்கண்டு காதல்கொளுந்
தன்மையுட னொளிர் வடிவனே
சங்கையற வந்தெனது சிந்தையி லிருந்தினிய
தண்டமிழி னேயே மருளிச்
சிங்காரி மீனாக்ஷி ஸ்ரீகஞ்சி காமாக்ஷி
சீரான லலிதாம்பிகை
திருமயிலை கற்பகமொ டகிலாண்ட நாயகியைச்
சீலமுடன் பாட வருளே.

### ஸ்ரீ வெங்கடேச அஷ்டகம்

ஓம் நமோ நாராயணாவென்று தினமான
முன்னியடி போற்றும் அடியார்
உள்ளந்த னிற்கருணை வெள்ளந் தனைப்பொழியும்
ஒப்பற்ற கோவிந்தனும்,
வானமோ ரடியாக புவனமோ ரடியாக
மற்றுமோ ரடிவேண்டியே
மாபலியின் முடிமீது சீர்பாதம் வைத்தருள
மாவடிவ முற்ற பெருமாள்

கானமே வித்தந்தை சொற்காக்கு மாமாயன்
கார்முகி லாங்கநாதன்
கருடகேதனன் சுருதி யுடைய கேசவன் கமல
கண்ணனொரு கோபாலனும்
மீனலோசனியாகு மலர்மேலு மங்கை தோள்
மேவு மணவாள பெருமான்
மேலான மெய்ப்பதி திருப்பதி யுறைந்தருளும்
வெங்கடேசத் தெய்வமே. 1

நவநீத முந்திருடி யுரலோடு கட்டுண்ட
நளினமிகு நாராயணன்
நாலுவே தங்கள்புகழ் மாலுபோர் பங்கயனை
நாபியிடைவைத்த நாதன்
அவமாயை கொண்டிளைய மதலையை வருத்திட்ட
மமதை மிகு மிரணியன் பால்
ஆராத காரமொடு நரசிம்மமாகியவன்
மார்பைப் பிளந்த மாயன்
பவநோய் களைந்தெனது பகையினை யறிந்தரிய
பலநிதி யுவந்தருளு மோர்
பக்தபரி பாலனொரு பாலகோபாலனும்
பச்சைநிற பூபாலனும்
எவைவோரி லவையியு மதிசயமநேகமுள
மெய்ப்பதி திருப்பதியில் வாழ்
எம்பிரா னிமையவர்கள் தம்பிரான் ஈடற்ற
வெங்கடேசத் தெய்வமே. 2

மோகினியின் வடிவமுற் றமரருக் கமுதருளு
மொப்பற்ற கோவிந்தனும்
மூவடிகள் கேட்டன்று விச்வரூபங்கொண்ட
முகுந்தமாதவ வாமனன்
மேகநிற வண்ணனதி மாயமுள கண்ணனொரு
வேணுகானப் ரியனுமாம்

விமலனெமை யாளுமொரு ராஜகோ பாலனும்
வேதங்கள் புகழ் சீலனும்
தேகமுழு துந்தெரிய மானபங்கம் புரிய
தியவெண்ணங் கொண்டவத்
தீமைமிகு துரியோதனன் மங்கை த்ரௌபதியின்
சேலைமுழுதுங் களையு முன்
·வேகமென வந்துதவு நாரணனு மெய்யடியர்
மான சம்ரக்ஷ கனுமாம்
எந்தை திருவேங்கடந் தன்னிலுறை யெம்பிரான்
ப்ரத்யக்ஷ பரதெய்வமே. 3

நாமகிரி யம்மையொடு நளினமொ டெழுந்தருளும்
நரஸிம்ம மான பெருமாள்
நாராணன் மாதவன் ஸ்ரீதரன் கேசவன்
நந்தகோபால மாயன்
மாமயிலி லேறும் வடிவேலவர் தமக்கரிய
மாமனெனு மதுசூதனும்
மறையோனின் மாதாதை மன்மதன் தந்தையும்
மதிவதன ரகுராமனும்
காமகலை யோடந்த காமபீடத்தி லொளிர்
காமாக்ஷி மாதேவியின்
கருணைமிகு மண்ணனும் கரியமுகில் வண்ணனும்
கள்ளமிகு செங் கண்ணனும்
தீமைதரு காளிங்கனைத் தனது தாள்கொண்டு
திரநர்த்தனமிட்டதோர்
சீலனுகலனெழிலான திரு வேங்கடனும்
சீர்மேவு கோவிந்தனே. 4

ராமரா மாராம ராமரா மாராம
ராமரா மாவென்றுமே
ரமித்திடு மனத்திடை யுதித்தன வளித்திடும்
அரிதான ரகுநாயகன்

கோமளாங்கித்தேவி சீதையேந்திப்போன
கொடிய ராவணனுடைவன்
குலந்தனையரிந்திட லிலங்கையு மழிந்திட
கோதண்டமே பூண்டவன்
காமனை கண்டுமிக நாணுமோர் சுந்தரன்
கஞ்சி வாழ் வரதராஜன்
கஞ்சமலர் செங்கணன் கண்ணன் க்ருபாகரனும்
கார்போலு மாலோனுமாம்
திமையாவுந்திர திவ்யமங்களமருளும்
மெய்ப்பதி திருப்பதியில் வாழ
திருபூண்டிடுங் கருணை நிறைவேங்கடன் பெரிய
திருவேங்கடத் தெயவமே 5

யந்திரமு மந்திரமு மூலகிலுள தந்திரமும்
தாணடியுள மாமாயனும்
யாசித்து நேசித்து பூசித்து வாசிதது
யானற்று எனதற்றுயே
இந்திரியச் சலிவற்று என்றுமவர் சரணுற்று
இடைவிடா தேத்தும் அடியார்
எவைகோரி லவையீயும் கருணைகரக் கடவுள்
எந்தைமா கோவிந்தனுடை
தந்தியொன் றந்தநாள் ஆதிமூலாவென்று
சங்கடங் கொண்டலறவே
சங்கு சக்ர மோடு நொடிதனில் வந்தபயந்
தந்தருளி நின்ற பெருமான்
எந்தவித நோயினையும் எந்தவித விடர்களையும்
இமைப் பொழுதில் நீககுமாயன்
எந்த நேரந் தனிலும் வந்தடியர் குறை தீர்க்கும்
திருவேங்கடத் தெய்வமே. 6

நாராயணாவென்று பேராயிரங் கொண்டு
நாளுமடி போற்றும் அடியார்
நலம் பெறவும் இகபரசுகம் பெறவும் செல்வமொடு
ஞானமும் பெற்றுய்யவே

சீராகவேவைக்கும் மாமாயன் கோபாலன்
செல்விதனை மார்பில் வைத்தோன்
தேவி மீனுக்ஷியின் சீர்மிகுஞ் சோதரன்
சீரங்கனுன பெருமான
ஆராத காதலுடனலர் மேலு மங்கையுடன்
அடலுடனே வீற்றிருக்கும்
அதிசய மனேகமுள மெய்ப்பதி திருப்பதியில்
எழுந்தருளி நின்ற பெருமான்
தீராத வினையெலாம் தீரவே வேண்டுவோர்
தீவினைகள் தீர வைக்குந்
தெய்வமுங் கலியினில் பிரத்யக்ஷ மாய நின்ற
திருவேங்கடத் தெயவமே. 7

யதுகுலத் திலகனுய் அந்தணர் குலத்தனுய்
யாதவர் குலத்தோனுமாய்
ஆதியிற் கூர்மமாய் மச்சமாய்க் கோடுடைய
வராகமா மூர்த்தியாகி
மதிமிகும் புத்தனுய்த் திரிவிக்ரம மூர்த்தியாய்
மாண்புடை *பலராமனுய்
மதியிலா விரணியன் மார்பைப் பிளந்திடும்
உக்ரமிகு நரசிம்மமாய்
விதியையும் வெல்லவொரு வகையளும் தெய்வமாட்
மேன்மைமிகு நாராயணன்
மெய்யடிய ருள்ளத்து நின்றவர்கள் மிடிதீர்த்து
செல்வங்கள் பலதந்துமேல்
பதவிபல தந்தவரை இமையெனக் காத்தருளும்
ப்ரத்யக்ஷ பரதெய்வமாம்
பக்தபரி பாலனனு கூலன் எமையாளுமோர்
திருவேங்கடத் தெய்வமே. 8

## பார்த்தசாரதிப் பஞ்சரத்னம்

*பார்த்த சாரதியே போற்றி*
*பார்புகழ் கண்ணா போற்றி*
*ஆர்த்திகள் யாவுந் தீர்க்கும்*
*அண்ணலே போற்றி போற்றி*
*சீர்த்திசேர் திருவை மார்பிற்*
*சேர்த்தருள் தேவே போற்றி*
*பூர்த்தியாய்ப் பவவினை போக்கும்*
*புண்ணியா போற்றி போற்றி.* 1

*காத்தருள் கண்ணா வென்று*
*கலங்கிய மாதுக் கந்நாள்*
*நேர்த்தியாய் மிகவுஞ் சேலை*
*நீளவே யருளிச் செய்த*
*கீர்த்தியே பூத்த சீலா*
*கேசவா மானங்காக்கும்*
*மூர்த்தியே முதலே போற்றி*
*முத்திக்கு வித்தே போற்றி.* 2

*கருணையே உருவாய் வந்த*
*கற்பகத் தருவே போற்றி*
*தருணமே அடியார் கட்டந்*
*தவிர்த்தருள் கண்ணா போற்றி*
*அருணனே போன்றெம் மிருளை*
*அகற்றிடு மாசே போற்றி*
*சரணமே கதியென் றோரைத்*
*தாங்குவாய் போற்றி போற்றி* 3

*நாயினுங் கடையோம் நாங்கள்*
*ஞானமும் நலமும் அறியோம்*
*ஆயினும் வாயால் வாழ்த்தி*
*அண்டினோம் நினருள்நாடித்*
*தாயொடு தந்தையு மாகித்*
*தாங்கிட நீயே மறுக்கிற்*
*சேயெமக் கார்துணை செப்பாய்*
*திருவளர் மார்பினனே.* 4

அஞ்சிய விசயன் நெஞ்சம்
ஆறிடக் கீதை பகர்ந்தோய்
நெஞ்சொடு காயம் வாக்கும்
நிமலமாய் ஆக்கி நாங்கள்
செஞ்சரண் தஞ்சம் என்றே
சேவையுஞ் செய்தே நின்றோம்
அஞ்சலென் றபயந் தந்தே
ஆட்கொள வருவா யின்றே. 5

பகவத் கீதை பொருட்பா

எப்போதைக் கெப்போது தர்ம மழியுமோ
எப்போதைக் கெப்போ ததர்மம் மேலோங்குமோ
அப்போதைக் கப்போ தவதாரஞ் செய்குவேன்
இப்பாரில் யானென் றறிகுவா யர்ச்சுனா 4–7

சாதுக்களை யிங்கு சம்ரட்ச ணஞ்செய்து
தீது மிகுத்தோரைத் தீர வொழித்திட்டு
வேதத் தருமத்தை வேரூன்றச் செய்யவும்
பூதலத் தேயுகந் தோறும் நான் தோன்றுவேன் 4–8

எபபணி செய்யினும் ஏதுநீ யுண்பினும்
எப்பொரு ளீயினும் எத்தவஞ் செய்யினும்
எப்பொருள் தானோமஞ் செய்தாலு மென்றனக்
கர்ப்பண மாகவே ஆக்குவை அர்ச்சுனா. 9–27

மோகனம் ] திருப்பதி திருப்புகழ் [ ஆதி

நாரா யணநம நாரா யணநம
நாரா யணநம — எனநாளும்
நாரா யணஜப மேதா ரகமென
நாவா ரதினமு — முறையோடே
பாரா யணமிகு மேலா மடியர்கள்
பார்மீ திகபர — சுகமோடே
பாரோர் புகழ்தரு வாழ்வோ டருணிறை
வாடா நிதிபெற — அருள்வோனே

வாரா யுனதருள் தாரா யென நிதம்
மாலா யுனதடி — யிணைநாடி
வாடா மலர்மொழி யாலே துதிசெய
வாரே னெனதுமுன் — வரவேணும்
சீரா யலைமகள் மார்போ டுறையவும்
மேலாம் நிதியருள் — புரிவோனே
தீரா வினைகளை வோனே திருமலை
மீதே மருவிய — பெருமாளே

கமாஸ் ] [ ஆதி

அருணர் சதகோடி கோடிக் கோடி
உதய மெனவீசு ஜோதிப் பாதம்
அநுதி னமுநாடி பாடிப் பாடி—களிகூரும்
அடியர் வினைசாடு நேயக் கார
செகமு முதுமீயு மாயக் கார
அதிச யவநேக லீலைக் கார—கடல் போலே
கருணை மிகுமோக ரூபக் கார
புவிம களளாவு போகக் கார
கமல மலர்மாது மோகக் கார—பரமான
கதித ருசகாய வேலைக் கார
வினைய றும்மநேக சாலக் கார
கருது மடியார்கள் வாரக் கார—புவிமீதே
திரண மெனநோய்கள் தீரச் சேவை
புரியு முபகார காவற் கார
திருதரு முதார சீலக் கார—ஒருகாலே
தெரிச னமநால நேகக் கோடி
வினைய றுவதான பார்வைக் கார
திரும லையுலாவு மாண்மைக் கார—பெருமாளே;
சரண மெனநாடு வேனைத் தேடி
வெகுக ருணையோட ளாவிக் கூடி
சகல வினைதீர வேவைத் தாளும்—எழிலோடே
சகல கலைமேவு ஞானத் தோடு
நிதியு டனும்வாழ வேயிச் சேயை
சடுதி யெனவாள வேயிப்போது—வருவாயே.

திருவடி சரணென சந்தங் கொண்டும்—புகழ்வோரை
    செகமதி லெழிலுற பண்புந் தெம்புந்—தருநாதா
அருமறை புகழ்தரு செம்பொன் தங்கும்—பதமோதும்
    அடியர்க ளுளமிசை என்றுந் தங்கும்—குருநாதா;
திருமக ளருளுட னின்பம் பொங்குந்—திருமார்பா;
    செகமகள் ஒயிலொடு தங்கும் பண்பும்—பெறுநாதா;
திருமலை தனிலரு ளென்றும் பொங்கும்—புகழோனே;
    ஜெயஜெய ஹரிஹரி எங்குந் தங்கும்—பெருமாளே.

## போற்றி

வேங்கட மாமலை வாழும்
    விண்ணவர் பெருமான் போற்றி
ஏங்கிடு மடியர் பாலே
    இரங்கிடு மண்ணல் போற்றி
தாங்கியென் குடியைக் காக்குந்
    தண்ணருள் சீலா போற்றி
பாங்கொடு திருவை மார்பிற்
    பதித்தவா போற்றி போற்றி.

## வாழ்த்து

மறைகளுங் காணு மாண்பன்
    மன்னென வுலகைக் காக்கும்
குறைகளைந் தருளு மெங்கள்
    கோவிந்த ராஜன் வாழ்க
முறையிடும் பக்தர்க் காங்கே
    முனைந்தவர் பிணிகள் தீர்க்கும்
நிறைவுள திருவுளங் கொண்ட
    நெடியமால் வாழ்க வாழ்க.

# V

# ஹரிஹரர் துதி

ஹரிஹர புதத்திர அடியர்கள் மித்திர
அடிமை குலப்ரியனே
ஹரஹர வென்றனை நித்தமு ரைத்தவர்
ஆர்த்திகள் தீர்த்தருளும்
குருபர சித்ர பரித்தொகை சுற்றுற
கூறிய வாளுடனே
குறைகள்களைந்திடு வீரனெ டெந்தனின்
குடியது காத்தருளும்
பெருமையுடன்பெரு கருணையுடன் திகழ்
பேருடன் வாழ்பவனே
பீதிகுலைந்திட நோயகளசி தைந்திட
பேணிடு மென்னரசே
கருணைக சிந்திடு மிருவிழி கொண்டவள்
கமலம லர்ச்சரணாள்
கவுரிகு மரிகுண தரிபயி ரவியவள்
கவியது சொலவருளே.

மோகனம் ] [ ஆதி

சரண கமல மதனை மருவி
சரண மெனுமு—னடியார்கள்
சகல விடர்கள் கலிகள் பிணிகள்
தவிர வருளு—மெழிலோனே;
அருண சரண மலரை நிதமு
மனுகு மடிமை—வினை தீர
அருளு மருளி பொருளு மருளி
அபய மருள—வரவேணும்;
கருணை பொழியு மரிய பெரிய
கரிய முகிலு—மரனும்
கலவி யுதவு மரிய மதலை
கலியில் வரத—னெனுமீசா;
தருண மதனி லடியர் மகிழ
சகல வரமு—மருள் வோனே
சபரி மலையி லதிப னெனவெ
தரணி புகழ—வுறைவோனே.

கேதாரம் ] [ ஆதி

ஹரிஹர புத்திர—னெனவோதும்
அடியர்கள் மித்திர—னெனவாகி
பெரியவி டுக்கணு— முடனோட
பிரியம னத்துடன்—வருவாயே;
பரிகரி முற்பிணி—எனநாடும்
பரிவுள பக்தர்க—ளுளமேவி
தருணமட திற்றுணை—புரிவோனே
சபரிம லைப்பதி—யுறைவோனே

பந்துவராளி ] [ மிசரசமபை

பகலிரவு முனது செம்பொற்—பதமேதான
பரமகதி யெனவு நம்பித்—தொழுமேவார்கள்
அகமதனி லுறையு மன்பர்க்—கெளியோனே
அருணிறையு மெமது கந்தற்—கிளையோனே
இகபரமு மருளு முன்பொற்—பதமீதே
எளியனை யு மொளிர அன்புற்றருள்வாயே;
சகமகிழு மகிமை கொண்டப் பதியான
சபரிமலை யதனில் வந்தப்—பெரியோனே.

---

சரண மாயினேன் ஸ்வாமி கருணை யீகுவாய்
தருண மேழைமேல் ஸ்வாமி தயவு காட்டுவாய்
இருளை நீக்குவாய் ஸ்வாமி அருளை ஆக்குவாய்
பொருளை யீகுவாய் ஸ்வாமி போக மாக்குவாய்
பிணிகள் நீக்குவாய் ஸ்வாமி வினைகள் நீக்குவாய்
துணையு மாகுவாய் ஸ்வாமி எனையும் ஆளுவாய்
விதியை நீக்குவாய் ஸ்வாமி விமல னாக்குவாய்
கதியு மீகுவாய் ஸ்வாமி கவலை நீக்குவாய்
மணியு மாகுவாய் ஸ்வாமி மருந்து மாகுவாய்
மந்த்ர மாகுவாய் ஸ்வாமி தந்த்ர மாகுவாய்
சபரி நாதனே ஸ்வாமி சரண மாயினேன்
அபய மீகுவாய் ஸ்வாமி சரண மாயினேன்.

## "பச்சைமலை பவழமலை" மெட்டு

| | | |
|---|---|---|
| சபரிமலை வீற்றிருக்கும் | எங்கள்குல | தெய்வம் |
| சண்முகனுக் கிளையவனும் | ,, | ,, |
| ஹரிஹரனார் புத்திரனும் | ,, | ,, |
| அன்பருக்கு அன்பனாகும் | ,, | ,, |
| சாமியே சரணமென்றால் | ,, | ,, |
| சடுதியிலே வந்துநிற்பான் | ,, | ,, |
| கானடுவிற் கைகொடுப்பான் | ,, | ,, |
| மானமதைக் காத்திடுவான் | ,, | ,, |
| யோகியென வீற்றிருப்பான் | ,, | ,, |
| போகமெலா மீந்தருள்வான் | ,, | ,, |
| தேவர்கட்கு தேவனாகும் | ,, | ,, |
| யாவருக்கும் எளியனாகும் | ,, | ,, |
| கலியுகத்து வரதனாகும் | ,, | ,, |
| கண்கண்ட தெய்வமாகும் | ,, | ,, |
| நோய்நொடிகள் தீர்த்தருள்வான் | ,, | ,, |
| பேய்பிசாசு போக வைப்பான் | ,, | ,, |
| எமபயத்தைப் போக்கடிப்பான் | ,, | ,, |
| சமயமதிற் கைகொடுப்பான் | ,, | ,, |
| வேண்டுமதை யீயுமாறு | ,, | ,, |
| ஆண்டவனாய் வந்துதித்தான் | ,, | ,, |
| கொடியபுலி வாகனனும் | ,, | ,, |
| நொடியதனில் காத்திடுவான் | ,, | ,, |
| சக்தியெலா மீந்திடுவான் | ,, | ,, |
| சகலவினை தீர்த்திடுவான் | ,, | ,, |
| பகையதனைப் பறக்கடிப்பான் | ,, | ,, |
| பார்புகழக் கைகொடுப்பான் | ,, | ,, |
| இடர்வராது கர்த்தருள்வான் | ,, | ,, |
| ஈசனவன் நேசனவன் | ,, | ,, |
| விதிதனையும் நீக்கவல்லான் | ,, | ,, |

| | | |
|---|---|---|
| நீதிதனையும் யியலவல்லான் | எங்கள் குல | தெய்வம் |
| ஆபத்திலே கைகொடுப்பான் | ,, | ,, |
| அதிசயமாய் கைகொடுப்பான் | ,, | ,, |
| அன்பர்மனம் வீற்றிருப்பான் | ,, | ,, |
| இன்பமுடன் வாழவைப்பான் | ,, | ,, |
| சங்கடங்கள் தீர்த்தருள்வான் | ,, | ,, |
| மங்களங்கள் பொங்கவைப்பான் | ,, | ,, |

ராகம : மாண்டு ] [ தாளம் : ஆதி

| | |
|---|---|
| சபரிமலை ஆண்டவனே | வா வா வா |
| சக்திமிகப் பூண்டவனே | ,, |
| சண்முகனுக் கிளையவனே | ,, |
| கண்மணியே உண்மணியே | ,, |
| யோகநிலை பூண்டவனே | ,, |
| போக மருள் ஆண்டவனே | ,, |
| நோய்களுக்கோர் அருமருந்தே | ,, |
| நொடியிலெமை ஆட்கொளவே | ,, |
| கண்களுக்கோர் பெருவிருந்தே | ,, |
| பண்களினற் பாடினோம் நீ | ,, |
| பூரணைக்கோர் நாயகனே | ,, |
| புட்கலைக்கும் நாயகனே | ,, |
| ஹரிஹரனின் புத்திரனே | ,, |
| அடியர்களின் மித்திரனே | ,, |
| வண்புலிமேல் வருபவனே | ,, |
| கண்குளிரக் காட்சிதர | ,, |
| மணிகண்ட மாமணியே | ,, |
| துணைகொண்டு காத்திடவே | ,, |
| ஆனைமுகன் சோதரனே | ,, |
| மானமதைக் காத்திடவே | ,, |
| பார்புகழும் பாலகனே | ,, |

பக்தர் தம்மைக் காப்பவனே வா வா வா
சரணமென நாடிவந்தேன் ,,
மரணவினை தீர்த்திடவே ,,
மடியுடனே மலைக்குவரேன் ,,
கொடியவினை தீர்த்தருள ,,
முடியுடனே மலைக்குவரேன் ,,
மிடியதனைத் தீர்த்தருள ,,
சாமியேநீ சரணமென்றேன் ,,
தாமதமே யின்றியென்முன் ,,
சங்கடங்கள் தீர்த்திடவே ,,
மங்களங்கள் பொங்கிடவே ,,

ராகம்: மாண்டு ] குருபரா குகா ஷண்முகா [ தாளம்: ஆதி
மெட்டு

சபரிமலை வாழுமெங்கள் சாமியே நீ வா வா
சார்ந்தவரைக் காத்தருளும் எங்கள் கோவே ,,
அன்பருக்கும் அன்பனான ஆண்டவனே ,,
ஆறுமுகன் சோதரனாய் வந்தவனே ,,
இன்பமுடன் ஏழைகளைக் காக்குமீசா ,,
ஈசனருள் சேயெனவே வந்தவனே ,,
உமையவளின் புத்திரனாய் வந்தவனே ,,
ஊழ்வினையைத் தீர்த்தருளும் உத்தமனே ,,
என்புருகப்பாடுமன்பர் இடர் தவிர்ப்போய் ,,
ஏத்துவோர்கள் வினையறுக்கும் எங்கள் ஈசா ,,
ஐங்கரனுக் கிளையனான ஐயனே நீ ,,
ஒன்றும் பலவு மாகிநின்ற ஒண்பொருளே ,,
ஓதற்கரிய சக்திகொண்ட யோகியே நீ ,,
ஔதார குணமுடையாய் ஓடிமுன்னே ,,

# அருச்சனை

ராகம்: செஞ்சுருட்டி—ஆரபி ] [ தாளம்: ஆதி

"நாதபிந்து" மெட்டு

சபரி மலைவாழும் நாதா நமோநம
சுருதி புகழ் கூறும் வேதா நமோநம
சகல வநுகூல பாதா நமோநம எழிலான
சகல வுலகீயு மீசா நமோநம
இதய மணிபீட வாசா நமோநம
தருண மதிலாளும் நேசா நமோநம பிணிதீர
அபய மருளாதி மூலா நமோநம
அரிய ரனளாவு பாலா நமோநம
அவனி புகழ்கால காலா நமோநம தவமான
அடியர் வினைசாடும் வீரா நமோநம
இணையு யர்விலாத சூரா நமோநம
அரிய தவரூப யோகா நமோநம ஜகதீசா
உபநி டதமோது மாதீ நமோநம
பரம ருளும் ஞான ஜோதீ நமோநம
உலகு புகழ்தேவ தேவா நமோநம பதமோதி
உருகு மடியார்கள் பாகா நமோநம
விரத முடையோர்கள் நேயா நமோநம
உருவ ருவுமான ரூபா நமோநம அருள்தாராய்
இபமு கவனின் நேரான சோதர
பழனி வடிவேல னோடே யளாவிடும்
இமய மயிலான மாதேவி யாள் தரு மிளையோனே
இகப ரமுமேழை யாதா ரம்நீயென
மருவு மடியாரை யேமே வியேயவர்
இருநி லமும் நாளு மேலான வாழ்வுற—
அருள்வோனே.

# தீபாராதனை

ராகம் : புன்னாகவராளி ]                [ தாளம் : கண்டகதி ஆதி

சேவித்து இங்கெங்கள் அய்யப்ப ஸ்வாமிக்குத்
தீப ஹாரத்தியே காட்டிடுவோம்
க்ஷேமங்கள் பெற்றிங்கு சீலத்துடன் வாழ
தீப ஹாரத்தியே காட்டிடுவோம்
ஜோதிப் பிழம்பெனும் மேனிகொண் டானுக்கு
ஜோதிஹா ரத்தியே காட்டிடுவோம்
சோலை யுடன்நாங்கள் பூமியில் வாழவே
ஜோதிஹா ரத்தியே காட்டிடு வாம்
ஒருகைமு கன்தம்பி அய்யப்ப ஸ்வாமிக்கு
ஒருமுக ஹாரத்தி காட்டிடுவோம்
ஓங்கார ரூபனாம் அய்யப்ப ஸ்வாமிக்கு
ஒருமுக ஹாரத்தி காட்டிடுவோம்
இருவினை தீர்த்திடும் எங்கள் சுவாமிக்கு
இருமுக ஆரத்தி காட்டிடுவோம்
ஈடற்ற தெய்வமாம் அய்யப்ப சுவாமிக்கு
இருமுக ஆரததி காட்டிடுவோம்
மும்மலம் தீர்த்திடும் முருகவேள் தம்பிக்கு
மும்முக ஆரத்தி காட்டிடுவோம்
முழுமுதற் கடவுளாம் அய்யப்ப சுவாமிக்கு
மும்முக ஆரத்தி காட்டிடுவோம்
சபரிம லைவாழும் தர்மசாஸ்தாவுக்கு
சதுர்முக ஆரததி காட்டிடுவோம்
சகலசு கந்தரும் எங்கள் சுவாமிக்கு
சதுர்முக ஆரத்தி காட்டிடுவோம்
ஆண்டவ னுமெங்கள் அய்யப்ப சுவாமிக்கு
ஐம்முக ஆரத்தி காட்டிடுவோம்
ஆபத்து நீங்கவும் பாபங்கள் தீரவும்
ஐம்முக ஆரத்தி காட்டிடுவோம்
பூரணை நாதர்க்குப் புட்கலை நாதர்க்கு
பூரண ஆரத்தி காட்டிடுவோம்

கலியுக வரதனும் அய்யப்ப சுவாமிக்கு
கற்பூர ஆரத்தி காட்டிடுவோம்
கனவிலும் நனவிலும் காத்தெமை ரட்சிக்கக்
கற்பூர ஆரத்தி காட்டிடுவோம்
மன்மத ரூபனும் மணிகண்ட னுக்கிங்கு
மங்கள ஆரத்தி காட்டிடுவோம்
வல்வினை தீரவும் வெம்பிணி தீரவும்
மங்கள ஆரத்தி காட்டிடுவோம்.

போற்றி

சபரிமா மலையில் வாழும்
தருமசாஸ்தாவே போற்றி
அபயமே அடியார்க் கீயும்
அருணிறைத் தேவா போற்றி
இபமுக கணநா தர்க்கும்
இளையசோ தரனே போற்றி
சபதப மிகுத்தோர் ஏத்துஞ்
சாமியே போற்றி போற்றி.
வண் புலி வாகனு போற்றி
மணிகண்ட தேவா போற்றி
கண் படு ரூபா போற்றி
கலியுக வரதா போற்றி
புண் படு நெஞ்சை யாற்றிப்
புகழ்தரு புனிதா போற்றி
நண் பனுய்க் குருவா யாகி
நல்வழித் துணையே போற்றி.

வாழ்த்து

அன்பரைக் காக்கு மெங்கள் அய்யனய் யப்பன் வாழ்க
துன்பமே துடைக்கு மீசன் தூயமெய் யப்பன் வாழ்க
நம்பின பேரைக் காத்து நலந்தரு நாதன் வாழ்க
சம்புவும் மாலும் தந்த சபரிமா மலையோன் வாழ்க.
சங்கடம் யாவுந் தீர்க்கும் சபரிமா மலையோன் வாழ்க
திங்கள்மா முகத்தோன் வாழ்க தேவர்கள் தேவன் வாழ்க
எங்குறை தீர்க்க வல்ல எழிலுடை யீசன் வாழ்க
மங்களம் யாவும் யீயும் மணிகண்டன் வாழ்க வாழ்க.

# VI

# கலைமகள் துதி

### வெண்பா

*கண்டார் வியக்கக் கவிபாட என்றுவில்*
*வெண்டா மரையாளே வீற்றிருப்பாய்—கொண்டாடிப்*
*போற்றினேன் நின்னடியைப் பூத்தூவி யென்னெஞ்சம்*
*ஆற்றுவாய் ஞான மளித்து.*
*துங்கக் கமலமதிற் றூயக் கலையுடுத்தித்*
*தங்கத் திருமேனி தாங்கியதோர்—மங்கலையாங்*
*கோலக் கலைமகளே கும்பிட் டுனையடைந்தேன்*
*சாலக் கலைஞானம் தா.*
*பண்கணிறை வீணையொன்று பாங்குடனே கைப்பிடித்து*
*ஒண்கலைகள் யாவுமருள் உத்தமியே—கண்குளிர*
*இந்நாளி லெவ்வறிவும் யானடைய வந்தருளி*
*எந்நாளு மென்னோ டிரு.*
*வெண்கமலத் தாரணிந்து வெண்கலையுந் தானுடுத்தி*
*வெண்கமலப் பூவினிடை வீற்றிருப்பாள்—இங்கெனையும்*
*ஆட்கொண் டருங்கவிகள் ஆக்க வைத்துச் செங்கமலத்*
*தாட்கொண் டறிவளிக்குந் தாய்.*

தோடி ] "அல்லி விழியாலும" மெட்டு [ ஆதி

*வெண்கமல மீது ஒணகலைக ளோடு*
*விண்கதிர்கள் கோடி* எனவேகி
*வெண்படிக மாலை வெணபணிக ளோடு*
*வெண்டுகிலு லாவு* மழகோடே
*பண்புடனெ லோக முயந்துகதி யேற*
*பண்புடைய நூல்கள்* நிறையேடும்
*பண்கணிறை வீணை கொண்டொளிரும் வாணி*
*பங்கயனை மேவு* கலைமாதே ;
*கண்களென வாகு தந்திமுக னோடு*
*கந்தர்தமை யீயு* முமையாளை,

கண்களிடை காணு மொண்சுடர தாக
கஞ்சிநகர் வாழும் — எமதாளை
தண்தமிழி னேயம் அந்தவடி மோனை
சந்தமிலை யோடு — கவிபாட
தஞ்சமெனு மேழை பங்கிலுற வாகி
சந்ததமு மேவி — அருள்வாயே

ஹம்ஸத்வானி ] [ கண்டத்ரிபுடை

அன்னமதி லேறிவரும் — எழில்சாரும்
அம்மைகலை வாணியெனு — மபிராமி ;
மின்னலெனு மேனியுட — னொயிலாக
வெண்ணிறச ரோருகமு — முறைவாழ்வே ;
தன்னையறி ஞானமொடு — கலையாவும்
தன்மையுட னீயுமொரு — கலைமாதே
இன்னிசைகள் பாடியுனை — நிதமோதும்
என்னையினி தாளமுனம் — வரவேணும்.

அட்டாணா ] [ ஆதி

ஆய கலைகளறு பத்தி நாலுமினி — தருள்தாயே
ஆய னரியரனு மெத்த நாடியடி — புகழ்தாயே
தூய கலைதனையு டுத்தி மார்பிலொளி — மிக வீசும்
சோபை தருமணிகள் முத்து மாலைதிக — ழபிராமி
மாய விருள்தனைய கற்றி ஞானமருள் — கலைமாதே ;
வாணி யெனவுலகு மெத்த வேபுகழு — மொருமாதே ;
தாயு மெனமருவி பக்தி யோடுபுகழ் — அடியேனும்
ஞால மதிலரிய முக்தி ஞானமுற — வரவேணும்.

ஸஹானா ] [ சாபு

அவமாயை கொண்டுமினி — புவிமீதே
அறிவேது மின்றிநித — முழலாதே
தவமான நெஞ்சமுட — னடியேனுன்
சரணார விந்தமதின் — எழில்நாடி
கவிபாடி யுன்றனருள் — மிகவாகி
கலைஞான மும்பெறவும் — வரவேணும் ;
கவிவாணர் பங்கிலுறை — அபிராமி
கலைவாணி என்றுலகில் — வருமாதே.

மோகனம் ] [ ஆதி

வருக வருக வருக வருக
கலைக ளருளும் — வாணியே ;
வருக வருக கமல மலரில்
அமரு மரிய — ராணியே ;
வருக வருக கரம தனிலு
மொளிர அரிய — வீணையே
வருக வரமு மருள எனது
முனமும் வருக — வேணுமே ;
கருத வெனையு முலகி லரிய
கவியி லொருவ — னாகவே
கலைக ளறிவு மரிய பரம
கதியி னறிவு — மீயுமாய் ;
அரிய அரனு மயனு மரியு
மமரர் பலரு — மடிபேணும்
அமலை நிமலை விமலை யெனவும்
அவனி புகழும் — தேவியே.

தோடி ] [ சாபு

தூய வெண்கம லாச னந்தனில்
தூய வெண்கலை — யோடுமே
தூய வெண்பணி மார்பி லங்கிய
சோபை மிஞ்சிடும் — வாணியே ;
ஆய வொண்கலை யாவு மிங்கருள்
ஆதி மங்கள — ரூபியே
ஆக மம்புகழ் ஞான சுந்தரி
யான பங்கஜ — லோசனீ ;
தீய வுங்கெட ஞான மும்பெற
தேவி நின்புகழ் — பாடியே
தீப மங்கள ஜோதி கொண்டொரு
சேவை தந்துனை — நாடினேன் ;
சேயெ னுஞ்சிறி யேனை வந்தொரு
தாயி னன்பொடு — பேணியே
சீல மும்பல ஞான மும்புகழ்
சேர வுந்தயை — கூருவாய் :

கமாஸ் ] [ சாபு

வீணையொடு வெண்கமல — மலர்மீதே
மேவியரு ளும்பொழியு — மெனதாயே ;
காணவிரு கண்கவரு — மொளிவீசும்
காமனையு மிஞ்சுமெழில் — வடிவோடே
வாணியென வந்தடிய — ருளமேவி
வாரிஜப தங்கள்தரு — கலைமாதே ;
பேணுமெனை நின்கருணை — யருள்கூடும்
பேரறிவு பொங்கிடவும் — வரவேணும்.

ஆரபி ] [ ஆதி

வெண்கமலம் வாழும் வாணீ நமோநம
பங்கயனை மேவும் ராணீ நமோநம
விஞ்சைவடி வான தேவீ நமோநம ஒளிவீசும்
வெண்படிக மாலை சூடீ நமோநம
ஒண்கலைக ளீயு மாதீ நமோநம
மிஞ்சுமெழில் வீசு மாயே நமோநம அருளீயும்
செங்கமல பாத சீலீ நமோநம
துங்கவபி ராம ரூபீ நமோநம
செஞ்சொன்மறை நாலு மானாய் நமோநம தவமானோர்
சிந்தையதில் வாழு ஜோதீ நமோநம
அந்தபர ஞான ரூபி நமோநம
செஞ்சொலடியார்கள வாழ்வே நமோநம கரமீதே
தங்குமெழில் வீணை நாளு விநோதசு
ரங்கள்தரு நாத கீதா விலாசமு
மங்களமு மீயு மாதா நமோநம பலகாலும்
சந்தமொடு பாடு பாவா ணர்நாவினில்
நின்றுவிளை யாடு தேவீ நமோநம
சந்ததமு மேழை சீரா கவாழவுன் அருள்தாராய் ;
திங்கள்முக சார தாதே வியெயுன
தன்புநிறை பார்வை சீரா கவேதிகழ்
செம்பொனெனு மேனி யோடே யளாவிய துகிலோடே
திங்கணுதல் மீது திபோ லவேதிகழ்
குங்குமமு மார்பி லேயா டுமாலைகள்
செங்கமல மாமு ருதாரபாதமு மறவேனே.

தன்யாசி ] பல்லவி [ ஆதி

தேவி சரஸ்வதி திவ்ய கலாரூபி
திருவருள் தந்தருள்வாய்

அநுபல்லவி

ஆவிக்குள் ஆவியாகி அகிலகலைகளாகி
அண்டசராசரமாய் அறிவின் அறிவுமான தேவி

சரணம்

நாடு மடியவர்கள் நாவினிற் கோயில்கொண்டாய்
பாடு மடியவர்கள் பண்ணி லிசைந்து நின்றாய்
தேடு மடியவர்கள் சித்தத் தமர்ந்து நின்றாய்
ஏடு மணிமாலையும் என்றுங் கரத்திற்கொண்ட தேவி
பக்தருக் காகவேண்டிப் பாரதி யாகிநின்றாய்
சித்தருக் காகவேண்டிச் சித்ரூபி யாகிநின்றாய்
சக்தியு பாஸகர்க்குச் சாரதை யாகிநின்றாய்
முக்தருக் காகமோன குருவாகி நின்றருளும் தேவி

போற்றி

போற்றியிப் புவன மெல்லாம்
புகழ்ந்திடும் வாணி போற்றி
போற்றிநற் கலைகள் யாவும்
புவியினி லீவாள் போற்றி
சாற்றிய கவிஞர் நாவில்
தங்கிடுந் தேவி போற்றி
போற்றிய வேத மோதும்
புனிதபா ரதியே போற்றி

வாழ்தது

பூவடி போற்று வார்க்குப்
பூரண ஞான மீயும்
தேவரும் போற்றுஞ் சீர்கொள்
தேவியாம் வாணி வாழ்க;
காவிய ஞான மியுங்
கலைமகள் வாழ்க என்றும்
பாவலர் நாவில் வாழும்
பாரதி வாழ்க வாழ்க.

# VII

# இலக்குமி துதி

### வெண்பா

திருப்பாற் கடல்வந்த சீதேவி யேயுன்
னருட்பார்வை யொன்றுண்டே லன்றே—பொருட்பேறுஞ்
சீருண்டாம் வாக்குண்டாம் தெய்வ வடிவுண்டாம்
பேருண்டாம் பின்னுண்டாம் வீடு.
செந்தா மரைமலரிற் சீரா யுதித்திட்ட
செந்தா மரைமுகத்துச் சீமாட்டி—எந்தாயே
வந்தருள்வா யிங்கென் வறுமையெலாந் தீர்த்தருளித்
தந்தருள்வா யின்றே தனம்.

## வரலக்ஷ்மி அஷ்டகம்

பங்கஜ வாஸினி பங்கஜ லோசனி பங்கஜ பாணியளே
சங்கடம் நீங்கிட சகலசௌ பாக்கியந் தந்திட வந்திடுவாய்
பொங்கிய அன்புடன் பொன்னடி போற்றிடும் புண்ணியர்க்
கருள்பவளே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜயவர லக்ஷ்மி ஸ்ரீதேவி.

2

பொங்கிட மங்களம் எங்கணும் பொங்கிட பூரணமாய்ப்
பொழிவாள்
எங்குறை நீங்கிட எட்டுவி தத்தனம் எழிலுட னீந்திடுவாள்
மங்கள தாயினி மாதவ மோஹினி மன்மத ரூபிணியே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜயவர லக்ஷ்மி ஸ்ரீதேவி.

3

பூரண மதியெனும் பொனமலா முகமதிற் புன்னகை பூத்
தொளிர்வாள்
பாரினில் எளியனைப் பவிசுடன் வாழ்ந்திடப் பலவித நிதி
தருவாள்
நாரணன் மார்புறை நங்கையெ னும்பல நலமருள் நாரணியே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜயவர லக்ஷ்மி ஸ்ரீதேவி.

4

மாதவன் மார்பினில் வரமருள் எழிலுடன் வளர்திரு மலர் மகளே
மேதினி போற்றிடும் மேன்மையெ லாமுற விரைவினில் வர மருள்வாய்
பூதல மானிடர் வானவர் யாவரும் போற்றிடும் பொன் மகளே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜய வரலக்ஷ்மி ஸ்ரீதேவி.

5

தேவர்கள் வேதனை தீர்த்தவர் செயமுறச் செய்திடுஞ் சிதேவி
தீவினை தீரவும் மாமிடி தீரவும் செல்வ மெலாம் தருவாய்
பூவுறை மகளே புண்ணிய ளேயெனப் புவிபுகழ் பூரணியே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜய வரலக்ஷ்மி ஸ்ரீதேவி.

6

சீதரன் மார்பினில் செம்மக ளாய்வெகு சீருடன் வாழ்பவளே
மாதவர் மகிழ்வுற வந்தவர்க் கிங்கித மங்கள வாழ்வருள்வாய்
வேதமெ லாம்புகழ் மின்னிய மேனிகொள் விண்மகள் பொன்மகளே
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜய வரலக்ஷ்மி ஸ்ரீதேவி.

7

பொன்மக ளேயெனப் போற்றிடு வோர்க்கருள் புரிந்திடும் புண்ணியளே
சன்மமும் கன்மமும் சாலவொ ழிந்திடச் சற்கதி தந்தருள்வாய்
பொன்னுட னும்பெரும் புகழுட னும்புவி போற்றிடும் வாழ்வருள்வாய்
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜய வரலக்ஷ்மி ஸ்ரீதேவி.

8

ஜயஜய ஜயஜய லக்ஷ்மி தேவி ஜயஜய ஸ்ரீதேவி
ஜயஜய ஜயகஜ லக்ஷ்மி தேவி ஜயஜய ஸ்ரீதேவி
ஜயஜய ஜயதன லக்ஷ்மி தேவி ஜயஜய ஸ்ரீதேவி
ஜயஜய ஜயசௌ பாக்கிய லக்ஷ்மி ஜயவர லக்ஷ்மி ஸ்ரீதேவி.

மங்கைமா லக்ஷ்மியே யாதாம கேச்வரியே
மதுசூதன் மார்பிலுறையும்
மாண்புடைத் தேவியே கருணாக டாக்ஷியே
மாமலரில் வாழுமணி யே

மங்களமே யெந்நாளும் மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும்
வகுத்தருளி யாளுமமை யே
மாலோனும் பங்கயனு மீசனும் புகழ்ந்தேத்து
மகிமைமிகு பெரியபொரு ளே

சிங்கமிசை சீர்கொண்ட சிங்கார ரூபியாம்
சிவகாம சுந்தரியுடன்
சீராக யிடமேவு சிந்தாம ணித்தேவி
சீதேவி மாதேவி யே

எங்குநிறை யீசையாங் கஞ்சிகா மாக்ஷியின்
ஈடற்ற புகழ்பாடி யான்
ஈடேறு மாறெனக் கினிமை மிகுந் தமிழருளி
என்றுமெனை மேவியரு ளே.

கரகரப்ரியா ] [ சாபு

தாமரையின் வாசமலர் மீதிலொயி லாகவிரு
தாளிணைக ளானமல — ருடனேகி
சாலவெழி லானமத னேவடிவு காணவெகு
நாணமுறு மேனியொடு — திருமார்பில்
தூமலர்கள் சேருமொரு மாலையொடு மாமணிகள்
ஜோதிதரு சீரணிகள் — பலவோடே
சோபையுட னேவொளிரு மோர்கரமும் வாழுவர
மீயுமொரு சீர்கரமு — மெழிலான

சோமனொரு பூரணம தாகவொளி வீசுமொரு
தூய்மைதரு சீர்முகமும் — அடியார்கள்
சோகமற வேயுலவு மோர்முறுவ லோடு திகழ்
சோபைதரு பார்வையுடன் — அடியேன்முன்

மாமிடிகள் தீரவிடர் கோடிபகை தீரவுமென்
மாவினைகள் தீரவெகு — நிதிசேரும்
மாநிலமெ லாமொளிரும் ஞானமொடு சீலமுடன்
வாகைமிகு வாழ்வுதர—வரவேணும்.

மோகனம் ] 4 [ ஆதி

வருக வருக நிதிகள் பலவு மருளு மரிய—மலர்மாதே
வருக நளின வதன மதனி லுலவு முறுவ—லெழிலோடே
உருகி நிதமு மடிகள் புகழு மடிமை யுலகி—லுயர்வாக
பொருளு மருளி பவிசு மருளி புகழு மருள—வரவேணும் ;

கரிய வரத னுளமு மருவி யருளு மரிய—திருமாதே
கருது மடியர் மிடியு மகல கடுகி யருளு—மொருமாதே
அரனு மயனு மமரர் பலரு மடிகள் புகழ—மெழிலாளே
அமலை நிமலை கமலை விமலை எனவு முலகில்—வருமாதே.

கமாஸ்] 5 [கண்ட திரிபுடை

பாரிலொரு பாவி யென்ற—மிடியாலே
பாழ்நரக வாழ்வ டைந்து—நலியாதே
பூரணம தான வுன்ற—னருளாலே
பூவுலகி லேநி றைந்த—நிதிதாராய் ;

நாரணின் மார்ப டைந்து—க்ருபையாகி
நாடிவரு வோரி டைஞ்சல்—களைமாதே
ஆரமுத வாரி தந்த—திருமாதே
ஆயனர ஞர்பு கழ்ந்த—பெருவாழ்வே.

பூவி லென்றும் வாழு மங்கை
மோக மங்கை யோக மங்கை
போக மங்கை ஏக மங்கை—எனநாளும்

பூவில் வந்த வேத னும்பு
ராரி சங்க பாணி யுஞ்ச
தாப தங்கள் பேணும் அந்தம்—உளதாயே

தேவ ரொன்று கூடி யன்று
மாயை மைந்த ரோடு நின்று
சீர சிந்து வேக டைந்த—வுடனே தான்

சேம மெங்கு மேகி றைந்து
லோக மென்றும் வாழ வென்று
சீர்மி குந்த மேனி கொண்டு—வருதாயே ;

கூவி யெங்க ளாயி பொன்க
ளீயு மங்க ளாயி யென்று
கூடி நின்று பாடு மன்பர்—குறைதீர

கோரு கின்ற தீயு மம்பை
மால்ம கிழ்ந்து மார்ப ணிந்த
கோல மங்கை சீல மங்கை—எனுமாயே ;

தாவி யெங்கு மேப டர்ந்து
வாழ கொம்பு மேது மின்றி
சால நொந்து வாடுகின்ற—கொடிபோலே

தாளை யென்றும் நாடு மென்றன்
நோய்க ளைந்து சீர்கள் தந்து
பார்பு கழ்ந்த வாழ்வு தந்து—அருள்வாயே.

போற்றி

பங்கஜ மலரில் வாழும் பாங்குடைத் தேவி போற்றி
எங்குறை தீர்க்க வல்ல எழிலுடைத் தருவே போற்றி
மங்கள மனைத்து மீயும் மாண்புடைத் தாயே போற்றி
பொங்கிய சீர்க ளீயும் பூரணி போற்றி போற்றி.

# கனகதாரா ஸ்தோத்திர மாலை

(ஆதிசங்கரர் அருளியதின மொழிபெயர்ப்பு)

அலர்அணி தமாலம் நோக்கி
அண்டிடும் வண்டினம் போன்று
பொலிவொடு மாலின் அங்கம்
புளகித மாகச் சார்ந்து
தலைமதிற் பலவகை யாய
தனமெலாம் கூட்டி வைக்கும்
மலர் மகள் கடைக்கண் நோக்கு
மங்களம் எனக்கிங் காக்க. 1

வண்டின வரிசை நீல
மலர்மிசை வந்துபோ யாங்கு
சண்டிடக் காதல் கொண்டும்
காணவு மிலச்சை பூண்டும்
விண்டுவின் மலர்முக மீதோடி
விருப்பொடு மீண்டு மீண்டு
கண்டிடும் கமலாள் நோக்கு
கனமிகு தனமெனக் காக்க.

இமைமலிவா விரகால் நோக்குப்
இறைவனைப் பரிவுடன் கண்டு
அமுதனை யந்தமு மூடி
அனங்கனின் கலையால் வாட்டும்
இமைத்தலு மின்றிப் பாதி
இறுகிய கருவிழி கொண்ட
கமலையின் விழிமலர்க் கலைகள்
கனமிகு தனமெனக் காக்க. 3

அரிதிரு மார்பினி லாடும்
கௌஸ்துப மணியின் மீதே
மருவியோர் இந்திர நீல
மணிவடம் திகழ்ந்த தேபோல்
விரகுடைத் திருமா லுககும்
வேண்டுவ தனைத்தும் ஈயும்
திருமகள் கடைக்கண நோக்கு
சீரெலாம் எனக்கிங் காக்க. 4

நீர்மிகும் கார்முகில் அன்ன
நெடியமால் மார்பினி லார்க்கும்
சீர்மிகும் மின்னல் போன்ற
திருவடி வுடைய மாது
பார்புகழ் மூர்த்தியு மாகிப்
பார்க்கெலாம தாயாம் நீயே
சீர்பல தந்தெனைக் காப்பாய
தேவியே பார்க்கவித் தாயே. 5

செம்மகள கடைக்கண் நோககால்
சீரகொளு மதுகு தன்பால்
மன்மதன் முதலிட மதனை
வகிததனள் திரமாய் என்றும்
அம்மகத துவங்கொள் காதல்
அரைக்கண் கடாக்ஷ நோக்கு
இம்மையே என்மேல் வீழ்ந்து
என்னையுங் காத்திடல் வேண்டும். 6

இந்திர பதமாய் சீர்கள்
இங்குமிப் பொழுதே யீந்து
அந்தமால் தனக்கும் அன்பால்
அதிகவா னந்தமு மீயும்
இந்திர நீலப் போதின்
இடைக்குநேர் சீர்கொள் தேவி
இந்திரை அரைக்கண் நோக்கு
என்மீ தொருகணம் நிற்க. 7

இட்டியாற் சுவர்க்கஞ் சேர
இட்டமே இல்லா தார்க்கும்
திட்டியாற் சுவர்க்கச் சீரை
எளிதினில் ஈய வல்ல
மட்டிலா மகிழ்ச்சி யோடு
மாலொடு குலவுங் கமலாள்
திட்டியென் இட்ட மெல்லாம்
கிட்டிடச் செய்ய வேணும். 8

தரித்திரம் மிகுத்துத் துஞ்சும்
சாதகக் குஞ்செனைக் காத்து

எரித்திடு பாபமிங் கெல்லாம்
எட்டியே ஓடவைத் திட்டுக்
கருத்தொடு கருணையே காற்றாய்க்
கமலையின் கடாக்ஷ மேகம்
பெருத்தொரு வெள்ளம தாகப்
பெய்கவே கனக மழையே. 9

ஆக்கலிற் சரஸ்வதி யாகி
அளித்தலில் இலக்குமி யாகி
நீக்கலில் துர்க்கையு மாகி
நிமலையாம் பார்வதி யாகி
ஆக்கிய மூவுல கிற்கும்
அப்பனும் குருவிணை மேவும்
பாக்கிய வதியாம் தேவி
பாதமே பணிந்தேன் நானே. 10

சுருதியின கருமஞ் சார்ந்த
சுபபலம் அருளவாள் சரணம்;
இரதியாம் தேவி யாகும்
எழிற்குணக் குன்றே சரணம்;
அருட்பெரும் சக்தியே யாகும்
அற்புய முறைவாள் சரணம்;
புருஷோத் தமன்சதி யான
பூரண நிதியே சரணம் 11

பங்கய முகத்தா ளான
பார்க்கவித் தாயே சரணம்;
துங்கமாம் பாற்கடல் தன்னில்
தோன்றிய தேவீ சரணம்;
திங்களோ டமிர்தத் தோடும்
சீருடன உதித்தாய் சரணம்;
மங்கள நாரணன் மார்பில்
மகிழ்ந்துறைத் தேவீ சரணம். 12

புண்டரீ கப்பொற் பீடம்
பொலிந்தொளிர் தாயே சரணம்;
மண்டல மனைத்தும் ஆளும்
மாண்புடைத தேவீ சரணம்;

அண்டருக் கபயந் தந்து
ஆண்டருளிசைமே சரணம்;
கொண்டசா ரங்கமோ டார்க்கும்
கொண்டலின் சதியே சரணம். 13

பிருகுவின் புத்திரி யான
பீடுடைத் தேவி சரணம்,
அரவணைத் துயிலும் மாலோ
டமர்ந்திடு தாயே சரணம்;
தருவெனக் காலந் தன்னில்
தங்கிடும் தேவி சரணம்;
அருமையாம் தாமோ தரனின்
அன்புடைச் சதியே சரணம்; 14

அந்தமுள் கமலக் கண்ணன
அன்புடை யாளே சரணம்,
இந்தமா வுலகுக் கெல்லாம்
இறைவியாம் தேவி சரணம்;
அந்தமாய் அமரர் எல்லாம
அடிபுகழ் தாயே சரணம்;
நந்தனின் மகனும் கண்ணன்
நாயகித் தேவி சரணம. 15

இந்திரி யக்களிப் பூட்டி
எவ்வகை நிந்தனுமீந்து
அந்தமாய் அரசுங் கொடுத்து
அல்லல் பலவும் தீர்க்கும்
செந்தா மறைக்கண் தேவீ
திருவளர் நின்சரண் இட்ட
வந்தனம் என்றும் எனை
வாழ்கவே வைத்திடல் வேண்டும். 16

இங்குள அடியா ரெல்லாம்
எந்தவோர் கடாக்ஷந் தன்னால்
மங்களம் யாவும் பெறறு
மகிழ்வுடன் வாழ்கின் றாரோ
இங்குமத் திருமால் உள்ளம்
இசையவாழ் தேவி நின்னை

துங்கவென் மனதுடல் வாக்கால்
தொழுதுமே பஜிக்கின்றேனே. 17

கஞ்சமாம் மலர்மீதுள்ளாள்
கஞ்சமாம் மலர்கைக்கொண்டாள்
மிஞ்சிய வெண்ணிறப் பட்டும்
வெண்மலர் மாலையும் பூண்டாள்
நெஞ்சினில் தோன்றுவ தறிவாள்
நெடியமால் சதியாம் தேவீ
தஞ்சமென் றடிபணி என்முன்
தரிசனம் தந்தருள் வாயே. 18

அமலமாம் கங்கையின் நீரை
அரும்பொற் குடங்களில் மொண்டு
நிமலமாய் திக்கஜ மெல்லாம்
நீராட்டு மேனி கொண்ட
விமலையாம் லோக நாதன்
விஷ்ணுவின் பத்தினியான
கமலையாம் அலைமகள் தனைக்
காலையில் வந்தித் தேனே. 19

மருவிய கமலக் கண்ணன்
மகிழ்சதி கமலை யேநின்
கருணையாம் அலைகள் பாயும்
கவின்பெறு கடைக்கண் நோக்கால்
அருள்பெறப் பாத்திரன் சுத்தன்
அகிஞ்சனர் தலைவன் என்னைக்
கருணைகூர் விழியால் நோக்கி
கடிதெனை இரட்சித் தருளே. 20

யாவர்இத் துதிகளால் நித்தம்
வேதநாயகியாம் ரமையை
மூவுல காளும் தாயை
தோத்திரம் செயதிடு வாரோ
பூவுல கத்தில் அன்னோர்
புண்ணிய குணத்தோ ராகி
மாவள பாக்கியம் பெற்று
மாண்புளோர் மதிப்புறு வாரே. 21

# VIII

# ஸ்ரீ அருணகிரிநாதர் துதி

சங்கராபரணம் ] [ ஆதி கண்டகதி

அருணகிரி யப்பனே அரியதமிழ் வித்தனே
அறுமுகவர் சித்தனே அன்பினாலே
அருணகிரி யப்பர்வாழ அரியதிரு சித்தர்வாழ்
அரியதொரர்த லத்திலே வந்தவேலர்
அருளமுத மைத்துமே அடியர்கள்சி றக்கவே
அருமறைக ளுக்குநேர் மந்த்ரமான
அரியபுக ழைச்சொலீ ரெனவுமைவி தித்தபோ
தருள்மடைதி றக்கவே சந்தமோடே
திருவருளமி குந்தபா வருளொடுசி கழ்த்தியே
சிவபதவி பெற்றவோர் தம்பிரானே;
திணையளவு கற்றிலே னுனதருள்சி றக்கவே
சிவகுருவ தொக்கவே வந்துநாயேன்
கருணையொடு கச்சிவாழ் திருவொடுக லைச்சிசூழ்
கமலவத னத்திமே லந்தமோடே
களிகொடுது திக்கவே அரியதமிழ் சிதறியே
கசிவொடுசெ னக்குமே தந்திடாயோ.

# IX

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் துதி

இந்துஸ்தான காபி ] [ ஆதி

காமகோடி பீடம் வாழு மென்குரோ ஜகத்குரோ,
காம தாப லோப மேது மின்றிவாழ் சிவக்குரோ,
ஸோம நாதர் பூஜை யேகொள் சந்த்ரசே கரப்ரபோ,
ஜோதி யான மேனி யோடி லங்குமா குணப்ரபோ,
ஓம தாதி யான வேத அந்தஞா னவித்தகா
ஊர்கள் தோறு மேகி ஞான செஞ்சொலோ
துமெய்த்தவா;
மாம யூரர் தாய தான கஞ்சிவா ழுசக்திமேல்
மாசிலாது பாட ஏழை பங்கிலே சிறக்கவே.

## இரண்டாம் பாகம்

# காமாக்ஷி திருப்புகழ்—வரவு

## I

நாட்டை ] "முத்தைத்தரு!' மெட்டு [ த்ரிபுடை

*பக்தர்க்கென கச்சிப் பதியினி*
*லுற்றுத்திகழ் சக்திப் பயிரவி*
*பக்ஷத்துட னப்பர்க் கிடமதி* லுறைதாயே

*பச்சைப்புய லச்சத் தொடுமல*
*ரிட்டுத்தின மர்ச்சித் திடுமிரு*
*பட்டுப்பதம் வைத்துத தமியனை* அருளோடே

*பத்தித்துறை யிட்டுத் தவநெறி*
*மிக்குத்திகழ் சித்தத் தொடுபல*
*பக்கத்தினு மெச்சப்படுமுன* தடியார்கள்

*பக்கத்துணை பெற்றுத் தினமுனை*
*மெத்தப்புகழ் விதத்துக் கதிபெற*
*பக்ஷத்தொடு ரக்ஷித் தருளவெ* வரவேணும்;

*எத்திக்கினு முற்றப் பொருளினும்*
*எப்பற்றினு மெச்சித் தருணிலும்*
*இச்சித்துறை முச்சக் தியுமென* வருதாயே

*இச்சித்தொரு பட்டர்ப் பிழைகரு*
*சொற்சிக்கலி லுற்றுத தவிதினம்*
*எப்பக்கலு மற்றிட் டவிருளும்* நிலவாக

*மெத்தக்கசி வுற்றுத் தனதொரு*
*சக்ரக்குழை யிட்டுப் புவியிடை*
*மெதகத்திகழ் பெற்றத தலமுறை* அபிராமி

*வெற்புக்களி லுற்றக் குகனுட*
*னத்தித்தலை பெற்றப் புதல்வனை*
*மெச்சித்தல முய்த்துக் கதிபெற* வருள்தாயே.

2

பைரவி ] "கரியகுழல சரியமுகம" என்ற மெட்டு [ சண்டசாபு

உததியிடை துயிலுமொரு கோபால ராயனொடு
மலரினிடை வளருமொரு நால்வேத மாமுகனும்
உடல்குறுகி யநுதினமு மாமுது மேதுதிசெ யபிராமி

உலகமதை மயிலின்மிசை யேயேறி சூழுமொரு
முருகனொடு கரிமுகனை லோகோப காரமென
உவகையுட னருளுமொரு மாதாம ஞேமணியு னருளாலே

உததிகளு மமரர்களு மீரேழு லோகமது
அதனிடையி லுயிர்கள்பல வேவாழ வேயருளும்
உமையமலை கவுரிசிவை காமாரி மாமதுரை யுறைவாளே

உளமுருகி யுனதுபுகழ நாடோறு மோதிடவும்
இருவினைமு மலமுமற மேலான வாழ்வுறவும்
உனதுபத மருளியெனை யீடேறு மாறருள வரவேணும்,

முதல்விபயி ரவிகுமரி மூலாள்ப ராபரையு
மயிலைதனி லொளிருமொரு தாயான பூரணியு
முதுமறையி னடிமுயு மாயான தேவனதயு மழகான

முடிமகுட மணிகளுட னேவாழு நாரணியும்
அடியருள மதைமருவி யேவாழு மோகினியு
முடியில்மதி யொளிருமொரு மாதேவர் பாகமுறை
மலைமாதும்

சிதறுமன முடையவர்கள் காணுத ஓர்பொருளு
மமதைமிக வுடையரிட மேசாத சீருடனெ
திகழ்வனிதை திரிபுரையு மாயாகி வாழுமொரு சிவகாமி

திருவடியர் சுகமுறவெ சிதேவி வாணிவெகு
அழகுடனே யிருபுறமு மேமேவு சீருடனெ
திருவடிவி னெழிலுடனெ சீர்காம கோடிதனி
லுறைதாயே.

3

ஆநந்தபைரவி ] "தொந்திசரிய" மெட்டு [ ஆதி

மங்கைவருக மயிலா புரியுறையும்
அம்பைவருக மதுரா புரிவளரும்
வஞ்சிவருக வரதே சிவைவருக மகதேவர்

மஞ்சுநிறவ னயனு ருமெதுதிசெய்
அம்பிகைதிரி புரையே அழகுடனே
வந்தகமல வதனீ வடிவுடைய திருமாயன்

தங்கைவருக தமியே னிதயமலர்
நின்று தினமு மருளே பொழியுமுமை
தந்திமுகனை முருகே சனையுமருள் இமராஜர்

தந்தகுமரி லலிதே எழுதரிய
அந்தமுடைய கலியா ணியெவருக
சந்த்ரவதனி பிறைசூ டியகவுரி சடைநாதர்

பங்கிலுறையு முமையே அடியருள
பங்கஜமது கரமே பவவினைகள்
பங்கமதுசெய் சுடரே யிகபரமு மருளியும்

பங்கஜவிரு சரணே பரமருட
னனபுமிகவெ ஒருகா சிநனிலுறை
பந்தவினைக ளறவே கனையுமொரு அரிதான

கங்கைவருக கமலே கனகநிற
நங்கைவருக நலமே பொழியுமிரு
கண்களுடைய உருவே கருணைநிறை யபிராமி

கஞ்சமெனுமுன் அடியே புகழடிமை
அந்தமுடைய பெருவாழ் வுறவருக
கஞ்சிநகரி லினிதே மருவிவளர் கமலாக்ஷி.

4

பரசு ] "நாடாய பிறபபுமுடி" மெட்டு [ ஆதி

பாயே மலர்க்கமல மாதே மனத்திலமர்
வாழ்வே வனப்புமிகு வனமாதே

மாலே மிகுத்தமன தாலே விதித்தஉரு
வாலே யவர்க்கருளு மபிராமி

வாயே மிகுத்தநுண லாயே சகத்தரவு
வாயே மதித்துலகி லழியாதே

பாலே பரத்தையருள் சூலே சிவர்க்குமிட
மானே மலர்ச்சரண மலைமாதே

தாயே ஜகத்தையருள் நாதே நதிச்சடையர்
சார்பே எனத்தினமு முனேயோதி

தாயே வுனக்கடிமை நாயேன் அரற்றுமிரு
தாளே யெனக்கருள வரவேணும்;

தீயே யெனத்திகழும் வேலே யெடுத்தஒரு
சேயே கொடுத்தருளு முமையாளே

சீதே விபக்கமுற நாதே விபக்கமுற
சீர்மே வுகச்சிதனி லுறைவாழ்வே.

5

பந்துவராளி ] "இயலிசையி லுசிதவஞ்சி" மெட்டு [ சாபு

அருணகிரி மதுர செஞ்சொற் கவியூடே
அருள்வடிவ தெனவெ வந்தக் குமரோனே

அருமையுட னருளு மின்பக் கலியாணி
அழகுடனே அடிமை முன்புற் றருள்வாயே;

கருணையுட னெனது சந்தக் கவிமீதே
கடலனைய அருள்நி ரம்பத் தருமாதே;

அருமையினி லருமை யென்றக் கலையோடே
அவனிதனி லரிய கஞ்சிப் பதிவாழ்வே.

6

"வங்கார மார்பிலணி" மெட்டு

இந்துஸ்தான தோடி ] [ கண்டசாபு

பந்தாகி யேயுலகி லாடல்பல வாடியுழல்
அந்தோயி வேழைபடும் வேதனைக ளாரறிவர்
பண்போடு தாயெனவென் மீதிலரு ளேபொழிய
இதுவேளை

பண்கூடு பாடலுட னேயுனது பாதமலர்
அன்போடு நாளுமிக வோதியிடு மாவடியர்
பங்காகி ஞானமுறு வாழ்வதனை யானடைய குருவாகி

வந்தேனி தோவுனது ஊழ்வினையு மூமலமும்
விண்டேனி தோவெனது பாதமலர் சேரெனஎன்
வண்காதி லோதியுப தேசமிட நாடியினி வரவேணும்;

வண்டான ரூபமொடு ஜோதியிடை யூடுருவி
 இன்றேய டாவுனது கோபமதை யேவிடென
 வந்தோது காமகலை ஞானபர யோகியென வடிவாகி

சிந்தூர மேனியுடை பார்வதிப ராபரியொர்
 கங்காள ரோடுநட மாடுமுமை காளிவெகு
 சிங்கார ரூபிசிவ காமியபி ராமிமினல் ஒளிவீசும்

சிந்நாத யோகியுள மேதினமு மேவியவர்
 கொண்டாடு ஜோதியென காமகலை யாகிவளர்
 சிங்காரி மாமதுரை மீதுறையு மோரரசி கலைவீசும்

இந்தோடு கூடுமுடி வாணுதலு மீன்விழியும்
 வன்காதி லோலை தமிழ் நாசிதனி லேமணியும்
 இன்பாக வேயிதழ்கள் மீதுவிளை யாடுநகையுடன்மேவி

இந்தாவ ராபயமும் வீடுதரு சீரடியும்
 ஏன்றேம ஹாகருணை யோடிலகு பார்புகழும்
 எந்தாயு மாகிமயி லாபுரியி லேயுறையும் உமையாளே.

7

கேதாரகௌளம ] "கொந்துவாரகுர" மெட்டு [ சாபு

கஞ்சி மாநகர் தனிலொரு சுடரென
 வந்த மேனியு மெழில்மிகு வடிவொடு
 கஞ்ச மாமலர் தனைநிகர் வதனமு மருள்பாயும்

கனக ளேமொழி யினிமையு மிளமையு
 மிந்து வாணுத லழகிய புருவமெ
 கண்டு மேயுளம் உருகவை முறுவலும் அழகோடே

மஞ்சு நேர்குழல் வளையொடு தடவிய
 அந்த மேமொடொளிர் நுதலிடு திலகமும்
 வஞ்சி போலிடை மெலிவுற வளரிரு தனமோடும்

மஞ்சள் மேனியி லொளியொடு தழுவிய
 செம்பொ ஞடையு மணிநிறை மகுடமும்
 வண்டு தேனிடை முழுகிய நறுமலர் தொடைமாலை

கொஞ்சு மார்பிடை ஒளிவிடு மிழைகளும்
 மிஞ்சு சீருடை மரகத மணிவகை
 கொண்டு சீருட னசைவுற முடியினில் ஒளிவீசும்

கொம்பு நீடிய யிளமதி யசைவுற
பஞ்சு போலிரு சரணக மலமிசை
கொஞ்சு மாமணி கலகல கலவெனு மெழிலோடே

அஞ்ச வேவரு யமபடர் சிதறிட
அஞ்சு பாணமு மினியதொர் சிலையுடன்
அங்கு சாதிகள் கரமிசை திகழ்வுற அடியேன்முன்

அஞ்சல் கூறிட அருளது பெருகிட
இன்ப வீடினை யெளிதினி லருளிட
அணைடி யேழையின் மனமது குளிரவும் வருவாயே.

8

"குமர குருபர முருக சரவண" மெட்டு

செஞ்சுருட்டி ] [ ஆதி

தனன தனதன தனன தனதன
தனன தனதன ..தனதன.

குமரி குணதரி முதல்வி பயிரவி
குகனை யருளிய உமைகாளி

குறைகள் சிறிதுமி லரனை மருவிய
கொடியி னிடையுள வயிராமி

கமல முகமதில் இனிமை யுடனொளிர்
கவலை யொழியிள நகையாளே

கடுகி யருளியென் வினைகள் பலவுமெ
கழிய நினைவுடன் வருவாயே ;

அமல மளதுடன உனது பதமதை
அரிய புகழுட னிசைபாடி

அலறு படியர்கள கொடிய வினைகளும்
அழிய விடவல மலைமாது

எமனு மெனதுயிர் கருதி யெதிர்வரின்
எளியன மருளற அவன்மீதே

இடிகொள் ஒலியொடு கறுவி இமையென
எனையு முனதடி இணைதாயே.

### "குகையில் நவநாதரும" மெட்டு

**செஞ்சுருட்டி ]** **[ சதுஶ்ர ஜம்பை**

*எழுதரிய ரூபமுஞ் சிவந்த*
*பவழநிகர் மேனியுந் தெளிந்த*
*எழில்வதன மோடிசைந்த இந்து நுதலோடும்*
*இணையுருவ மோடமைந் திரண்டு*
*செவிதனையெ நாடுகண் களுங்கல்*
*இலமுகனகப் நாசியின் றிலங்கி ஒளிவீசும்*
*எழிலுமொரு கோவையிலை கனிந்த*
*பழமனைய வாய்நிறைந் திலங்கும்*
*இளநகையு மேகமென் றகொண்டை அழகோடும்*
*இழைகள்மணி மாலையுஞ் சிவந்த*
*துகிலுமணி யாரமுந் தசைந்த*
*இருதனமும் நூலினுஞ் சுருங்கும இடையோடும்*
*அழகுடனெ பாசவங் குசம்பன்*
*மலர்கள்நிறை பாணமுங் கரும்பும்*
*அணிகரமு மோதிரங் களதங்கு விரலோடும்*
*அரைமதியெ சூடியன் புலி யாங்கும்*
*அடியிணையி லேசிலம் புகொஞ்ச*
*அடிமைமுன மோடியஞ் சலென்று வருவாயே ;*
*பழநிதனி லேசிறந் தரந்தர்*
*அவருடனெ வேழமும் பரந்த*
*பலவுலகு யாவையும் பயந்த உமையாளே*
*பதமடியர் பாடுகங் கைநங்கை*
*மதுரைநகர் வாழுமங் கையப்பை*
*பவவினைகள் சாடுகஞ் சிதங்கி யருள்தாயே.*

10

**தேசிக தோடி ]** **[ திஸ்ரஜம்பை சவுக்ககாலம்**

*பண்டைவினையின் விதியா லுலகதனில்*
*வந்துமனித வடிவா யழகுடனே*
*பஞ்சபுலனு மனமோ டிலகுநவ வழிகாயம்*

டணபுமிகுத முவியாய் அருமையொடு
வந்துமொளுமொ ளெனவே உடல்வளர
பஞ்சபுலனும் வெளியே திரியும்வகை தனைநாடி

கணடபொருளு மெனையே வடையவென
வெந்தவினையு முயல்வே னெனமருவி
கண்டமடவர் தனையே கலவிபிணி பலமூடி

கண்களுடைய ஒளிபார் வையுமொழிய
கொணடபொருளு முடனே நழுவபலர்
கணடுவிலகு மொருகோ ரவடிவொடு புவிமீதே

கொண்டநரக மெனவே இகமதனி
லிந்தகொடிய தொருவாழ வதனையுமெ
கொண்டவருல தடியா ரலரெனவெ தெரியேனே,

கொண்டபிறவி தனையே தருணமென
நம்பியுனது சரணே தினமுமலர்
கொணடுதுதிசெய் எளியே னருள்பெறவெ
இதுவேளை

கொண்டையழகு மினல்போ லிடையுலவு
செம்பொனுடையு மொயிலோ டிலகுமிரு
கொங்கைமருவி விளையா டுமணிகளும் ஒளிவீச

கொம்பினைநிகர் மதிமீ தணிமுடியு
மங்குசமுட னொருபா சமுமொளிர
கொஞ்சியெனது முனமே யினிவருக அபிராமி.

11

மோகனம் ] "காமாத்திரமாகி" மெட்டு [ த்ரிபுடை

வேதார்த்தமு மாகி சகலபு
ராணார்த்தமு மாகி யதனிலு
மேலார்த்தமு மாகி தருமமொ டொருகாம
வீடார்ததமு மான சதுர்நிதி
சீராய்த்தரு மாது தவமுடை
மேலோர்க்கொரு ஏக சுகமதை அருள்தாயே;

பாதார்ப்பண மாக செயலுடை
யோரார்த்திகள் ஓட விடவல
பாலாத்ரிபு ரேம திவதன மலைமாதே;

பாதார்ச்சனை நாளு மிடுவெகு
சீராய்ப்பஜ னுதி களுடனெ
பாரேத்திட வாழும் அடியவ ருளவாழ்வே ;

தாதாத்தன தான தனவென
சீராய்ச்சிவ னோடு நடனிடு
தாயாயப்பதி னுலுவுலகினை யருள்மாதே

தாயாய்த்தமி யேனை யருளொடு
சேய்போற்பல நாளு மருவியெ
சாவாப்பிர ஸாத மருளிட வரவேணும் ;

காதாட்டிய யானை முகரொடு
வேலாட்டிய ஆறு முகனருள்
கார்போற்றிரு மேனி யுடையதோர் சிவகாமி

காமாக்ஷியு மாகி மதுரையில்
மீனுக்ஷியு மாகி பலைவர்கள்
காலாக்கினி யாகி எனதுள முறைவாழ்வே.

12

தனயாசி ] "உனைத்தினந்தொழு" மெட்டு [ ஆதி

மனத்தை யுங்கவர் மதனுடை வடிவமு
மலர்த்த சந்திர வதனமும் நுதலினட
வகுத்த கொண்டையும் வளையிரு புருவமு மதனூடே

மதித்தெ மூந்தொளிர் ம்ருகமத திலகமும்
செவித்த லந்தனை யளவிய விழிகளும்
வகுத்தெ மூந்தரு மணியுட னொளிவிடு குமிழ்நாசி

கனித்த செங்கனி யெனவரு மிதழுடன்
மலர்ச்சி கொண்டுமெ யுலவிய யிளநகை
கழுத்தி லந்தமொ டிலகிய வரிகளு மழகான

கரத்தி லென்றுமெ சரிவளை யசைவுற
சிவத்த குங்கும மெனுமொரு துகிலொடு
கனத்த செம்பொனி னிழைகளு மணிகளும் ஒளிவீச

வனப்பு டன்திகழ் கொடியிடை தனைமிக
வருத்து கொங்கைக ளசைவுற பதமதில்
மணிச்ச லங்கைகள் கலகல கலவெனு மழகோடென்

மனக்கு ரங்கொடு யிருவினை யொழியவு
மிகச்சி றந்தசுக பரமுமு னருளபெற
மலர்ப்ப தந்தனை யெளியனு மடையவெ வரவேணும் ;
கனத்த கஞ்சியில் மலர்மகள் கலைமகள்
சிறக்க வந்திரு புறமொரு கொலுவொடு
களிக்க நின்றுன கடியவர் வினைவதை அருளிய
கருத்த ஐங்கர னுமொரு முகனையு
யளித்து அன்புட னடியவர் அலறிடு
கவிக்கு னிலறுமெ கருணையொ டருள்செயும்
உமையாளே.

13

"புலிகருணபாத மதுநினை" மெட்டு

ஜனரஞ்சனி ] [ சதுஸ்ரரூபகம

எலைக்குந் தாயி யுலகுகளை
அளிக்குந் தாயி அடிதொழும்
எனக்குந் தாயி அடியவர் மனமார
இசைக்குந் தாயி இகசுக
மளிக்குந் தாயி பதமெனை
இணைக்குந் தாயி மயிலையி லுறைதாயி
கவிக்குந் தாயி மறைதனை
அளிக்குந் தாயி பலவிக
கலைக்குந் தாயி மதுரையி லுறைதாயி
கதிக்குந் தாயி பலவகை
நிதிக்குந் தாயி புகழொடு
களிக்குந் தாயி புவிநகர் உறைதாயி
தவத்தின் தாயி பரமதை
யளிக்குந் தாயி பலவினை
தறக்குந் தாயி பகைதனை யணுகாதே
தவிர்க்குந் தாயி மலமதை
யொழிக்குந் தாயி இருவினை
தகிக்குந் தாயி சகலமும் அருள்தாயே
சிவத்தின் சோதி முருகனை
யளிக்குந் தாயி யெமதுளே
செழிக்குந் தாயி மறைகளின் முடிவாகி

சிறக்குந் தாயி புரிபிழை
பொறுக்குந் தாயி ஒளிவிழி
திறக்குந் தாயெ யெனதுமுன் வருவாயே.

14

பியாக் ] "சீதள வாரிஜ" மெட்டு [ ஆதி

பூரணி காரணி தாயான நாரணி
ஆரணி சூலினி வாராகி மோகினி
பூரண யோகினி பாலாபு ராதனி கலியாணி
போதக தாயினி தேஜோவி லாஸினி
மாலினி காமினி மாதாம னோமணி
பூரண பாசலை வாணீம னோகரி மலைமாது
வாரிஜ மேனிகொள தேஜோஸ்வ ரூபிணி
நாரணன் நான்முக னைபெறு மாசிவை
மாயம தாயுல கேழு மேயானவ அபிராமி
பாவினை பேதனி மாமீன லோசனி
நீலிசு வாஸினி மாஞான தாயினி
மாமலர் வாஸினி மாகாளி ரூபிணி மயில்மாது
சாரதை யாமளை மீனுள்ப ராபரை
பார்வதி மாதுமை மாமாயி கோமளை
சாதனை யட்டநள் மாகாம ஹேஸ்வரி திருமேவளை
தாயென வேமைமூ னைநாளு மேவியுன்
நாமமே தோதுயெ சிராக வாழவை
தாரக மாமுன சீர்பாத மேதா வரவேணும் ;
காரண காரிய மாயகாம பீடம
தேறிய தேவிம ஹாமயோக ஆஸனி
காமக லேகம லேசீல லோசனி சிவகாமி
காசினி வாஸினி காமாரி மாஜயை
மாகரு ணைகரி லோககோப காரிச
காயம தீயுமொர் சீர்காம கோடியி லுறைதாயே.

15

செஞ்சுருட்டி ] "கட்டி முண்டகர" மெட்டு [ ஆதி

இச்சை யென்றபவ ஸாக ரந்தனிலே
லச்சை யின்றிவெகு காரி யங்களுடனே
இட்டு வந்தவொரு தோணி கொண்டுளமு மலம்வீச

இப்போ வந்திடுமோ நாளை சென்றிடுமோ
எப்போ வந்திடும்வ ராதி ருந்திடுமோ
இப்பெருஞ் சலனமோடு சங்கைகளு மிகமூடி

அச்ச மின்றிவெகு பாப மும்பயில
மெத்த நெஞ்சுதுணி வாகி வந்துலகில்
அறப மெனறுமொரு பேரு கொண்டுமினி கரைகாணு

அக்க ணந்தனிலே ஞான மின்றிமிக
துக்கம் வந்துமிடி யோடு மனமுயிரை
அக்க ரும்பரியி லேறு மந்தகனை கொடுபோது

பச்சை யைந்தரவ ரோடு கொண்டவளே
திக்கு மின்றியழ வேபு டந்தனிலே
பட்டெ ரிந்துவிடு வாழ்வை நம்பியினி அழியாமல

பக்தி கொண்டுனது தாளை யின்பமுற
நித்த முந்தொழுது ஞான மும்பெறவே
பக்ஷ முங்கொடுயி வேழை முன்கடுகி வரவேணும் ;

கச்சி நன்பதியி லேறி யன்பர்தமை
அச்ச மின்றிபுவி மீதி லின்புறவை
கற்பு கொண்டுசிவ வாம பங்கிலுறை சிவகாமி

கற்ப கம்பதிர காளி பண்புடைய
சித்ப ரஞ்சிலையு மாகி தஞ்சமென
கத்தி வந்தஅடி யாரை யஞ்சலென அருள்தாயே

16

செஞ்சுருட்டி ] [ மிஸ்ர ஜம்பை (திஸ்ரகதி)

மூல மந்த்ர மேதுமின்றியே சுமா சுமாபுவி
மீதுவந்து நோய்மிகுந்துமே சுரீர் சுரீரென
மோகவம்பு மீறிநொந்துமே ஐயோ ஐயோயினி
மங்கிடாமல்

மூவிரண்டு ஆதரங்கள்மீ துலா வுலாவியெ
ஜொதிகண்டு வாழுமன்பரே கதீ கதீயென
மூமலங்க ளோடுபந்தமே விடாய் விடாவென
விந்தைதாராய்

சாலநொந்த தோர்குழந்தையே அமா அமாவென
ஓடி வந்து வாரிமைந்தனே அழா தெழாவென
தாயணைந்து பேணல்விந்தையோ சொலாய சொலாயினி
இந்தவேளை

தாளசந்த மோடிசைந்துமே கணீர் கணீரென
நாலுவந்து தாளபுகழ்ந்துமே விடேன விடேனென
தாயதென்று நீயுவந்துமே இதோ இதோவென வந்து
தோணுய;

ஓலமென்ற தோசிலம்புமே ஹரீ ஹரீயென
ஆழிகொண்டு ஓடிவந்துமே நொடீ நொடீயருள
ஓமுகுந்தர் பேணுதங்கையே மகா மனோரமை
எங்களாயி

ஓமெனுஞ்சொல் ரூபர்தொந்தியே மொளு மொளுவென
வேல்சுமந்த பாலரந்தமே மினீர மினீரென
ஓரிரண்டு சேய்பயந்துமே கனீ கனீயென வந்ததாயே;

காலனஞ்சி ஓடவென்றுமே செவேல் செவேலென
காலணிந்த தோர்சிலம்புமே கலீர் கலீரென
கார்திரண்ட தானகண்களே அளீ அளீயென அந்த
மோடே

காதிரண்டு தாடகங்களே பளீர் பளீரென
நாசியின்க ணோருங்கலே ஜிலீர் ஜிலீரென
காமகஞ்சி மீதமர்ந்துமே சரா சராதிகள் தந்தவாழ்வே.

ஆரபி ] 17 [ ஆதி

சமய மாறிலும் நின்றருள் சங்கரி
இமய மாதுமை எங்கள் பெருந்தகை
சகல காரணி சய்பும கிழ்ந்திடும் எமதாயி

தருண மேதன தன்பர்பெ ருந்துயர்
அகல வேயவர் பங்கினில் நின்றவர்
தனமெ லாமடை யும்படி சிந்தைகொள் கலியாணி

அமல நாயகி யண்பரு ளந்தனி
லமரு நாயகி யந்தமி குந்தவள்
அகில லோகமு கந்துப யந்திடு — மபிராமி

அருள்வி லாசினி மந்தரி யந்தரி
புவன மோகினி யம்பைத்ரி யம்பகி
அதிவி நோத சுகந்தரு மிந்திரை — யெனவோதி

எமது யாமென மங்கிய முந்திடு
மமதை போயிரு செஞ்சர ணங்களின்
எழிலை யோதியு னன்புநி றைந்திடு — மதியாலே

எமனு மோடநி ரந்தரம் நின்றெனை
மருவி யானுமவி ருப்புடிவ ரந்தர
எனதுள் நீபுகுந்தி ரப்பிசு கந்தர — வரவேணும்;

கமலை வாணியி ரண்டுபு றந்தொழு
மரசி நீலிப யங்கரி சண்டினி
கவலை யோடவி டுஞ்சக தம்பிகை — சிவகாமி

கனக மேனியு டன்றிகழ் சுந்தரி
குமரி காளிசி தபர நாயகி
கவுரி சூலிச கப்புசமு கஞ்சியி — லுறைவாழ்வே

நீலாம்புரி — 18 — [ரூபகம்

சஞ்சிசக் தியினிலு மைம்புலப் பேயர்புரி
சங்கடப் போரினிலுய — வெந்து நாளும்

சஞ்சலத் தோடுழலு மென்றனுக் கோர்கதியு
மிலையிப் பாரின்மிசை — மங்களாயோ?

நெஞ்சிலெப் போதுமுனை யின்புறத் தேடிநிதம்
நின்பதத் தாமரைகள — வந்துபேணி

நின் திருப் பாடல்பல பண்புறப் பாடியுன
திருகிதப பேறருள — வந்துதோணாய்;

செஞ்சடைச் சூடொழிய கங்கைவைத் தேசிறிய
திங்களைச் சூடுமுடி — கொண்டநாதன்

சிந்தையுற் றேமகிழு மம்பைசித் ருபிசிலை
சிந்துரத் தேவிபர — மங்கைநீலி

கஞ்சபொற் பாதமலர் கண்டுளத் தேபகிழு
மன்பருக் கேவுரிய மந்த்ரரூபி
கண்களுக் கோர்துணைவி மங்களப் பாவையுமை
கஞ்சியிற் கோயில்கொளும் எங்களாயே.

கமாஸ் ] 19 [ ஆதி

சமய வம்புக ளாலுல கோரொடு
பகையு மிஞ்சிட யானெனு மார்பொடு
சகல சங்கட வாயிலி லேகிட வெறியாகித்
தவறு மிஞ்சிடு மாதர்கள் லீலையில்
உருகி யங்கமெ லாமுற வாடியெ
தனமி ழந்துயிர் போமொரு நோயினி லழியாமல்
எமனை வென்றிடு ஞானமெ லாமருள்
இருப தந்தனை நாடியெ நாளுமெ
இசையு டன்புகழ் பாடிநி மோர்மதி யதனோடே
இகப ரந்தனி லேசுக வாழ்வொடு
புகழு டன்பிர காசமு மேபெற
எனைய டைந்துன தாரரு ளேதர வரவேணும்;
கமலை யிந்திரை யாமளை கோமளை
சகல மங்கள தாயகி நாயகி
கவுரி சங்கரி மாகரு ணைகரி கலியாணி
கமல மங்கையும் வாணியு மேபுகழ்
புவன சுந்தரி மோகினி மாலினி
கனக வொண்சுடர் மேனிகொள் யோகினி அபிராமி
அமலை யந்தரி ஆரணி நாரணி
இமய மங்கைம னோமணி பூரணி
அகில வண்டச ராசர காரணி உமைகாளி
அமர ரிந்திர னார்புகழ் சூலினி
குமர னைங்கர னார்தரு பார்வதி
அரிய கஞ்சியில் வாழ்சிவ காமினி எமதாயே.

20

கதனகுதூகலம் ] "விரல்மாரனைநது" மெட்டு [ ஆதி

நிலையாது பொங்கு சமுசார வம்பில்
நெடுநாளு ழன்று வெறியாகி
நெறியேது மின்றி நிலையேகு லைந்து
கதியேது மின்றி யழியாதே
சலியாத நெஞ்ச முடனேயி ரண்டு
சரணார விந்த மதுபாடி
தமியேனி னைந்த பொருள்கூட வென்று
ஜயமேபு ரிந்து வரவேணும்;
கலியாணி கஞ்சி நகர்வாழு மம்பை
கமலா சனங்கொ ளபிராமி
கலைமாது மந்த மலர் மாதும் வந்து
கழலோதி நின்று புகழ்மாதே
பலகாலு மன்ப ருளமேபு குந்து
படிமீது யர்ந்த பதமீயும்
பரமாது மங்கை சிவகாமி என்ற
ளுளமேய மர்ந்த உமையாளே.

காமபோதி ] 21 [சாபு

பண்டைவினை யுங்கழிய நின்றவினை யுங்கழிய
பந்தமல மூங்கழிய வந்துநாளும்
பஞ்சநிதி தந்தருளு மம்பிகைத்ரி யம்பகிப
ரம்பரைசு தந்தரிம தங்கிநீலி
அண்டபகி ரண்டமொடு மண்டலம னந்தம்வெகு
பண்புடனு கந்தருளு மம்பிகேயென்
றம்புயப தங்கள்நிதம் வந்தடிய னுந்தொழுது
மங்களம டைந்திடவும் வந்துதோணாய்;
தொண்டர்தமை யண்டியவர் பங்கினில மர்ந்தரிய
தொண்டதுபு ரிந்தவர்முன வந்து தோணி
சொந்தமென நின்றிகப ரந்தனில்நி ரந்தரசு
கந்தருசு மங்கலையு மென்றமாதே
கண்டவர்கள் கண்டவுடன் மங்களம டைந்திடவெ
கஞ்சிநக ரந்தனிலு றைந்தவாழ்வே
கந்தரொடு தந்தியுமு கந்தருளு மம்பைசிவ
சங்கரனி டந்தனில மர்ந்ததாயே.

தோலெலும் பாயுதிர சீநரம் பானவொரு
தூலவெங் காயமது வேசதந் தானெனவெ
சோகமுங் கோபமொடு மோகமுந் தாபமொடு
சூதுமங் கேசிறைய தானெனுஞ் சூரமொடு
தூய்மையும் போகவொரு வாய்மையும் போகவுள
சோபையும் போகவெகு வாகவிங் கேதனமூ வந்துதேடி

தோரணம் போலவரு பாபசண் டாளரொடு
தோழரென் றேயுலவி பாழுறுங் காலியன
தோதகந் தான்புரியு மாகொடும் பாவையரை
தோளொடுந் தோளபரவ மோகமுண் டேகலவி
சோரனென் றேதனமொ லாமிழந் தேயதிக
சோர்வடைந் தேபிணிக ளேமிகுந் தேயுலகில்
மங்கிடாதே

சீலனென் றேயெனையு மாவல்கொண் டேநிதமுன்
சேவையொன் றேபணியில் மேலதென றேநினது
தேனெனுஞ் சீர்மொழிக ளாலுளந் தானிறைய
சீர்மிகும் பாடலுட னுயிநின் சீரடிகள
சேய்நிதம் பேணிசிவ ஞானமுந் தானடைய
சீருடன் பேர்பெறவு மாதனந் தானுறவும வந்து
தோணுய் ;

சேவலன் பாலனெனு மோர்மகன் சூரனொடு
தீரவெம் போர்புரிய வேலயன றேயருளசெய்
சீலயெந் தாயிமலை ராஜனன் பானசுதை
சீர்மிகுஞ் சேலவிழியள மாபதஞ் சேர்துணைவி
சேய்நலங் கோருமமை மாதனஞ் சேரவருள
தீனர்பங் காளிதிரு வானபைங் கோதையெனும்
எங்களாயி

வாலையெந் தாய்விமலி நீலிகங் காளிமக
மாயிசங் காரிசிவ காமியம் பாகருணை
வாரிவெஞ் சூலிபுவ நேசியெங் கேயுமுள
மாதுமங காவமுகி யேழைபங் காளிசிவ
வாமபங் காளியதி மோகசிங் காரிநிரு
வாணிசெங் கோதைகலி யாணியம் பாகவுரி சந்த்ரசூடி

வாணியுந் தாமரையி னுளும்வந் தேபணியு
மாபெருந் தேவிதிரு மாலுடன் தேவர்சிதம்
வாழியென் றேபுகழு மாதிளங் கோமளைய
மாசிவன் பாதியென வேதிகழுந் தேயுலக
மாயையென் றேவளரு மாதவன் சோதரியு
மாபெருங காளியபி ராமிவண் டார்குழலி மந்த்ரரூபி

சாலவுந் தாள்பணியு மாதவம் பூணுமவர்
தானிதங் காணவல தேவிவந் தோரிரவு
தானுவந் தேசனவி லாளவந் தாளெனது
தாயெனுங் காமகலை மாதுசிந தாமணியு
தாரமைங் கோதையுப காரிசெந் தேனு பனை
சாடுவெங் காளிபர சோதியென் றேவளரு மங்களாயி

தானதந் தானதன தானதந் தானதன
தானதந் தானதன தானதந் தோமெனவெ
சாமிசங் காரசிவ னோடுமங் காநடன
சாதனந் தானிடுமி ராணிபைந் தாளுவதி
தானெனும் பேயகல மாயமும் போகபவ
சாகரந் தாவுமொரு ஞானமுந் தானுதவு

கஞ்சி வாழ்வே.

## 23

ஈவேரி ] ‘ கனகநதிரள ’ மெட்டு [ த்ரிபுடை

புவனங்கள் தருஞ்சக தம்பிகை
சிவசங்கரி யந்தரி மந்தரி
புரசுந்தரி சண்டினி குணடலி புவியேழும்

புகழும்பர மங்கைசு மங்கலை
எழில்மிஞ்சிய வம்பைதரி யம்பகி
பொலிவுந்தயை யுங்கொளு யிந்திரை கலியாணி

நவமங்கைய ரும்பய முங்கொடு
நிதமும்பணி யந்தமு டன்திகழ்
நளினந்தனை மிஞ்சிய செஞ்சரண உளதாயே

நதியும்பிறை யுந்திமும் செஞ்சடை
அரனும்பய முங்கொள வென்றிடு
நடனந்தனை யன்றுபு ரிந்திடு முமைகாளி

தவமிஞ்கிய சிந்தைகொ ளன்பர்கள்
துயருஞ்சுக மந்தன தென்றொரு
தயைகொண்டுவி ரைந்தருள் தந்திடு மபிராமி

சரணந்தனை நம்பிடு மென்றனை
தனமும்புக ழும்பெரு கும்படி
தருணந்துணை கொண்டுசு கந்தர வரவேணும்;

பவளந்தனை மிஞ்சிசி வந்திடு
மிதழ்மின்றுவி ளங்கிய சுந்தர
நகையுஞ்சுடர் குங்கும முந்திகழ் முகமோடே

பலதுன்பம கன்றிட வுங்கொடு
பவசிந்துக டந்திட வுந்திகழ்
பதபங்கய முங்கொடு கஞ்சியி லுறைவாழ்வே.

24

கல்யாணி ] 'இருவினைபுனைந்து' மெட்டு ரூபகம்

மதிதனை யிழந்து நாளும் விதிதனை மறந்து தீய
மலவினை புரிந்து கோர பிறவாழி
யடுவினில் விழுந்து மூழ்கி துயரொடு கலங்கி வாடி
மருளொடு பிறந்து மாயு மெளியேனும்

கதிதனை யடைந்து தூய மதிதனை யடைந்து சால
கவுரவ மடைந்து ஞால மதில்சாரும்
கவலைக ளொழிந்து நோய்கள் கொடிகளு மொழிந்து
[போக
கருணைகொள சரணக ளீய வரவேணும்;

நிதமுனை வணங்கு வோர்கள் உளமதை யடைந்து ஞான
நிதிதனை நிரப்ப யீயு முமையாளே;
நெறியொடு விளங்கி தூய மனமொடு புகழ்ந்து பாடும்
நிமலர்க ளுடன்கு லாவி மகிழ்மாதே;

மதுரையில் விளங்கு ராணி மனமதில் இயங்கு தேவி
மரகத நிறங்கொள் சீலி திரிசூலி
மகிமைகொள் அரங்க நாதர் அரனயன் புகழ்ந்து பாடு
மலைமகள் மதங்கி நீலி எனுமாயே.

காம்போதி அல்லது கல்யாணி ] 25 [ ஆதி
' கடிமாமலர்க்கு ' மெட்டு

தொலையா ததுக்க மிஞ்சு மிகவாழ் வுநித்த மென்று
துடியே மிகுதத லைந்து பொருள்தேடி
சுகமோ டிருக்க வென்று மனையா ளுமக்கள் கொண்டு
தொடர்போ லிடுக்கண வந்து பிணிமூடி
கலியே மிகுத்து நொந்து கடையா ளர்நட்ப டைந்து
கதியே துமற்று முன்று திரிவேனை
கழலா திநித்த முன்றன அருளை தழைத்தி லங்கு
கதிசே ரவைக்க வின்று வரவேணும் ;
மலையே யிணுக்கு ணின்று வினைநோ யகற்று மெந்தை
மதுகூ தன்மெச்சு தங்கை எனுமாதே
மதிகூ டுமப்பர் பங்கி லுறைமா துசக்தி யமலை
மயிலா புரிக்கு ணின்ற மகராஜி
அலைமீ துதித்த மங்கை மலராள இடத்து றைந்து
கலைமா துபக்கம் நின்ற கொலுவோடே
அரியா சனத்த மர்ந்து மதுரா புரிக்கு ளன்று
அர சசெலுத்தி நின்ற உமையாளே

26

மோகனம் ] ' தந்த பசிதனை ' மெட்டு [ ஆதி

வந்த விடர்தனைய றிந்து தருணமதில்
வந்து துணைபுரியு மெழில் சேரும்
மங்கை நலமுதவு நங்கை சகலவித
மங்க ளமுமருளு முமைமாது ;
கந்த னுடனரிய தந்தி முகனையருள்
கஞ்ச தளநயன வபிராமி
கண்ட வுடனருளு மம்மை யமரர்புகழ்
கஞ்சி நகரிலுறை எனதாயே ;
சந்த முடனரிய செஞ்சொல் நிறையுமருள்
தங்கு முனது புகழ பலபாடி
தஞ்ச மெனுமடிமை சஞ்ச லமு மகல
சங்கை களு மகல புவிமீதே

அந்த மிகுபரம மங்க ளமுமடைய
அன்ப ரொடு குலவி நிதம்வாழ
அந்தி பகலுமெனை யண்டி யருள் தரவு
கந்து எனது முனம் —வரவேணும்.

27

குறஞ்சி ] "சிவஞான புண்டரிக" மெட்டு [ஆதி
மத்ய சுருதி

சிவகாம சுந்தரித னடியார்கள் கொண்டபணி
செயமாகி என்றுமன மகிழ்வாகி
செகமீதி லந்தமிகு பெருவாழ்வு டன்சகல
திருவேனி றைந்தொளிர்வ ரெனதேறி

கவிபாடி நின்சரண மலர்நாடு மனபனெனை
களிகூர வந்துனருள் விழியாலே
கடையேற வும்பழைய வினைதீர வும்பரம
கதிசேர வுங்கருதி வரவேணும்

தவமாகி நின்றுநித மடிபாடி என்றுப் நெறி
தவறுத சிந்தையர்க ளுறவாகி
தலமீது வந்தவிடர் மிடிதீர வந்துமிக
தயவாகி செம்பதமு மருள்தாயே

நவமாது டன்பதும மலர்மாது வும்புகழு
நலமேவு நங்கைபர கதியீயும்
நதிசூடி கொன்றையொடு மதிசூடி நின்றசடை
நடராஜர் பங்கிலுறை உமையாளே.

28

காம்போதி கலியாணி ] 'கடிமாமலர்க்கு' மெட்டு [ ஆதி

எழுமா மலைக்குள்வளர் அரியா கிரிற்குமமை
இணையே துமற்றவொரு சிவகாமி
எனதா குயிர்த்துணைவி மதுரா புரிக்கரசி
இமவா னளித்தவுமை அபிராமி ;
முழுமா மதிக்குநிகர் எழிலே மிகுத்தொளிரு
முகமீ தொளித்தவருள் நிறைவோடே
முறையோ டுநித்தமிரு சரணே துதித்துவரு
முனிவோ ரகத்திலமர் கலியாணி

அழுமோர் சிசுக்குருகி சிவஞா னசித்திநிறை
அமுதே யளித்தருளு முமைமாது
அடியா குளத்தமெலாரு தருவா கிநிதமவர்
அழியா பதத்தையுற அருள்தாயே;
பழமா வினைபயனை அடியோ டறுத்தடிமை
பரஞா னமுற்றெருளிர தயவாகி
படிமீ துதித்தமுன தருளே தனமுமதுபவ
பவிசே மிகுதமெதாளிர வரவேணும்;

29

சங்கராபரணம் ] "பாதிமதிநதி" மெட்டு [ ரூபகம ஆதி

நாசி மணிசுடர் வீச செவியிடு
தோடு மெழிலுட னொளிவீச
நாடு மடியரை நாடு விழிகளும்
நாளு மருளொளா ளிதனை வீச
மாசு மருவுமி லாத முகமதில்
ராஜ களையது மிகவீச
மார்பி லரியபொன் மாலை மணியொடு
தாலி சுபமுட னொளிவீச

வீசி யொளிதரு ஏம மகுடமு
மேனி முழுவது மொயிலாக
மேவி யுலவிடு மாடை யொடுமிடை
பூணு மணிகல னொளிவீச
ஆசை யுடனடி பேணு மடியனை
ஆள வெனமுனம் வரவேணும்;
ஆதி பகவதி நீலி பரமகல்
யாணி யெனமறை புகழ்தாயே.

30

கமாஸ் ] "காரணமதாக" மெட்டு [ கண்டத்ரிபுடை

காலனணு காது யென்று முளதான
காயமொடு வாழு கின்ற கதிகாண
சாலநிதி யேநி றைந்து மகிழ்வாக
தாயெனயி வேழை முன்பு வருவாயே;

பாலன் வடி வேலன் வந்து விளையாடும்
பாலையநு கூலை யெங்க ளபிராமி
சீலசிவ காமி யென்று மறையோதும்
சீரொடுச ராசரங்கள் அருள் தாயே.

எதுகுலகாமபோதி ] 31 [ ஆதி

வறுமை மிகுத்திடர் பிணிமூடி
மறலி யெனைக்கொளு முனமேநீ
அறிவை யளித்துன தருளாலே
அபய மளித்திட வருவாயே ;
அறுமு கனைத்தரு முமையாளே ;
அவதி யகற்றிடு மபிராமி ;
மறுபி றவிகடட லுழலாதே
மகிமை தனைத்தரு மெனதாயே.

32

மாளவி ] "இசைந்த ஏறும" மெட்டு [ ஆதி

நெளிந்த சீரும் மரகத வடிவமு மணிமாலை
நிறைந்த மார்பும் முழுமதி வதனமு மழகோடே
வளைந்து சாயு மெழிலொடுமுடி குழ லது மீதே
மிளிர்ந்து காணு மரைமதி மணிகளும் அருளாலே

குளிர்ந்த பார்வை யிதழினி லுலவிள நகையோடே
குமைந்த போதென இடர்கெட சடுதியில் மம
தெளிந்த ஞான முடனடி பணிபவர் உளவாழ்வே
திருந்த லோக முழுவது மருளிய எமதாயே.

33

கல்யாணி ] "நிலையாத சமுத்திர" மெட்டு [ திரிபுவடை

நிலையாது புகைந்திடு வாழ்வை நிசமான நிரந்தர மாக
நினைவாகி நிலந்தனி லாண வழுமீறி

நிமிர்மார்பி லகந்தையு மாட நெறிநீதி களொன்றுமி லாது
நெடுநாளு மலைந்தநி யான நிதிதேடி

அலைபோல வருந்துயர் நோய்கள்
மிடியோடு மிடைஞ்சலு மாகி
அடியோடு மழிந்தொரு கோர பிறவாழி

யதில்மூழ்கி யுழன்றிடு வேனை
யருள்மாரி பொழிந்தொரு தாயு
மெனவாகி அணைந்திட வேமுன் வரவேணும் ;
மலைபோல வருந்துயர் கோடி
பனிபோல வகன்றிட வேசெய
மகராஜி யிதந்தரு மாது வுமைகாளி ;
மலைராஜ னுகந்தருள தேவி அபிராமி சதந்தரி நீலி
மகதேவ ரிடங்கொளு மாயி ஜகதீசை ;
கலியாண சுமங்கலை யான சிவகாம சவுந்தரி சீலி
கவிபாடிய வன்பரை யாளு மயிலை மாது
கமலாளு மருங்கலை வாணி வலமோடு யிடந்தனில் மேவ
கருணாகரி சங்கரி யாகி வளர்தாயே

34

சண்முகப்ரியா ] " இருவர் மயலோ " மெட்டு [ ஆதி

செடியின் வகையோ நெடிய மரமோ
சிறகுள உயிரோ புவிமீதே
சிறிய புழுவோ பெரிய வுயிரோ
செனன மெதுவோ வருமோதான்
படியி லடிபேன் பிறவி யறவே
பரிவு கொடுநீ யெனையேவி
பவிசு மழியா நிதியு மெழிலார்
பதமு முறவே வரவேணும் ;
மடியில் வடிவேல் முருக னிசைவாய்
மதலை யெனவே விளையாட
மலரி னுறைவாள் கலைக ளருள்வாள்
மகிமை யொடுசூ ழபிராமி
அடிய ருளமே குடிகொள் லலிதாள்
அருளின் வடிவா கியதேவி
அமர ரயன்மா லரனு மகிழ்வா
யடிகள் புகழ்மா துமையாளே ;

35

பியாக் ] 'நெய்த்த சுரிகுழல்' மெட்டு [ ஆதி

அற்ப சுகமுள யிகவாழ் வதுவே
நித்தமெனவொரு நினைவே மிகவே
அச்ச மறவற நெறியே யறவே புவிமீதே

அட்ட திசையினு மிகவே அலைவாய
குற்ற முளபல வினையால் வெகுவாய்
அத்த மிவர மதியே கெடவே வறியார் பால்

சொற்ப தனமது முதவா தவனை
துட்ட ரொடுசித முறவாய் மிடியாய்
துக்க முடனிடர் பிணிமூ டியுமே அழியாதே

சுத்த வுளமொடு கதிநீ யெனவே
பக்தி யுடனுன தடிபா டியுமே
சொர்க்க சுகமதை யடியே னுறவே வரவேணும்;

வெற்ப ரசனெனு மிமவான் மகளாய்
நித்த மரியுட னரனு ரயனூர்
மெச்சி யடிபுகழ் ஜகநா யகியா மபிராமி;

விக்ன மறுகஜ முகனோ டயில்வேல்
உற்ற குகனையு மருள்தா யுமையாள்
வெற்றி தருமொரு விஜயாள் லலிதாள்—கலியாணி;

கற்ப கமுமென மயிலா புரிவாழ்
சக்தி பயிரவி சரணு மடியார்
கட்ட மதையொரு நொடியே பொடியாய்
செயுமாதே;

கச்சி நகர்தனி லருளே யுருவாய
இச்சை பலவரு ளொருதா யெனவே
கற்பு மிகுமொரு கருணை கரியாய் உறைவாழ்வே.

36

மோகனம் ] "திமிரவுததி" மெட்டு [ ஆதி

இடர்கள் கலிகள் மிடிகள் பிணிகள்
எவையு மெனையு மணுகாதே
இரவு பகலு மெனையு மணுகி
இனிய துணையு மெனவாகி

படியி லருளை யருளி யெனது
பழய வினைக ளறவேதான்
பவிசு மடைய நிதியு மடைய
பரிவு கொடுமுன் வரவேணும் ;
சடையில் மதியு நதியு மரவு
மணியு மரனின இடமேவி
சகல வுலகு மருளு மமலை
சரச நயனி உமைகாளி ;
கடலின் மகளு மறிவின் மகளும்
வலமு மிடமு பொயிலாநக்
கவரி விசிறி யடிகள புகழு
மகிமை மிகவு முளதாயே.

37

பியாக் ] 'விநததிநூறி' மெட்டு [ ஆதி

சங்கட மான வெங்கலி யாலே
சஞ்சல மீற மிக வாழ்வில்
தனசதி யோடு மைந்தர்க ளோடு
சந்ததம் வாடி யழியாமல்
மங்கள மீயு முன் பதம் நாடி
வண்புக ழோதி அடியேனும்
வந்துல கேழும் வந்தனை காணும்
வண்கதி காண வரவேணும் ;
பங்கய மாது மெண்கலை வாணி
பங்கய பாத மதை நாடி
பண்மொடு சாம ரங்களும் வீசி
பண்பல பாடி புகழ்தாயே
சங்கைகொ ளீசர் சங்கர ரோடே
கண்டவர் நாண நடமாடும்
கஞ்சியில் வாழு மம்பையி வேழை
கண்களி லாடு முமையாளே.

38

சுபபந்துவராளி ] ' மருவே செறித்த " மெட்டு [ ஆதி

உபகா ரிபக்த பரிபா லிசக்தி
யுமைகா ளிசித்ர சிவகாமி
உலகே முளித்த ஜகதீ சைசித்த
ருளமே சிறக்க வுறைதாயே ;
சுபமா துசுத்த வுளமா துநித்ய
சுகமே சிறக்க வருள்தாயே ;
துயர்தீ ரவைக்கு மபிரா மிநித்ய
கலியா ணிகச்சி யுறைதாயே ;
இபமா முகற்கு மறுமா முகற்கு
மினிதா கவுற்ற வொருதாயே ;
இமையோர் ஜகத்தி லுளவோர் வழுத்து
மெமதா யிசுத்த பரமாதே ;
அபரா தமிக்க எளியே னைமெத்த
பதமீ துவைத்து புவிமீதே ;
அனைவோ ருமெச்ச பெருவாழ் வளிதுன்
அருளே தழைக்க வரவேணும்.

39

கானடா ] " மூலா நிலமதின் " மெட்டு [ ஆதி

நாலா மறைபுகழ் பாலா திரிபுர
ஞானு கரபர சிவகாமி ;
நாரா யணர்புகழ் மாசோ தரியெனு
மாதா மரகத மகமாயி ;
மாலா யநுதின மேலா முணதிரு
வாடா மலரடி புகழ் நாயேன்
வானோர் புகழ்பர ஞானே தயமிகு
வாழ்வே பெறவினி வரவேணும் ;
காலா லருள்தரு மேலா மநுபவை
காபா லியுமகிழ் அபிராமி
கார்போ லொருவடி வாள்மா பயிரவி
காமா ரிகவுரி கலியாணி ;
சூலா திபர்திரு மாலோ டயன்மலர்
தூவீ யடியிணை புகழ்தாயே
ஜோதீ கதிதரு தேவீ ஜகஜக
ஜ்ோதீ யெனவரு முமையாளே.

40

பியாக் ] ' சந்தனந் திமிர்ந் ' மெட்டு [ திஸ்ரகதி ஆதி

மங்களம் பொழிந்த சந்த்ர
பிம்ப மென் றொளிர்ந்து நின்ற
மஞ்சள் குங் குமந் திகழ்ந்த முகமோடும்
மன்றுளன் றிலங்கி நின்ற
சங்கரன் புரந்த்ரன் விண்டு
வந்தனம் புரிந்து வந்த
பொங்குமன் புடன்ப ரிந்து
வந்து சங் கடங்க ளைந்து
புங்கதுங் கபண்பு தந்து எனையாள
புந்தியின் கணென்றும் நின்று
சிந்தையுங் குளிர்ந்தி லங்க
பொங்குமங களங்க சிந்து விழியோடே
எங்கணும் பரந்து நின்ற
அம்பையுன் பதங்கள் தந்து
இங்குமென சடம்பு குந்து குறைதீர
இங்கிதம் புரிந்து நின்று
மங்களம் பரிந்து தந்து
எங்கணுஞ் சிறந்தி லங்க வரவேணும் ;
சங்கரன் புறஞ்சி றந்த
மங்கைதுங் கவஞ்சி விண்டு
தங்கையென் றுவந்து வந்த கலியாணி ;
சந்ததம் புகழ்ந்து நின்று
அன்புடன் சரண்கள் தங்கள்
தஞ்சமென் றுநம்பு மன்பர் உளவாழ்வே.

41

மத்யமாவதி ] "தண்டையணி" மெட்டு [ சாபு

சந்திரமு கந்திகழ் தந்தமொடு குங்குமந்
தங்குறுத லுந்தடங் கண்கள் வீசுந்
தண்கருணை யும்பதந் தந்தருளு முன்சரண்
சந்ததமி தந்தருஞ் சிந்தையோடே
தந்தனத னந்தனந் தந்தனத னந்தனந்
தந்தனத னந்தனந் தந்தனென்றே

தண்டைமணி யுஞ்சிலம் புங்தொனிகள் தந்திடுஞ்
சந்தமுட னென்றன் முன் சந்தியாவோ ?
சிந்துரசி றங்கொளுஞ் சங்கரிச கம்புகழ்ந்
திண்புறுசு கந்தருஞ் சந்த்ரசூடி
செஞ்சரணை பங்கயஞ் சிந்தையிடு மன்பர்தஞ்
சிந்தையி லமர்ந்திடுந் துங்கதேவி ;
கந்தனொடு தந்தியுந் தந்தருளு மம்பையென்
கண்களில மர்ந்திடுஞ் சுந்தரேசை
கஞ்சிநக ரம்புகுந் தன்பரிடர் சங்கையுங்
கண்டவைக ளைந்திடும் பண்புளாளே.

## 42

## மாலை

மால்கோஸ ] "ஆசைகூர்" மெட்டு [ ஆதி

ஆசைமே விட்டு தாயும்நீ யிட்ட
ஆணையா லற்ப னெளியேனும்
ஆருமே மெச்சு மாறுமே சொற்க
ளாலுமே யுற்ற கவிமாலை
வாசமே திக்கெ லாமும்வீ சிப்ர
காசமாய நிற்க மலராலே
மாசிலா பக்தி யோடுநா னிட்ட
மாலைபா தத்தி லணிவேனே ;
பாசமே மிக்க வீசனுர் சொக்கர்
பாகமே யுற்று மகிழ்மாதே
பாதமே நித்த மோதுமா பக்தர்
பாலுமே நித்த முறைவாழ்வே ;
காசிவாழ் சக்தி யாமளா பத்ர
காளிகா யத்ரி திரிசூலி
காமரா ஜர்க்கு வாமபா கத்தி
காமபீ டத்தி லுறைதாயே.

தர்பார் ] 43 [ ஆதி

சங்கங்கொண் டாடிடுசெந் தேன்மொழி
கொண்டும்பண் போடுனதன் பாலெழு
சந்தப்பண் கூடிடுசங் கீதமொ டிசைதாளம்

தந்தந்தொம் தானனதொம் தானன
டிண்டிண்டிண் டீகுகுடிண டீகுகு
சங்கஞ்ஜெஞ் ஜேகுகுஜெம் தாதரி — திமிரோசை
பொங்குஞ்செஞ் சீருடனுன சீரினை
எங்கெங்கும் பாடிடவென றேமிக
பொங்குந்தண சாகரமென் றேவரு — முளமீதே
பொன்கணடங் கேவிரிசெந் தாமரை
எனதென்பண் பாவினையன் போடுன
பொன்தங்கும் பார்புகழுன தாளினி — லணிவேனே;
சிங்கந்தன் பாலொளிர்கங் காளரை
சொந்தங்கொண டாடிடுசிங் காரியெ
செங்கண்சங் காயுதர்தங் காயென — வருமாதே
செந்தின்கண் பார்புகழ்செஞ் சேவலர்
சந்தெங்கும் போயுறைமுன் பானவர்
தின்பண்டந் தாவெனவந் தேதினம் — அணைதாயே
எங்கெங்குந் தாயெனவந் தேவெகு
பண்புங்கொண் டேவருமுன் றானினை
இங்கென்றென் தீவினைவிண் டோடிட — புகழோதி
என்றும்பண் பாகவெநெஞ் சாறிட
ஒன்றுஞ்சிந் தாதுனதன் பேயினை
என்றனைசிந் தாகுலமுந் தீரவும் — அருள்வாயே.

44

## அர்ச்சனை

செஞ்சுருட்டி ] "நாதவிந்துகலாதி" மெட்டு

தான தந்தன தான தனதன
தான தந்தன தான தனதன
தான தந்தன தான தனதன — தனதான.

வேத முங்கலை யானாய் நமோநம
மூல மந்த்ரமு மானாய் நமோநம
மேரு பிந்துவில் வாழ்வாய் நமோநம — அழகான
மேனி தங்கிய தேவீ நமோநம
ஞான மங்கள ரூபீ நமோநம
வீர ரஞ்சித நீலீ நமோநம — ஒளிவீசும்.

பாதி யம்பிறை சூட நமோநம
பூத லம்புகழ் ஜோதீ நமோநம
பாச வங்குச தாரீ நமோநம அடியேனை

பாவி யென்றுமெ ஓராது நீயுமுன்
பாத பங்கஜ மோநா னுமோதிட
பார்பு கழ்ந்திடு மேலா னவாழ்வினை அருள்வாயே;

மாத வன்துதி வாரா ஹிமோஹினி
நீல கண்டரொ டேயா டுதாளினி
வாலை யந்தரி மாமா யியாமளை உமைகாளி

மாத வம்புரி மானா னசீலரை
மேவி வந்தவர் சீரா கவேநல
வாழ்வு தந்தருள் மாதா மனோமணி கலியாணி

காதி மந்திர மோநா டுமாதவர்
பாச பந்தமும் நீறு கவேயொரு
காலன் வந்தணு காமா றுபேணிடு மபிராமி

காவி குங்கும மேபோ லுமேனிகொள்
மோன மங்கைம னாதீ தயோகினி
காம கஞ்சியி லேவாழு காமினி எமதாயே.

## 45

பியாக் ] "சிதளவாரிஜ பாதா" மெட்டு [ ஆதி

தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன தனதான.

பூரண மாகிய ஜோதீ நமோநம
காரண மாய்வரு ஆதீ நமோநம
போதக ஞானவ னாதீ நமோநம புவியாவும்

பூரண மாயருள் மாதா நமோநம
வேதமெய் ஞானமு மானாய் நமோநம
பூதமும் நாதமு மானாய் நமோநம பலவான

பேருட னேதிகழ் தாயே நமோநம
காணவொ ணாதவொர் மாயே நமோநம
பேசவொ ணாதசொ ரூபே நமோநம தவமானோர்

பேறது வாய்வரு வீடே நமோநம
வாரணர் வேலவர் தாயே நமோநம
பேரடி யார்மன வாழ்வே நமோநம அருள்தாராய்;

வாரிஜ மேனியெோர் தேஜோ ஸ்வரூபமு
மாமலர் போலொளி யேவீ சுமாமுக
மாமதி போனுதல் கார்போ லும்மெகுழல்–
அழகோடே

மாசற வேயெனை யீடே றுயாரெருரு
பார்வையொ டேயொளிர் சீரா ணமீன்விழி
மாவினை வேருட னேதீ ரவேசெயு நகையோடே

காரண காரிய மாய்கா மபீடம
தேறிய பூரணி தாயான நாரணி
காமினி ஆரணி மாயோ கதாயினி அபிராமி

காளிம ஹேஸ்வரி காமா ரிமோஹினி
மாகரு ணைகரி மீனாள் பராபரி
காசிநி வாஸினி சீர்கா மகோடியி லுறைதாயே.

46

மத்யமாவதி ] **தூபம்** [ ஆதி

பூமகளும் நாமகளும் என்றும் நாடியே
பூவடிகள் பூசனைசெய எங்கள் தேவியே
தூமலர்கள் தூவிநிதம் வந்தனை செய்தே
தூய்மைமிகு தூபமிது தந்து பேணினேன்;
மாமதுரை மீதிலொளிர் கின்றசீவியே
மாசிலடியார்களுளம் நின்ற பூரணீ;
சோமன்முடி மீதணியு மெங்கள் பாலையே
ஜோதிவடி வாகியொளிர் கஞ்சி வாசியே.

47

ஆரபி ] **தீபம்** [ சாபு

தீப மங்கள சோதி கொண்டாரு
சேவை தந்தருள் நாடினேன்
தீமை யுங்கெட சீர்கள் பொங்கிட
தேவி யிங்கெனை யாளுவாய்'

தாப முந்தரு மூழை வென்றிட
சால முந்தரு மீசையே
தாய தென்றரு ளால ணைந்தெனை
யாளு மங்கள ரூபியே ;
கோப மும்பல மோக முந்தவிர்
கோல நெஞ்சினர் பாலுமே
கோயில் கொண்டொளிர் பாலை யன்பர்கள்
கோரு மங்கள தாயகீ
சோலை மிஞ்சிய மேனி யுந்திரி
சூல முங் கொளு காளியே
தூய செம்பதம் நாடு மன்பினர்
நாவில் நினைவுருளிர் தேவியே,

48

## நைவேத்தியம்

மோகனம் ] [ ஆதி

கடிபக்ஷண மிடிபக்ஷண
களிபக்ஷண வகையோடே
கனிபக்ஷண மதுபக்ஷண
கறிபக்ஷண மொடுபாலில்
வடிசர்க்கரை யமுதத்தொடு
மதிசிததிர வமுதோடே
வடைபக்ஷண முடைபக்ஷண
மடைபக்ஷண மிவைகூட
அடியர்த்திரி கரணத்துட
னளிபக்ஷணம் நுகர்வாயே,
அலையிற்றுயி லளைபக்ஷண
ரவருக்கிளை யவளாகி
விடபக்ஷண ரிடபக்கமெ
வெகுபக்ஷமொ டுறைதாயே
வினைபக்ஷணி பவமற்றிட
வென கச்சயி லுயர்வாழ்வே ;

## தீபாராதனை

ஜனரஞ்சனி ] 49 [ சதுஸ்ர ரூபகம்

"புலிக்குன் பாத மதைநினை" மெட்டு

தனத்தந் தான தனதன
தனத்தந் தான தனதன
தனத்தந் தான தனதன தன தான

சிவத்தின் ஜோதி திரிபுர
மெரிக்குஞ் ஜோதி யெமதுளெ
சிறக்குஞ் ஜோதி முனிவர்கள் விழியூடே
செழிக்குஞ் ஜோதி யிருளினை
யகற்றுஞ் ஜோதி யிருவினை
தெறிக்குஞ் ஜோதி பிறவியை அறுஜோதி
தவத்தின் ஜோதி மலமதை
யெரிக்குஞ் ஜோதி பவவினை
தறிக்குஞ் ஜோதி பகைகளும் அணுகாதே
தவிர்க்குஞ் ஜோதி ஆகமதை
வளர்க்குஞ் ஜோதி அறுமுகர்
தரிக்குஞ் ஜோதி புலிநகர் உறைஜோதி
அவைச்செஞ் ஜோதி பதிவ்ரதை
முகத்தின் ஜோதி மதுரையை
அடைச்செஞ் ஜோதி மயிலையி லுறைஜோதி
அருட்செஞ் ஜோதி அலகைகள்
தகிக்குஞ் ஜோதி யருமறை
அரற்றுஞ் ஜோதி பலவகை நிதியாவும்
குவிக்குஞ் ஜோதி குறைகளை
யொழிக்குஞ் ஜோதி யருளது
கொழிக்குஞ் ஜோதி யெனவரு பொருதாயே
குவித்துன் பாத மதைநித
மிகக்கொண் டாடும் எளியனெ
கொடுக்குஞ் ஜோதி யிது கொள வருவாயே.

50

சுருட்டி ]  ' நிருதரார்க்கொரு ' மெட்டு  [

அருவ தாய்த்திகழ் ஜோதீ ஜெயஜெய
உருவ மாய்ப்புகழ் தேவீ ஜெயஜெய
அகில மாக்கிய ஆதீ ஜெயஜெய  உயர்ஞான
அறிவ தாய்த்திகழ் ஆயீ ஜெயஜெய
மதுர வாக்கருள் வாணீ ஜெயஜெய
அருள தாய்ப்பகர் தாயே ஜெயஜெய  புவிமீதே
குருவ தாய்த்திகழ் ரூபீ ஜெயஜெய
திருவ தாய்த்திகழ் நீலீ ஜெயஜெய
குறைக ணீக்கிடு சீலீ ஜெயஜெய  நிதியாவும்
குணம தாய்த்தரு சூலீ ஜெயஜெய
துணைபு மாய்ப்பரி பாலீ ஜெயஜெய
கொடுமை நீக்கிடு காளீ ஜெயஜெய  யனபால
கருணை யாய்த்தரு வாயே யிகபர
சுகம தாக்கியு ஞதா ரசரண
கமல மேற்கதி நீயே யெனுமொரு  நினைவோ
கவிக ளாற்புகழ் நாலா வகையிலு
மிசைக ளாக்கியுன் மேலா மொருபர
கதியை யாக்கியு ளோா யொளிரவு  னருள்தாராய
சுருதி யேத்திடு மாதா மரகத
பவதி பார்ப்பதி பாலா பயிரவி
சுரர்க ளேத்திடு தேவீ கனவினி  லொருதாய்போல்
சொருப மாய்த்திகழ நாலாமறையொடு
சகல சாதத்ர ஞானே தய முறு
சுகம தாக்கிடு மீஞ ளருடரு  மெனதாயே.

51

## உபசாரம்

மத்தியமாவதி ]  "விகடபரிமள" மெட்டு  [ ஆதி

அகில முழுவது மருளிய அபிநவை
அகமு மெனதென வருமொரு அநுபவை
அப்பர்க்கு மொக்கயிட பக்கத்தி லுற்றிடவும்
அயிலை யுடையவர் மயிலினி லுடன்வர
அயனு மரியுமெ யிருபுற மொளிபேற

அத்தித்த லைக்கடவுள் மெத்தக்கு தித்துவர
அரிய கலைமகள் திருமக ளுடன்வர
அரிய தபசிக ளமரர்கள் புகழ்தர
அட்டத்தி ருக்கனொடு மெட்டுப்பு றத்திலுள
தொண்டர் கூட

அழகு விழுதிகழ் வடிவொடு மடியரை
அழையு முகமதி லிளநகை யுலவிட
அர்த்தபபி றைங்கிணையும் நெற்றிக்கி சைத்தவிரு
அளியை நிகரெனு மிருவிழி கருணையொ
டளவி யருளது சொரியவு மடியவர்
அச்சத்தி னைத்தவிர்செய் பச்சைக்க ரத்தழகொ
டரிய நறுமலர் தொடைகளு மணிகளு
மரையி லுயருடை யொடுமணி மகுடமொ
டிட்டத்தினைத்தரவல் பட்டுப்ப தத்துடனே
வந்துயேழை

இகம தனிலுள சிறுகுகை யதனிலு
மினிய விஜயம தருளுநி தினமுமென்
மெத்தக்க சித்தவுளம் வைத்துத்தொ டுத்தபுகழ்
இதனை யடிமைதன் மனமது குளிரிட
எதுகை யடிமுத லிவைவொடு பலபிழை
யிட்டுத்தொ டுத்ததென விட்டுத்தெ றிக்கவல
இறகு மணமது சிறிதுமி லருளொடு
இளகி யணியவு மருளுதி யினியென
திச்சைகத மெட்டும்வரை பக்ஷத்தொ டிட்டகனி
யுண்டுமேலும்

இனிய வமுதுட னொடியல்கள் பொடியல்கள்
இனிய கடலைகள் வடையொடு அடையுடன்
இட்டத்தொ டிட்டவெகு லட்டுக்க ளப்பவகை
எதிலு மினியதொர் பயசமும் வெகுவித
இதமு முடைபல யிடியல்க ளிவையொடு
இட்டுச்சு முற்றியமு றுக்குப்ப லிற்கிசைய
இடையி லொருபொரி வெகுவித வருவல்கள்
எடைக ளுடைபல விதசுவை யுளபொருள்
மெச்சிப்பு சித்திதழ்சி வக்கச்செய் வெற்றிலையு
முண்டுமேலும்

சகல உயிர்களு மகிழ்வுறு மிசைவகை
சகல வடியரு முருகரு முருகிடு
செக்கச்சி வத்தபெயர் பெற்றச்சு ருட்டி வகை
சரஸ மிகவுள பயிரவி பிலகரி
பரசு மரணணி முதலிய யிசைகளும்
சத்தத்தில் மெத்தவுயர் பெற்றுத்தொ னித்திடவல்
சகல தொனிகளு முரளிக ளினிமைகொள்
சகல கருவிகள் தமருக வகையொடு
மெத்தப்ப ஜித்துமுனை சித்தத்தில் வைத்துருகு
மிந்தவேளை

சகல பகைகளு மிடர்களு மகலவெ
சகல பிணிகளும் வினைகளு மொழியவெ
சத்துக்க ளூற்றசபை வைத்துப்பி ழைத்திடவெ
சகல நிதிகளு முயர்பெறு மதியொடு
சகல யிகபர சுகமது மருளியெ
தத்வப்ர ஸித்தியுள முத்தித்து றைக்குளனை
தழுவ விடவல புகழினை யநுதின
மழகு நிறையவெ மொழியவு மருளுதி
எத்திக்கு மெச்சுவெகு சித்துக்க ளூற்றபுகழ்
தந்துவாழ்வாய் ;

ககன மதையுள விடுவெகு சிகரமு
மகிமை மிகவுள மதுரையி லொளிபெறு
சொக்கர்கொ ருத்தியென பக்கத்தி லுற்றவுமை
கயிலை யெனவரு மயிலையி லொருதவ
மயிலு மெனவொரு மகபதி தனைமிக
கற்புற்று மர்ச்சனைசெ யொப்பற்ற கற்பகமெ
கனவு நனவிலு மடியர்க ளெதிரினி
லினிமை யொடுவரு மினலொளி வடிவினள்
கத்தித்து தித்துவரு பக்தர்க்கு முத்தியருள் மங்களாயி
கவுரி திரிபுரை யிமகிரி தருமகள்
பவதி பகவதி பயிரவி பரையும
கத்துச்சு டர்ப்பயில்மு கத்துச்சு டர்க்குள்வளர்
கனக நிறமுள பரசிவை நிருமலி
மனதில் விளையுமொ ரளியென முரல்ஜயை

சுத்தச்சி வப்பதம ளித்துச்சு கத்தை தயருள
கருணை பொழியிரு விழியொடு மிலகிய
பெருமை நிறையுமொர் புவியினி லரியதொர்
கச்சிப்ப திக்குள்வளர் சக்திப்ப ரத்தியென வந்ததாயே.

52

## அம்பாள் கொலு

புன்னுகவராளி ] "மந்திர மென்குவ" மெட்டு [ ஆதி

கங்கைய ணிந்தவ ரோடு வந்திட
பாகமு றைந்தழ காயி ருந்துமொர்
சங்கைய ணிந்தவர் தாள்பு கழ்ந்திட
நாலுமு கங்கொளும் வேத பங்கயர்
கண்டுந டுங்கியெ தாள்ப ணிந்திட
கார்முகி லென்னொரு மேனி கொண்டிடு
தந்தியோடே

கங்கையில் வநதெதொ ராறு திங்களு
மானமு கங்கொளும் வேலர் வந்துமெ
கொஞ்சுச லங்கையொ டாடி மிஞ்சிடு
மாவலு டன்மடி மீது றைந்திட
கஞ்சமு றைந்ததொர் மாம டந்தையு
மெங்குநி றைந்தருள் நாம டந்தையும் வந்துசூழ

மங்கையர் வந்தடி யேபு கழ்ந்திட
மாவடி யன்பர்கள் தாளப ணிந்திட
அந்தண ரும்மறை யேசொ றிந்திட
தேவர்கள் நின்றுமெ சீர்பு கழ்ந்திட
ரம்பையர் வந்தழ காய்ப ரந்ததொர்
மாநட னம்புரி சீர்சி றந்திட அன்புமீறி

வந்துனை யென்றுமெ பாடு மன்பர்கள்
மாவினை சிந்திட வேமு ழங்கிட
அஞ்சுபு லன்களை யேம றந்துமெ
ஆறுத லங்களி லேக லந்திடு
மந்த மிகுந்ததொர் மேனி கொண்டிடு
யோகியர் வந்தடி யேபு கழ்ந்திட சந்தமோடே

சங்கமு டன்திரு நாம மூந்தின
மோதிடு மன்பர்க ளேசி றந்திட
கந்தரை யண்டிமெய சீர்சி றந்தவர்
காலனை வென்றவர் மாசி லன்பர்கள்
சந்தத முப்புகழ் பாடி வந்திட
நாரத ரும்பல வாய்பு கழ்ந்திட அந்தமோடே
சஞ்சல முந்தவிர் தேனு வுந்திகழ்
ஓர்தரு வுங்குடை போல் தழைந்திட
பணடுகள் தந்திட மாம ரஙகளு
மாமலர் தந்திட வாச னம்பல
பொன்னொடு திங்களு மேதி கழ்ந்திட
மாவுடு வும்பல வாய்க்ர ஹங்களு யர்ந்து வீச
சிங்கமெ னும்பரி மீத மர்ந்தழ
கோடுமு கந்தனி லேம லர்ந்ததொர்
புன்னகை யுந்திகழ் சீரு மன்பரை
வாழவை கண்களும் பாதி யென்றதொர்
திங்களு மங்கொளிர் கார்க ருங்குழ
லோடுக ரந்திகழ் பாச வங்குசம் கொண்டுமேவி
சிந்தையு வந்துமெ காம கஞ்சியில்
சீலமு டன்சிவ காமசுந்தரி
அந்தமு டன்கொலு வோட மர்ந்துமெ
தாயென வந்தெனை யாளவென்றுமெ
சிந்தைய மர்ந்துமெ நானு மென்றுமெ
சீர்பெற மஙகள மேசிறந்திட வந்து வாழ்வாய் ;

53

## அருள் வேண்டல்

செஞ்சுருட்டி | குமரகுரு பரமுருக குகனேமெட்டு [ மிஸ்ர ஜம்பை

குமரிகுண தரிக வுரி மதுரா புரிக்கரசி
இமயகிரி தருகுமரி மயிலே கஜக்கடவுள்
குமரனிரு வரையுமரு ளுமையே நதிச்சடைய
—ரிடபாதிக்

குடையசிலை பரைபுனிதை லலிதே மலர்க்கமல
சரணுடைய ழதியமதி வதனீ யுனக்கடியர்
குறைகள்தமை வருமளவி லுடனே யொழிக்கவல
—அபிராமி

அமரர்பதி யரிபிரமர் முதலோர் துதிக்குமடி
அவனிதனி லுளசகல முநிவோர் வழுத்துமடி
அகிலமதை நொடியில்வலம் வருவேள் மதிக்குமடி
கணராயன்

அகமகிழ உரிமையொடு தினமே யுரைக்குமடி
அவைநடன மிடுமிறைவ ருடனே நடிக்குமடி
அருமையினி லருமையென மறையே யரற்றுமடி
அயிலாய்முன்

சமரமொடு படைகளுடன் வருசூர் துணித்தவடி
சயிலமதை ஒருநொடியில் முனமே யிடித்தவடி
தருமமிகு பலியினிட சிரமீ திருத்துமடி புவிமீதே

தவறுமிகு மிரணியனை அடியோ டறுத்த அடி
மடுநடுவில் வெருவுகரி வுயிர்மீ ளவைக்குமடி
தவமுடைய யினைவனுயிர் கொளவே யெனக்கருதி
வருகோர

எமனுடைய முடிசிதற விழவே யுதைத்தவடி
அடியருள மதில்மருவி அருளே கொழிக்குமடி
இனிமையுட னடிமைபுகழ் தனிலே சிறக்குமடி
துதியேசெய்

எளியனிக பரமதனில் நலமே தழைத்தொளிர
இருவினைமு மலமுமற வுனையே வழுத்தவருள்
எவையெவைகள் கருதிலவை யுடனே கொடுக்கவல
கமலாக்ஷி.

54

"அருணமணி மேவு பூஷித" மெட்டு

குந்தளவராளி ] [ சதுஸ்ரரூபகம்

கருணைவடி வாகி மாநில மதில்நவிலொ ணாத தாகிய
கனகநிற மேனி யோடென
கண்கட் கின்பைத் தருமாறும்

கமலமட மாதும் வாணியும் வலமிடம தாக வேயெது
　　கருதியதை யீயு மாறுமெ
　　கம்பர்க் கின்புற் 　　　　　　றிடமாகி
அருணர்சத கோடி கூடிய அரியதொரு ஜோதி வீசிடும்
　　அழகுடனெ காம கோடியில்
　　அன்பர்க் கின்பக் 　　　　　　கடலாகி
அருணகிரி நாதர் பாவினில் அருள்வடிவ தாக வேயுறும்
　　அறுமுகவர் பூணு வேலென
　　அன்பிற் றங்கிக் 　　　　　　களிதாயே
இருணிறையு மேழை மீதினில் அருணிறையு பார்வை
　　இருவினைகள் தீர வேயருள் 　　　　　　[யேகொடு
　　இன்புற் றென்சற் 　　　　　　குருவாகி
எமபடரை மோத வேசெயு மிரகஸிய ஞான வாளினை
　　எளியனினி தாக வேபெற
　　இன்புற் றன்புற் 　　　　　　றருள்வாயே ;
தருணமதி லேகி னேர்கழ லடியர்பகை கோடி சாடிடு
　　சரணமதை யேயெ ஞளுமெ
　　சந்தச் செஞ்சொற் 　　　　　　புகழோத
சகலகலை மேவு ஞானமு மெனையடைய வேகி வாழ்குவை
　　தமியனுள மான கோயிலெ
　　தங்கிக் கஞ்சிப் 　　　　　　பதிவாழ்வே.

55

சுத்தசாவேரி ] "ஆறுமுகம் ஆறுமுகம்" மெட்டு [ கண்டசாபு

பாதிமதி சூடுமொரு ஜோதிவடி வானவுமை
　　பார்வதிப ராபரையெயார் 　　　　　　கஞ்சிமேவும்
　　பாலையது கூலையெமை யாளுமயி லாபுரிக
　　பாலியிட பாகமுறை 　　　　　　அம்பிகேயென்
றோதியிரு பாதமலர் நாளுமிக வாசையொடு
　　ஓருமடி யார்களிட 　　　　　　பங்கில்மேவி
　　ஊழ்வினையி னுல்விளையு மேழ்ஜனன ஸாகரமும்
　　ஓர்நொடியி லேறவிடு 　　　　　　மந்த்ரரூபி
ஆதிமுத லாகியுள தாகியில தாகியுரு
　　வாகியரு வாகியொரு 　　　　　　பிந்துவாகி

ஆடுமயி லாகிடணி யாகியரு ளேபொழியும்
ஆறுமுக நாதர்மகிழ் அன்னையாகி
மேதினியி லேமைபடும் வேதனையெ லாமடிய
மேன்மைபெறு வாழ்வினைய டைந்துநாயேன்
மேருவிடை வாழ்வுறு மமைமதை ஞானமொடு
மேவிதின மோதவருள் தந்திடாயோ

56

இந்துஸ்தான்தோடி ] "ஓலமிட்டசுருமபு எனற" மெட்டு [ஆதி

சில முற்ற குணங்கள் உரோம் உரோமென
ஞான மிக்க நலங்கள் புகோம் புகோமென
தீமை யற்ற ஜனங்கள் ஐயோ ஐயோவென
சேவை மிக்க விரும்பி சுரீ சுரீரென [சிறுமையாளர்
காமன் விட்ட அரும்பு அளா அளாவியெ
தேடி வைத்த பணங்கள் சறேல சறேலென
மூலமிட்ட ரணங்கள் வெளீ வெளீயுற [நழுவியோட
நோய் மிகுத்த வுடம்பு சறேல் கறேலென
மூளை மிக்க மழுங்கி முனே பினேயென சிதைவுறுமல்
மோக மற்ற ஜனங்கள் குழா மதோடெனை
சேர விட்டு சரண்கள் கதி கதியென
மோன நித்த பதங்கள் யிதோ யிதோவென
அருள்செய்வாயே ;
பாலன் மிக்க நினைந்து அமா அமாவென
வாரிமெத்த மகிழ்ந்த உமா மனோரமை
பார தத்தை வரைந்த மஹா கணேசர்தன்
அருமையாயே
பாத பத்ம மிரண்டு செவேல் செவேலென
மேனி மிகக மிளிர்ந்து பசேல் பசேலென
பார்சி றக்க கரங்கள் தயா தயாவொடு அருளதிய
காலி லிட்ட சிலம்பு கலீர் கலீரென
நாசி யிட்ட அருங்கல் ஜிலீர் ஜிலீரென
காதி லிட்ட கலன்கள் பளீர் பளீரென ஒளிகள்வீச
காது மட்டு நெருங்கி மகா சிராகவெ
மீனை யொத்த கருங்கண் அளீ அளீயென
காம கச்சி யமர்ந்த க்ருபா கரீபர கருணைவாழ்வே.

57

அமீர்கல்யாணி ] 'எழுகடல் மணலை'' மெட்டு [ ஆதி

எவையெவை கருதி லவையவை யருளு
மெழில்மிக வுடைய தருவாகி
எனதிடர் கடிய இருவினை மடிய
எனதுள மருவி அருள்தாயே
அவைதனில் நடன மிடு பவ ரிடமெ
அழகுடனுறையும் அபிராமி
அசைவற நினையும் அடியவ ருளமெ
அழகிய திருவீ டெனவேகும்
சிவைபரை புனிதை திரிபுர வனிதை
திகழுமை விஜயை கலியாணி
திருவடி வுடைய திருமதி வதனி
திகழ்கிரி குமரி சிவகாமி
சுவைமிகு பதவி எளியனு மடைய
சுருதியி னரிய பொருளான
சுடரது அறியும் வகையது உதவி
துயரது வகல அருள்வாயே.

58

கமாஸ் ] ''அகரமுமாகி'' மெட்டு [ ஆதி

உருவமு மாகி யருவமு மாகி உணர்வது மாகி உயிராகி
உலகமு மாகி யதிலுள வாகி உததியு மாகி ஒளியாகி
ஒருமையு மாகி பலவையு மாகி உளமது மாகி ஒருமாய
உடலது வாகி அகமது வாகி ஒருதனி மூல நிதியாகி
திருவது வாகி கலைகளு மாகி திருமணி யாகி தருவாகி
சிவசுட ராகி தவமுடி வாகி திகழ்பர மாகி மறையாகி
குருமணி யாகி குணதரி யாகி குமரியு மாகி வருதாயே
குறைமுட னேழை நலமுற ஞான குருவென மேவி
யருள்வாயே.

59

பியாக் ] "வஞ்சசக லோபமூடர்" மெட்டு [ திஸ்ரரூபகம்

பஞ்சென ஓடி யாடி வம்பதெ நாளு மூடி
பந்தவன் மாயை சூழு மவநோயை
பண்புடை வாழ்வ தாக சிந்தனை நாளு மேகொள்
பண்பிலி ஞான வீடு பெறுமாறு
வஞ்சிதன் ரூப மோடு வந்தெனை யாளு மாறு
வந்துப தேச ஞான மருள் கூறி
வண்டென ரூபமாறி முன்படு ஜோதி யூடு
வந்தவி நோத ரூப மறவேனே ;

குஞ்சித பாத ரோடு ரஞ்சித மாக ஆடு
குஞ்சித பாத மாது உமைகாளி
கும்பிடு வோர்க ளோது வண்புகழ் கீத மோடு
கொஞ்சிய சீல மாக வருதாயே
கஞ்சியில் வாழு ஞான செஞ்சுடர் காம கோடி
கந்தனை யீயு மாயி முடிமீத
கங்கைகொள் ஆதி யீசர் பங்கினில் மேவு ஜோதி
கம்பர்தம் நாவி லாடும் அபிராமி.

60

மோஹனம் ] "விழையுமினி தரையுமுநி" மெட்டு [ கண்டசாபு

எழுதரிய மலர்முகமு மதிநுதலு மதனிடையி
லிட்டுச் சிவந்தஅம் பொட்டுத் திகழ்ந்துவந்
தஞ்சல்கூறும்
இருவிழியும் அடியரிடர் களையவல இடநகையு
மெற்றைக் குமன்பர்தம் சித்தத் துறைந்தருஞ்
செம்பொன்மேனி
பழுதறவெ ஒளிபெருகு வரிவளைகள் செறிவுறவே
பச்சைப் பசுங்கரங் கட்குச் சிறந்திசைந் தந்தமோடும்
பலமணிகள் கலகலென ஒலிபகர வளருமிரு
பத்தர்க் கிரங்குசெம் பத்மப் பதங்களுந் திங்கள்சூடுஞ்
செழுமுடியின் மணிமகுட அணிகளுட னழகுபெறு
செக்கச் சிவந்த பொன் வைததுச் சிறந்துறுங்
கொங்கைமேவித்

திகழுதுகில் கொடியிடையி லெழிலுடனெமணிகள் நிறை
சித்ரச் சதங்கையும் முத்துச் சரங்களுங்
கொண்டமார்புந்
தொழுதுவழி படுமடிய ரிருவினைமு மலமுமற
சுத்தச் செழும்பதந் நித்தித் துறும்பதந் தந்துநாளுஞ்
சுகமுறவெ யிகபரமு நலமுதவி யருளியருள்
சொர்க்கப் பதந்தருங் கச்சித் தலந்தனின்
தொண்டர்வாழ்வே.

## 61

மோகனம் ] "சீரான கோல கால" மெட்டு [ ஆதி

சீ ரான காம பீட மதிலுறை
மா மாயி வாலை நீலி பயிரவி
தே வாதி தேவர் பேணு மயிலுமை அபிராமி
ஸ்ரீ தேவி வாணி சூழ கொலுவுடை
கா மாரி சூலி ஆயி திரிபுரை
தீ யான யேக நாதரிடமுறை யுமையாளே
மா ருத நாலு வேத முகவனு
மா தேவ ரீசர் மாய னனைவரு
மா பூத மாக மாறி யழிவுகள் அடைநாளில்
மா காளி ரூப மோடு தனிமையில்
ஈரேழு லோக மீள வருள்செயு
மா தாயி மாயை சீலி யபிநவை யலைமாது
தீ ராத நோய்கள் தீர வெனவரு
ஓ ராறு ஜோதி வீசு முகவனை
சீ ராக யீயு மாயி மரகத சிவகாமி
சே யான வேழை மீதி லருளொடு
தா யாக மேவி ஞான வமுதினை
சீ ராக யீயு மாறு குருவென வருதாயே
கா ராரு மேனி ஜோதி ஒளிவிட
சீர் பாத பீலி வேத ஒலியிட
கா ணுத ரூப மேழை யடையவும் அருள்வாயே;
கா சீ பு ரேசி வேம னமலரில்
வா ஸீசு வாஸி னீய முகுமிகு
கா மாரி காம கோடி தனிலொளிர் கமலாக்ஷி.

62

கமாஸ் ] "வேதவேற்பிலே" மெட்டு [ ஆதி

காம கோடி பீடமேறி காண வேகும் அடியார்கள்
காம தாப லோப மான தோட வேசெய் குருவாகி
ஓம தாகு நாம ரூப மோபி லாத பொருள்காண
ஊமை யேனும் நாளு மேயு ணும மோத
அருள்வாயே ;
சோம ஞதர் வாம பாக மேவு நீல மயில்ரூபி
ஜோதியான யேக நாத ரோடுகூடு மபிராமி
சாமி ஞாத ரோடு யானை ரூப நாதர் அருள்தாயே
தாய தாகி லோக மேழும் வாழ வேசெய்
உமையாளே.

63

செஞ்சுருட்டி ] "நாலுமைந்துவாசல் கிறு" மெட்டு [ திஸ்ரஜம்பை

நாலு மைந்து வாசல் கொண்டு நாத பிந்து காயம் வந்து
நானெ னும்புல் வீறு கொண்டு புவிமேவி
நாடு மெங்கு மோடி நொந்து வேறு மங்கை
யோடணைந்து
நாயி னும்புல் வாழ்வு கொண்டு பிணிமூடி
சால நொந்து சீர்கு லைந்து ஊன முந்து நான்மெ லிந்து
சாகு மிந்த வாழ்வ கன்று துயர்தீர
தாயு மென்ற ஆசை கொண்டு யானு வந்து சீர்மி
குந்த
தாளை யென்ற ணுவல் மிஞ்சி அடைவேனே ;
பால கந்தர் மால்மி குந்து மார்ப ணைந்து மேயி றைஞ்ச
பார்பு கழ்ந்த வேலு வந்து அருள்தாயே
பார தந்த கோடு கொண்டு மேரு குன்றி லேவரைந்த
பாதி தந்த யானை கொஞ்சு மொருதாயே
கால ணிந்த தோர்ச தங்கை நாளு மஞ்சல் கூர வந்து
கால னஞ்ச வாழ்வு தந்து அருள்நாதே
காள கண்டர் காமு றும்பொன் மேனி கொண்ட
ஜோதியம்பை
காம கஞ்சி மேவி வந்த கமலாக்ஷி.

64

கமாஸ்] "தமர குரங்களும்" மெட்டு [ஆதி

கருவின்ம றைந்துநொந் தேயு தித்து மிந்த
உலகினில் வந்துபந் தாதி யிற்சு முன்று
கருதிய லைந்துபொன் றேடி கட்டி வந்து
மதமுடைக் கரிபோலே

களவுநி றைந்தசண் டாள ரிச்சை கொண்டு
நீதிகளு மந்தமும் போக விட்டு நொந்து
கவலைமி குந்துளஞ் சீர்மி கக்கு லைந்து
வறுமையிற் றவியாமே

தருமம்நி றைந்தசிந் தாத சித்த டைந்து
தயவுமி குந்தவுன் பாத பக்தி கொண்டு
தவநிலை நின்றுநின் கீத மிக்க பண்கள்
பகருமச் சபையோடே

தமியனை யுந்தினஞ் சேர விட்டு முன்றன்
மகிமைசி றந்துறுங் கோயில் சுற்றி வந்து
சகமகி ழும்பெறும் பேறு கிட்டு மந்த
வரமெனக் கருள்கூர்வாய்;

அருணனு மஞ்சுசெஞ் சீர் மிகுத்த அம்மை
மதிநுத லுங்கருங் காரை யொத்த கொண்டை
அழகுநி றைந்தசெஞ் சேலை யொத்த கணகள்
முறுவல்மிக் குடைவாயும்

அடல்மிகு வங்குசம் பாச மிக்கு அம்பு
மணிகள்நி றைந்தசெம் பாத பொற்சிலம்பும்
அணியுடை செம்பொனுஞ் சேரு முத்த ணிந்த
மகுடம்வைத் தழகோடே

கருணைமி குந்துவந் தேக னத்த கஞ்சி
நகரிலு யர்ந்திடும் பீட முற்று கந்து
கமலப தங்களின் சீர்மி குத்த பண்பை
அடியவர்க் கருள்தாயே

கலைமக ளும்புகழ்ந்தே வலத்தில் நின்று
திருமக ளுஞ்சிறந் தேயி டத்து றைந்து
கருதிய அன்பருஞ் சீர்மி குத்தி லங்க கருணைமிக்
குடேயாளே

65

நடபைரவி ] "பதுமவிருசரண்" மெட்டு [ ஆதி

எழுதரு வடிவுங் கண்கட் கினைபைத்
தரவல முகமும் பண்புற் றின்புற்
றிலகுபு னகையுங் கொஞ்சத திங்கட் ப்ரபைவீசும்

எழிலுடை நுதலுந் தொண்டர்க் கின்புற்
றாள்பொழி விழியுங் கொஞ்சச் சந்தித
திணையுபு ருவமுஞ் செம்பொற் பண்புத திருமேனி

பழுதற ஒளிருஞ் சந்த்ரப் பண்பைக்
குலவிய முகுறுங் குட்டக் கொங்கைப்
பசுமைநி றமுடன் செங்கைச் சம்பைக் கொடிபோல

படியுமி டையுடன் கொணடச் செம்பொற்
றுகிலமு குடனுங் கொஞ்சிக் கஞ்சிப்
பதியில டிமைதன் சிந்தைக் கஞ்சத் திடையூறி

ஒழுகிடு மமுதங் கண்டுற் றின்புற்
றதனில நுதினங் கொஞ்சித தங்கித்
தொனியிடு அளியென் றெனபக் கின்புற்
றுறைறவாயே ;

உலகுகள் பலவுந் தந்துப் பின்புச்
சிறுமியெ னவருஞ் சுந்தரப் பணபிச்
சுருதிமு றையிடுங் கஞ்சச் செம்பொற் கழலாளே

சழுகுக ளிலையுங் குனறத தன்புற்
றுறையும் அறுமுகன் டண்புச் செம்பொற்
கரமதி லொளிருந் தங்கத துங்கத் திருவேலே

கனவுந னவிலுஞ் சிந்திக் கன்பர்க்
கதிகரு ணையுடன வந்துற் றின்பக்
கடலென ஒளிருமி ரிந்தைக் கஞ்சிப் பதிவாழ்வே.

66

கமாஸ் ] "சொற்பிழைவ ராமல்" மெட்டு [ ஆதி

அற்பமது வான இகச்சுகத் தைக்குறித்து
அற்பனை வாள ரகத்திறத் தைத்துதித்து
அற்பவிலை வான பொருட்கனக்கக்குவித்து மடவார்கள்

அற்பசுக வாழ்வ தனைச்சிறக் கப்பணித்து
கைப்பொருள்கள் யாவு மறப்பிணிக் குட்டவித்து
அற்பனென யாரு மிகச்சினக் கத்தலத்தி லழியாதே

கற்பகம தாக உனைக்கருத் திற்பதித்து
சிற்பரம தாக மனத்தகத் திற்பதித்து
கற்றறிவு யாவு முனைத்துதிக் கச்செலுத்தி பலகாலும்

கச்சியபி ராமி சிவர்க்கிடத் திற்றரித்த
பச்சையுமை காளி பரத்திவெற் புக்குதித்த
கதபரசி வாணி மனக்குகைக் குட்செழித்த பரயோகி

சொற்குமதி யான சிவப்பதத் தைக்கொடுத்து
மற்புதமெய் ஞான தவத்தினர்க் குக்கனதத
சொர்க்கமது யீயு மணித்திருப் பொற்பதத்தி கலியாணி

சொக்கர்சிவ காமி யிணைப்பதத் தைத்துதிக்கு
பக்தபரி பாலி மயிற்பரிக் குட்செழித்த
சுத்தவடி வேல வரைக்களிப் புற்றளித்த
உமையாள்தான்

பொற்கமல பாத மதைக்கனக் கத்துதித்து
சொற்பிழையி லாத திருப்புகழ்ச் சதமிட்டு
பொற்பதவி யேழை பெறக்களிப் புற்றளித்து
பெரிதான

புத்தியொடு வாழ வெனைச்சிறக் கப்பணித்து
முத்தவடி யாக வடித்துணைப் பற்றளித்து
பொற்கழல்கள் மீது லெனைக்களிப் புற்றமைத்து
அருளவாயே.

## 67

**ஜனரஞ்சனி ] "கதிரவனெ ழுந்து லாவு" மெட்டு [சதுஸ்ர ரூபகம்**

கயிலையிலெ ழுந்த நாதா துயிலுடைய ரங்க நாதர்
கமலமத டைந்த வேதர் அடிபேண

கலைமகள்சி றந்து சூழ மலர்மகளு வந்து பேண
கரிமுகனெ ருங்கி வாழ மடிமீதே

அயிலொடுவி ளங்கி ஆறு முகமொடுதி கழ்ந்த நாதர்
அடியர்களி டைஞ்ச லோட அருளிய

அமரர்கள டங்கி சூழ அடியர்கள்பு கழ்ந்து பாட
அழகுடன மர்ந்து காம கலையோடே

ஒயிலொடுசி வந்த மேனி வடிவொடுதி கழ்ந்த ரூபம்
ஒளியொடுசி வந்த ஆடை யுடனே தான்
ஒருமதிய ணிந்து மாலை மணிகளும ணிந்த தான
ஒருகொலுவி ருந்த கோலம் அருள்வாயே ;
மயிலுடையர் தொண்டர் வாழு மலர்மகள்ம கிழ்ந்து லாவு
மயிலையில மர்ந்த நீல மயில்மாதே
மதுகரவினங்கள பாடு மதுரையில்வி ளங்கு ராணி
மகிமையொடு கஞ்சி வாழும உமையாளே.

68

மால்கோஸ் ] "ஆசைகூர் பத்த" மெட்டு [ ஆதி

காமபீ டத்தி லேறிவாழு சக்தி காளிகா யதரி மகமாயி
காமரா ஜர்க்கு வாமபா கதந் காமகோ டிக்க ருணைவாரி
கோமளே கச்சி யாமளே முத்தர் கோருமோர் சுத்த சிவமாதே
கோபமே யற்ற யோகமா சித்தர் கோயிலே புக்கு அருள்மாதே
ஓமதா யுற்ற நாமமே நிதம் ஓதியே பத்ம மனதாலே
ஓமகா வர்ச்ச ஞதியே யிட்டு ஒருமே மைக்குன் அடி தாராய்;
சாமகா னத்தி லாவலே மிக்கர் சார்பதா யுற்ற சிவகாமி
சாமிஞ தர்க்கு மானைபோல் வர்க்கொர் தாயதா யுற்ற உமையாளே.

69

சுபபந்துவராளி ] "மருவே செறித்த" மெட்டு [ ஆதி

பவமே மிகுத்து படிமீ துதித்து
பசியே மிகுதது கொடிதான
பவமே யிழைத்து நிதியே திரட் டி
படுபா வையுற்று அழியாதே
தவமே மிகுத்த பெரியோர் விதித்த
தவறு நெறிக்கு நிகராக
தமியே னுகித்த முனையோ தியிட்டு
சரணு னமுக்தி யடைவேனோ ;

சிவமே சிவத்தி னிடமே செழித்த
திகழ்வே தவத்தின் முடிவான
திருவே துதிப்பர் தருவே சிவத்த
திருமே னிபெற்ற உமையாளே
சிவகா மிசக்தி யுமைகா ளிபகதர்
சிதரு தசித்த முறைவாளே
சிவஞா னசித்தி பரஞா னமுத்தி
திகழ்மா கடைக்க ணுடையாளே.

70

தேவகாந்தாரி ] "ஆறுத ஞான புத்தி" மெட்டு [ ஆதி

ஆசாபி சாசினைத் தொலைக்க விட்டதும்
கோபாதி தீயினைத் தணித்த தவித்ததும்
ஆராத காத லைத்தொலைக் கவிட்டதும் நெறிகாணு
ஆசார ஈன மரைப்பிரித தொழித்ததும்
சீராக வேல ரைத்துதிக் கவைத்ததும்
ஆகாத வாழ்வினைத் தடுத தொழித்ததும்
ஆசார வாழ்வினைக்களித் தளித்ததும் [மறையோதும்
பூஜாதி யோடுனைத் துதிக் கவைத்ததும்
ஆதார மாமயனைச்சிறக் கவைத்ததும் பலகாலும்
ஆவேச மாயுனைத் துதிக் கவைத்ததும்
மேலான ஞான பக்தியைக் கொடுத்ததும்
ஆசார்யை யாயெ னக்கநுக் ரகித்ததும் மறவேனே;
பேசாத மோன நித்தமுத தளித்தியும்
வேதாதி ஞான சித்திலயக் கொடுததுமெ
பேசாத யோக மெய்த்தவத் தினர்க்கருள பரயோகி
பேர்நாளு மோதி சிக்கெனப பிடித்தவர்
சீராக வாழ வைத்தவர்க கும்மெய்த்தகவ
பேருன வீடினைக் கொடுக்கு மற்புத முடையாளே
தேசாய னேம லர்க்குளுற் றசக்தியு
மீரேழு லோக முற்றளித தசக்தியும்
சீராக யீசர் பக்கமுற்ற சக்தியும் அடியார்கள
சீர்காண வேணை புக்குநிற் குசக்தியும்
தேவாதி தேவ ரர்ச்சனிக குசக்தியும்
சீர்காண கோடி கச்சிநிற் குசக்தியும் எனுமாயே.

## 71

அடாணு ] "ஒருபொழுது மிருசரண" மெட்டு [ சங்கீர்ண சமபை

திருவடிவு மலர்முகமு மோதிப் பாடி தெரியேனே
திரியுமன தையுமுனது பாதத் தேவைத் துணரேனே

கருமையுடன் வருமறலி ஆவிக் கோதிக் கொடுபோது
கவலையுட னுழலுமொரு வாழ்வைத் தேடித் தவியாமல்

பெருகருணை புரியுனது பாதச் சீரைப் புகழோதி
பெருநெறியொ டருள்சிறையும் வீடைத் தேடிப்
பெறுவேனோ ;

திருவுடனெ கலைமகளு மேவிச் சூழக் கொலுவோடே
திருமயிலை தனிலுறையு மாசற் றோர்கற் பகமாதே.

## 72

செஞ்சுருட்டி ] "குகைமில் நவநாருஞ்" மெட்டு [ சதுஸ்ரஜமபை

சதுர்மறைக ளோதியும் பரந்த
உபநிடத ஞானமும் ப்ரபஞ்ச
சகலகலை நுலகளுந் தெரிந்து மதனோடே

தரையில்வெகு கோடியந் திரங்கள்
அளவிடவொ ணாததந் திரங்கள்
சகலவித மானயந் திரங்கள் பலவையாவும்

அறிகமது வாயறிந் திருந்தும்
மனமுயல மோடுழன் றிருந்த
அவாகளொரு நாளுமுன பதங்கள் அடையாரே ;

அமலமன தோடுளன் றுழுந்தன
அரியபுக ழோதுமன பா அந்த
அறிவிலிக ளாகினும பதங்கள பெறுவார்கள் ;

இதுவிதம தாயறிந் துளன்றன்
இருவினைகள தீரவெம் றுவந்துன்
இணையிலொரு கோயிலின் கணவந்து பலகாலும்

இணையடிகள் பாடியென் றழுந்தன
அடியரொடு கூடுமன புதந்து
இகபரமு மேழைபங் கில்நின்று அருள்வாயே ;

பதுமவிரு பாதமுங் கசிந்த
கருணைவிழி யோடுமென் றுமன்பர்
பவவினைகள் ஓடவுந் திகழ்ந்த நகையோடும்
பலமர்கள் பாணமுங் கரும்பு
சிலையுமொரு பாசவங் குசங்கொள்
படியிலரி தானகஞ் சியின்கண் உறைதாயே.

73

நாட்டை ] "கைத்தலநிறைகனி" மெட்டு [ ஆதி

பக்தர்க ளுளமதில் நித்தமு முறைபவள்
பக்ஷமொ டவரிடர் களைமாதே
பச்சையு மைகவுரி யிச்சையொ டரனிட
பக்கம தனிலுறை சிவகாமி
கக்கித ரனுடனெ அத்திமு கனையருள்
சக்திச கலவுல கருள்தாயே
சக்கிர முடையவர் அப்பரு மயனுமெ
சத்குரு வெனவடி புகழ்தாயே
சிதகர் களமரர்கள் முக்தர்கள் முனிவர்கள்
சித்துறை தருவென வருதாயே
சிற்பர மதுதரு கச்சியி லுறைசிலை
சிற்சொரு பமெனவெ ஒளிதாயே
முத்தமிழ் கொடுவினை நித்தமும் வழிபடு
முக்தர்க ளொடுமுன தடிபேணி
முக்தியை யெளியனு மெத்தவு மடையவு
முற்றது ணையெனவெ அருளவாயே.

74

செஞ்சுருட்டி ] "கருவினுருவாகி வநது" மெட்டு [ திஸ்ரசாபு

பவவினைக ளேமி குந்து கருவினிடை யேபு குந்து
படியதனி லேவி ழுந்து வடிவாகி
பளபளென மேனி கொண்டு மதலையென வேதி கழ்ந்து
பருவமதி லேவ ளர்ந்து பெரியோனுய்
அவகுணமு மேமி குந்து அறநெறிக ளேது மின்றி
அரிவையர்க ளோடு முன்று பிணிமூடி

அழகுடைய மேனி மங்கி வறுமைகளு மூடி நொந்து
அழியுமொரு வாழ்வ டைந்து உழலாமல்
தவநெறிக ளேத ழைந்து அடியருட னேயி ரண்டு
சரணமதை யேபு கழ்ந்து புவிமீதே
சகமகிழும் வாழ்வ டைந்து பவவினைக ளேக ளைந்து
சடமுடனே வீட டைந்து மகிழ்வேனோ ;
சிவனுடைய வாம பங்கில் எவையுமருள் தேனு வென்று
திகழுமொரு ஜோதி யம்மை சிவகாமி
தினமுமுனை யோது மன்பர் திருவுளமெ கோயில் கொண்டு
திருவுடனெ காம கஞ்சி யுறைதாயே.

75

சங்கராபரணம or தோடி ] " அஞ்சுவித பூத " மெட்டு [ ஆதி

விந்துகரு வோடி வந்ததொரு காய
மிந்தவடி வாகி புவிமீதே
விந்தையது வாய்வ ளர்ந்து பெரி தாகி
விந்தையுற யானெ னதுமாகி
இந்தவுல கேழு முன்றனது மாய
மென்றுசிறி தேனு முணராது
எநதனது யாவு மென்றகொடி தான
இந்தவினை யோடு அழியாமல்
சந்ததமு மேகி நின்றனது தாளை
சந்தமொடு பாடி அடியார்கள்
சங்கமதை நாடி சிநதையொடு கூடி
தன்சொருப ஞான மடைவேனோ ;
கந்தரவ ரோடு தந்திமுக வோரை
கண்குளிர யீயு மபிராமி
கங்கைதலை மீது கொண்டசிவ னோடு
கஞ்சிநகர் வாழும் உமையாளே.

76

மாளவி ] " ஓங்குமைப்புல " மெட்டு [ ஆதி

ஏங்கி யிங்குழல் ஏழை சிறக்கும் படிஞானம்
ஈந்து வந்தெனை யாள நினைத்தன் பதனாலே
தாங்கி யன்பர்கள் சீர்பெ றவைக்கும் பதமீதே

தாங்கி யிங்கெனை வாழ விதித்தின்    றெனையாள்வாய் ;
வாங்கு நுண்ணிடை யோடு சிறக்குங்    கலியாணி
வாஞ்சை மிஞ்சிடு மாசில் மனத்தன்    பர்கள்வாழ்வே
காங்கை யன்புகழ் தாயு மெனப்பண்    பொடுவாழும்
காஞ்சி யொண்பதி மீது சிறக்குங்    கமலாளே.

77

" இயலிசையி லுசிதவஞ்சி " மெட்டு

பந்துவராளி ]    [ ஸங்கீர்ணத்ரிபுடை

கடலனைய கருணை யின்பொற்    பதறுலே
கனவுநன வினுமெ வந்தித்    துனைநாடி
திடமுடனெ யுனது செம்பொற்    பதமோதி
தினமுமுன தருளை யும்பெற்    றிடுவேனோ ;
சுடரளைய சொருப மும்பெற்    றுறைதாயே
சொலவரிய வருள்த ருங்கற்    பகமாதே
நடனமிடு பவரி டம்புக்    குறைமாதே
நகரிலரி தெனுமொர் கஞ்சிப்    பதிவாழ்வே.

78

தோடி ]    " கனகசபை மேவும் " மெட்டு    [ ஆதி

மதுரைநகர் மேவி மகிமையொடு வாழு
மரசிசிவ காம    உமையாள்காண்
மலரடிகள் மீது மருவுமடி யார்கள்
மனதில்விளை யாடும்    உமையாள்காண்
மதுரமொடு பாடி தினமுமடி பேணும்
அடியர்வினை சாடும்    உமையாள்காண்
மயிலுடைய வேலர் புகழுடையர் வாழு
மயிலைநகர் மேவும்    உமையாள்காண்
எதுகையொடு மோனை அடிசொலிவை யோடு
எளியர்துதி பூணும்    உமையாள்காண்
எவை யெவைகள் கோரி லவையவைக ளீயும்
இமயமயி லான    உமையாள்காண்

பதுமமலர் மாது மரியகலை வாணி
பரிவுடனே சூழும் உமையாள்காண்
பதமடியர் காம மதனையருள் கோடி
பரிசுடைய பீடம் உறைதாயே.

79

ஸஹாநா ] " அபகார நிந்தை பட்டு " மெட்டு [ ரூபகம்

மிடியா லுழன்றுமிப் புவிமீதே
வினையா ளனென்றுமப் பெயரோடே
கொடிதா னதுன்பமுற் றழியாமல்
குணமோ டுமுன்றனைப் பணிவேனே ;
வடிவே லனைங்கரற் கொருதாயே
மயிலா யிருந்தஅத் தவமானே
அடியார்கள் சிந்தைபுக் கருள்தாயே
அரிதான கஞ்சிநற் பதிவாழ்வே.

80

கதனகுதூகலம் ] "விறல்மாரனைந்து" மெட்டு [ ஆதி

பவநோயமி குந்து கருவேபு குந்து
படிமீதில வந்து வடிவாகி
பசியேமி குந்து மிடியாலு ழன்று
பதர்போல லைந்து பொருள்தேடி
அவமாயை கொண்டு விரகேமி குந்து
அநியாய வம்பு மிகமூடி
அனைவோரு மஞ்ச அனலேமி குந்து
அறிவேயி ழந்து அழியாமல்
தவவாழ்வு கொண்டு னருளேபு கழ்ந்து
தமியேனு முன்ற னிருதாளில்
தவறுத சிந்தை மலரேகொ ணர்ந்து
ததிநாளும் வந்து பணிவேனே,
சிவமாது தொண்டர் பரிபாலி மங்கை
சிவகாமி சிந்தை மணிமாதே
திருமாதொ டந்த கலைமாது கொஞ்ச
திகழ்ஜோதி கஞ்சி யுறைவாழ்வே.

81

கரகரப்பிரியா ] "மருவே செறித்த" மெட்டு [

பதமே நினைக்கும் அடியாரை யொக்க
பரிவாய் நடித்து புகழ்பாடி
பலபேரு மெய்க்க விழிநீர் பெருக்கி
படியே புரட்டும் ஒருகோர
மதமே பிடித்த பொடியாரை மிக்க
மரியாதை யிட்டு மதியேபோய்
மலைபோ லருட்கு நிதியே மதிக்கு
மரசே யெனப்பல் அரிதான
விதமே துதித்து நிதியே பெருக்கும்
விதியே யெனக்கு விதியாமல்
விமலே விணைக்கு மணலே ஒளிக்கு
மினலே துதிப்பர் உளமேவி
நிதமே நிலைத்து பவமே யொழிக்கு
நிமலே தவததின் முடிவாளே
நிஜமே தழைத்து நெறியே நிகழ்த்தி
நினையே துதிக்க அருள்வாயே.

82

மோகனம் ] "பக்கரைவி சித்ரமணி" மெட்டு [ ஆதி

பச்சைநிற முற்றவுமை யிச்சையுட னப்பரிட
பக்கமதி லுற்றவொரு சிவகாமி
பக்தரிட சித்தமதி லுற்றமவ ரிட்டமதை
பக்ஷமொடு நித்தமருள் கலியாணி
இச்சைமிக பட்டுமன மிக்கமுறி பட்டுழலும்
இச்சமய முற்றதுணை எனமேவி
இப்புவியி லச்சமற வைத்துமுன்ம லர்ப்பதவி
யிட்டுமெனை முக்திபெற அருள்வாயே ;
அச்சமுடன் எச்சமய னத்தினரு மெச்சிமுத
லர்ச்சனைசெ யததிமுக னுடனேமுன்.
அச்சமரி லுற்றசுர ரைத்தொலைய சக்திவிடும்
அச்சிறுவ ரைத்தழுவு மபிராமி

கச்சிதனி லிச்சையொடு சித்திகள ளித்திடவெ
கற்பகவி ருக்ஷமென அடியார்கள்
கட்டியதி ருக்கவியி லெப்பொழுது முற்றுமவர்
கட்டமத வித்தருளு முனமையாளே.

83

கமாஸ் ] "அகரமு மாகி" மெட்டு [ திஸ்ரதிரிபுடை

பகவதி யாகி யிகமது மாகி பயிரவி பரமாகி
பகிரதி யாகி சுரர்பதி யாகி பரகதி யாகி பணிகூடும்
மகபதி யாகி ரகுபதி யாகி மலரவ னாகி கலையாகி
மயிலவ னாகி முதலவ னாகி மலர்மக ளாகி மகதேவர்
சுகவதி யாகி குருபதி யாகி கருதியு மாகி சுடராகி
சுவையது வாகி தவமுடி வாகி துணையது வாகி சுகமாகி
ஜகபதி யாகி அகமது மாகி சகலமு மாகி அருளாகி
தமியனை நாளு முயர்பெற வேசெய ஜககுரு வாகி
அருள்வாயே.

குந்தளவராளி ] 84 [ ஆதி

வறுமைக் கோளர்கள் கூட்டத்தை நாடியெ
கருமைப் பாம்பிணி மூட்டத்துள மூழ்கியெ
மருவித் தேடிய தேட்டத்து ளேதுமெ நிலையாதே
வறுமைத தீயினில் வாட்டப்பட் டேயுடல்
உருகிப் போகுமு னேட்டத்தி லோடியெ
வனசத் தாளினி லேற்றிக்கொள் வாயெனை மறவாதே
உருகித் தாள்பணி கூடத்து ளேயெனை
உறுதிப் பாடொடு சேர்த்திட்டு நாளுமுன்
உயர்நற் கீதமெ கோஷ்டிக்க வேமனம அருளாயோ ;
உறுமிப் பாய்புலி சீற்றத்தை மீறிடு
மறலித் தூதுவர் பார்ததுப்பி னோடவெ
உறுமித் தூரம தோட்டிட் டுமேயருள் புரிவாயே ;
அருமுத் தாலிழை மூக்குத்தி யோடொளிர்
முகனிற் சீரகை வர்ய்த்திட்ட சீரொடு
அளியைப் போலுரு மாற்றிட்டு ஜோதியி னிடையூடி

அருமைக் காட்சியில வாய்த்திட்ட காமினி
பெருமைச் சீரடி யார்க்கருள் பூரணி
அடிமைக் கோர்குரு வாய்த்தல மீதினி  லொருநாளே
இரவிற் சீர்கன வாய்ப்பட்டு நீயினி
மனதைக் கூறிடு சீற்றத்தை யாளென
இனிமைக் காதினி லேத்திட்ட தாயுமை  திருநாமம்
இனியப் பாரினி லேத்திட்ட யோகிகள்
உளமெய்க் கோயிலில் பூத்திட்ட பூவென
எளியர்க் கோர்துணை யாய்க்கச்சி மேவிடும்  அபிராமி.

85

தோடி ] " அலலி விழியாலும " மெட்டு [ ஆதி

அஞ்சு மலரோடு மிஞ்சு மருளோடும்
அந்த நிறைவோடும்  வந்துமேவி
அஞ்சு மடியாரகள் சிந்தை தனைநாடி
அஞ்ச லெனநாளு  மன்புகூர்உன்
செஞ்சொன் மறைநாலும் சங்க மெனவோதும்
செங்க மலபாதம்  என்றுமோதும்
செஞ்சொலடியார்கள் சங்க மதைநாடி
செய்ப தவிநாளும்  என்றுசேர்வேன்;
செஞ்சு டரதாக வந்த வடிவேலர்
சென்று உலகோடி  வந்துசேர்முன்
சென்று உனையோடி வந்து வலமாகி
செங்க னிகொள்யானை  தந்ததாயே
கஞ்சி நகர்மீது உன்ற னடியார்கள்
கண்கு ளிரவேநி;  றைந்ததாயே
கங்கை தலைமீது கொண்ட சடைநாதர்
கண்டு களிகூர  நின்றதாயே.

86

மிஸ்ரஜம்பை ] சங்கராபரணம (கமாஸ்) [ கண்டசாபு

ஒருவரையு மொருவருமெ நிந்திக்கும் வாழ்வதனை
பெரிதெனவெ அகமகிழ சிந்தக்கு மானிடர்கள
உணர்வுவிழி சிறிதுமற மங்கிட்டு மேதினியி
லதிபோமரன்

ஒருருமமதை யதிகமென கொண்டுத்தன் மாயைதனி
லுலகமதை யொருநொடியில் வஞ்சித்து யாவுமென
துடைமையென நினைவதுமெ கொண்டுப்பெண
மோகமதெ டலகாலும்

கருதியவர் மனமகிழ வந்தித்து நாளுமன
முருகிதன மதனைமிக விண்டிட்டு மோகமிகு
கரியெனவெ யதிவிரகு கொண்டிட்டு நோய்கள்பல
பலமூடி

கருமையென உடல்குறுகி வந்திட்டு கோரவடி
வதனுடனெ வறுமைகளு மிஞ்சிட்டு பேயுயிரை
கடுகவெ நமனிடமெ தந்திட்டு மேதினியி லழியாதே

தருமமொடு மறைகளறை யந்தச்சன் மார்க்கமதை
அநுதினமு நெறியுடனெ ஒன்றிட்டு நாளுமுன
தடியிணையை மலர்களொடு வந்தித்து மேன்மையுட
னடியேனித்

தருணமதி லுனதருளை யும்பெற்று பார்புகழ
இகபரமு மகிமையுட னினபுற்று வாழவுமிச்
சடமுடனெ எளியனுமு னனபுற்ற பாதமதை
அடைவேனோ;

திருவடிவு மலர்முகமு மம்பொனத்த நோவிழியு
மிளநகையு மதிநுதலு மனமுற்ற பார்வையொடு
தருவருளு மனநெகிழ்வு மிஞ்சிட்டு லோகமுழு
தருள் தாயே

சிவனுடைய யிடமதனி லினபுற்று வாழுமுமை
குமரிகுளை தரிகவுரி கஞ்சிகருள மேவிவளர்
தருவினொடு கலைகளும் வாழ்த்தவேதகமும் அபிராமி.

87

சங்கராபரணம் | "அஞ்சுவித" மெட்டு | ஆதி

அஞ்சுவித ஆசனங்கள் தனிலேறி
அஞ்சுமலர் பாண மொடுபாசம்
அங்குசமொ டோர்க ரும்புசிலை யோடு
அன்புநிறை பார்வை யொடுமேவி
தஞ்சமெனு மேழை துஞ்சுமொரு வேளை
சஞ்சலமதோட உளமேவி

தங்கியதில் நாளு மஞ்சலது கூறி
சம்பிரம மாக அருள்வாயே,
பஞ்சவித பாத கம்பொடிய தாகி
பஞ்சென வெயோட விடுதாயே
பண்புடைய மேனி கொண்டசிவ யோகி
பண்புடனெ காணு மொருஜோதி
வஞ்சியபி ராமி மங்கைசிவ காமி
வண்டமுகி யீன மயில்மாதே
மங்களம தோடு கஞ்சிநகர் மேவி
வந்தகுருவான எமதாயே.

88

செஞ்சுருட்டி ] "ஆசைநாலு சதுரக்கமல" மெட்டு [ ஆதி

வேத மோதுமுயர் பெற்றநெறி சற்றுமிலன்
மாத ராசைமிகு சிற்றறிவு முற்று முளன்
வீண ரோடுதின முற்றுஅவ முற்றவொரு
சிந்தையோடே
வீர மோதிவரை யற்றமத முற்றசட்ன
கார மோடுகச டுற்றஅச டுற்றமடன்
வேக மீறிமதி யற்றநிதி யற்றகுலம் வந்தமுடன்
பீதி யானசெய லுற்றஅறி வற்றமலன்
சூது வாதுபவ முற்றவொரு பற்றுடையன்
பீடை மூடிபவு ஷற்றபுவி யிற்றிரியும் நிந்தையேகொள்
பேரு கூடுமல முற்றவெறி யுற்றுலக
சேறி லூறியழி வுற்றுபிணி யுற்றுபலர்
பேசு மாறுவிதி யற்றுகதி யற்றுலகில் மங்குவேனை
பாத மோதியுனை நித்தமதி பக்தியொடு
பேணு மாவடிய ரைத்தழுவி யிட்டு புகழ்
பாடி நாளுமொரு சித்தமொடு முக்திபெற இந்தவேளை
பாரி லோருடலி லுற்றதரு வொக்கயிரு
காதி லோர் அரிய சொற்குமுறை செப்பியெனை
பாத மீதணைய இற்றைதின முற்று அருள் தந்திடாயோ;
காத லாகியொரு சொக்கரிட பக்கமுறை
பாதி யாகியுல கத்தனையு மெத்தவருள்
காவ லாகியுன பக்தரிட சித்துகுடி கொண்டதாயே

காசிமாமயிலை கற்பகமெ னத்திகழு
 மாசி லாமதுரை புக்குஅருள மிக்குடைய
 காம கோடிதனில் முக்திபருள் சகதியென
 வந்ததாயே.

89

மோஹனம் ] "கோவைச்சுத்த" மெட்டு [ ஆதி

காலச் சக்ரத் திட்டுசு ழற்றப் படுவேனை
 காயச் சிக்கிற் கட்டிய ழுத்தப் பெறுவேனை
சீலச் சக்திப் பத்மப தத்தைப் புகழ்பாடுஞ்
 சேமத் திட்டுச் சுத்த சுகத்தைத் தருவாயே ;
வேலைச் சுற்றிச் சுத்தசு ரர்க்குப் பதமீயும்
 வீரச் சக்திச் சுப்ரம ணிக்குப புகழ்தாயே
சூலர்ப் பக்கத் துற்றல கத்தைப் பெறுமாதே
 சோதிச் சித்ரக் கச்சிந கர்ப்புக் கொளிர்தாயே.

90

சங்கராபரணம் ] "காதிமோதி" மெட்டு [ மிச்ரஜம்பை

சூது வாது மாதாசை நாடித் திரிவோர்கள்
 சூல பாணி யோர்பாதி வாழ்வைத் துதியார்கள்
பீதி யான மாகோர பாபச் செயலோர்கள்
 பீதி சூழ பாதாள லோகத் துழல்வாரே ;
நாத கீத வாகீச்வ ரீநற் புகழ்பாட
 நாளு மேவி சீதேவி பேணப் பெறுவாழ்வே
ஆதி யான மூலாதி மூலப் பொருளாளே
 ஆவி யாகி யீரேழு லோகத் தொளிர்தாயே.

91

சங்கராபரணம் ] "காதிமோதி" மெட்டு [ மிச்ரஜம்பை

காம மீறி மாரோக மாதுக் கிரையாகி
 காசு வீசி வீணுகு வாழ்வைக் குறியாதே
சேம மீயு மாதார பாதத் தினைநாடி
 தேவி தேவி தேவீ யெனுமெக் குருகேனோ ;
தீமை தீர வாயார நாமத் திறமோதும்
 தீதி லாத மாஞான சீலர்க் கருள்தாயே ;

காமகோடி மாயோக பீடத் துறைவாழ்வே;
ராஜ ராஜ ராஜேஸ்வ ரீகற் பகமாதே.

மோகனம் ] 92 [ ஆதி

உனதுபத பக்திக் கெனவாழும்
உனதடிமை யெமத்தக் கதியாகி
மனதுருகி பக்கத் துணைகோரும்
மனுசெவிகொ டுத்துத் தயைகூர்வாய் ;
எனதுமனை மக்கட் குறுநோயகள்
எளிதினி லகற்றித தருவாயே ;
தனதரிய சக்திக் கெதிர்காணு
தனிமுதல்வி கச்சிப் பெருவாழ்வே.

93

ஸஹானு ] "அபகார நிந்தைபட்" மெட்டு: [ ரூபகம்

சிவகாம சுந்தரித திருநாமச்
செபமான மந்திரத் துணையாலே
அவமாய சஞ்சலக் கடலேறி
அறியாத நின்பதத் துறுவேனோ ;
தவமான சிந்தைபுக் குறையாதே
தமியேனு ளந்தனிற் க்ருபையாகி
சிவவாம பங்கிலுற் றருள்தாயே
செகமேழி லும்புகழ்ப் பெருவாழ்வே.

மோகனம் ] 94 [ ஆதி

மனிதவுட லம்புழுத் தழியாமுன்
மறுபிறவி வந்தெனைத் தொடராமுன்
உனதரிய சந்நிதற் புகழாலே
உனதுபத முந்துதித் திடுவேனோ ;
இனியெனது ம் நதனிற் க்ருபையாகி
இகபரசு கந்தனைத் தருவாயே
தனதடியை நம்பினர்க் கருள்தாயே
சகலவித மங்களப் பெருவாழ்வே.

95

ஷண்முகப்ரியா ] "வரதா மணிநீ" மெட்டு [ ஆதி

தனனு தனனு தனதான.

எனதா குயிர்நீ யெனநாளும்
இசைவா யுளமீ தினிலோரும்
குணமா தவரோ டுறவாகி
குடிபா ரமெலா மெளிதாகத்
தனமோ டவர்கோ ரியதீயுஞ்
சதுர்வே தபரா பரவாழ்வே
கனமா மதுரா புரிவாழும்
கருணை கரியே எனையாளே.

96

ஸஹானா ] "அபகார நிந்தைபட" மெட்டு [ ஆதி

இனிதாகு முன்திருப் புகழ்தானும்
செகமேழி லும்ப்ரசித் தமுமாகக்
கனிவாகி நினறிசைத திடுவோர்கள்
கடையேற சுந்தரக் கதிதாராய்;
தனையோது மன்பருக் குறவாகித்
தனமேரு தங்கிடச் செயுமாயே
கனவாழ்வு தந்தசற் குருவாகிக
கலியாணி கஞ்சிநற் பதிவாழ்வே.

97

தோடி ] "அல்லி விழியாலு" மெட்டு [ ஆதி

சொல்லி வருகாது மெல்ல வருகாலன்
எள்ளி யெனதாவிக் கணுகாமுன்
தொல்லை வினைதீர நல்ல கதிசேர
அல்லல் படுவேனுக் கருள்வாயே
அல்லி மலராளும் வெள்ளை யுடையாளும்
அள்ளி மலர் தூவிப் புகழோதும்
அல்லி யடிநாடு முள்ள முடையோர்கள்
இல்ல மதைநாடித் துணையாகி
முல்லை நகைசேரு மல்லி முகமோடு
மில்லில் விளையாடிக் குடிபாரம்

இல்லை யெனவாரி யள்ளி நிதிசேரு
நல்ல தொரு வாழ்வைத் தருமாதே ;
தில்லை நடராஜர் வெல்ல வியலாத்
வல்ல நடமாடிப் புகழ்கூடுங்
தில்லை யுமைகாளி எல்லை யிலதான
வல்லமைகொள் வாளைத் தொடுமாயே.

98

நாதநாமக்ரிய ] " சிவனார் மனங்குளிர " மெட்டு [ சாபு

அடியார்ம னங்குளிர வதனார விந்தமதில்
அழகோடி லங்குநகை விளையாடும்
அபிராம சுந்தரிதன் அடியேபு கழ்ந்தவர்கள்
அழியாவ ரம்பெறவும் அருள்தாயே
குடிபார முன்றனது பணியாவு மிங்கெனது
எனவேநி தம்புகழு நெறிகூடும்
குணமேசி றந்திடவு னருளேநி றைந்திடவென்
உளமேபு குந்தெனது கொடிதான
மிடிதீர வும்பெரிய குறைதீர வும்பழைய
வினைதீர வுஞ்சகல நிதிசேரும்
இகவாழ்வு தந்துனது சரணார விந்தமதை
எளியேன டைந்திடவும் அருள்தாராய் ;
படிமீது கஞ்சிநகர் தனிலேய மர்ந்தடியர்
பகைகோடி யுங்களையு மெனதாயே
பலகாலு முன்சரண மலர்மீது தஞ்சமென
மலர்தூவு மன்பருள முறைவாழ்வே.

99

அடாணா ] " ஐந்து பூதமு " மெட்டு [ சாபு

ஐந்து மாமலர் பாண மினியக
ரும்பு சாபமொர் பாச மதனுட
னங்கு சாதிக ளோடு மெழிலுறு கரம் நாலும்
அன்பு மீறமு லாச முகவர
விந்த மீதரு ளேபொ ழியுமிரு
சந்த்ர சூரியர் போல விழிகளு மொளிவீசும்

இந்து வாணுத லோடு முலவிய
மஞ்சு நேர்குழல் மீது மகுடமு
மிங்கி தாம்ருத ஞான மொழிதரு — மிதழ்மீதே

என்று மேவியு லாவு மிளநகை
செம்பொ னுடையு மாலை மணிகளும்
விந்தை யேதரு பாத மலர்களும் — மறவேனே;

அந்த மாதியி லாத பயிரவி
சந்த்ர சேகரி நீலி நிருபலி
மங்க ளாயிவ ராகி பகவதி — யுமைகாளி

அன்பி னுலுல கேழு மருளிய
தந்த்ர ரூபிச ராச ரமுமருள
அண்ட நாயகி ஆயி குணவதி — சிவகாமி

கந்த னோடுவி நாய கனையருள்
மங்கை மாகரு ணைக ரிகுமரி
கங்கை மேவிய காசி நகநுறை — அபிராமி

கண்ட போதினில் மாயை கெடவருள
மந்த்ர ரூபிம னோம ணிகவுரி
கஞ்சி மாநகர் மீது லொளிதரு — மொருவாழ்வே

100

அட்டாணு ] "ஐந்து பூதமு" மெட்டு [ சாபு

கந்த னேகதி யாக வடிதொழு
மந்த நாளெனை பேணி யினியருள
கண்டு நீகரை யேறு வெனவுள — மகிழுமாறு

கணக ளாலருள் வீசி வினையொடு
பந்த பாசமெ லாம கலவெகு
பண்க ளாலெனை யோதி மகிழுன — வருள்தாயே;

இந்த காளொரு பாவி யிடியெனு
மந்த நாசக னோடி மடியவு
மெந்தன் மேலரு ளாகி யிகபர — சுகமோடே

எந்த ஞானமும் யானு மடையவு
மிங்கு காலன்வ ராது யெனதுள
மெந்த நேரமு மேவி யருளது — புரிவாயே;

சந்த கீதமொ டேழை மொழிதரு
பண்கள் மீதிரு தாளி னருளது
தங்க வேயித மீயு மமையுமை சிவகாமி

சம்பு மோகினி சூலி திரிபுரை
தன்ப பேதினி நீலி பயிரவி
சண்ப காடவி சாரு மநுபவை கலியாணி

தந்த்ர வாதிகள் காண வரியவள்
சிந்தை யாணவ மாயை கருமம
லங்கள போனவர் காண வெளியவள் அபிராமி

சந்த்ர சேகரர் மாலு மயனுமெ
வந்து பாதமு மோது மிமையவள்
கஞ்சி வாழ் மக மாயி வருடரு மெமதாயே.

101

மோகனம் ] " கமல மாதுட " மெட்டு [ சாபு

கருவில் நாலறு திங்க ளிருந்தொரு
குழவி யாகவீ ழுந்து நிலந்தனில்
மனித னுகிவ ளர்ந்து திறமபடு பெரியோனுய்

கனக மாமணி தங்கி விளங்கிடு
மகல மார்பில கந்தை நிரம்பிட
கலக மேசிறை வம்பி னர்சங்கம தனைநாடி

தெருவின் வாசலி ருந்து மகிழ்ந்தவர்
வலையி லாடவர் வந்து விழுந்திட
சிறிது மார்புதி றந்து நலங்கிய சிகைகோதி

திரியு மோகம டந்தை யர்பங்கினி
லளவி லாதும யங்கி தனங்களு
மழிய வேபிணி வந்து ள னொந்துயிர் விடலாமோ

உருகி நாளுமு னன்பு சிறந்திடு
மடியர் வாழுமி டங்க ளடைந்தவர்
உடன ளாவிய கந்தை யகன்றுன தருள்காண

ஒருமை யாகிய சிந்தை யடைந்துன
தருள்வி லாசமி குந்திடு மொண்சர
ணுவகை யோடுப ணிந்தி டுமன்பினை யருள்வாயே.

மருவி லாதசு கந்த ருமங்களை
கருதி யோதுசு தந்த ரிசுந்தரி
மதுரை வாழுசு மங்களவம்பிகை யுமைகாளி
உனச மாதுயி டந்த னில்நின் றிட
சரச வாணிவ லந்திகழ் பண்புடன
மகிமை யாநகர் கஞ்சியில் வந்தொளிர் எனதாயே.

## 102

பூபாளம் ] " குவளை பூசல் " மெட்டு [ சாபு

நிலையி லாவுல கத்தைநி ரந்தர
மெனவி சாரணை யற்றும யங்கியுள்
நெறியி லாபல வற்பசு கந்தனில் மனமூறி
நிகரி லோமென மெத்தவ கந்தைகொள
விலையின் மாதர்வ லைக்குள்வி ழுந்துதன்
நினைவு போய்மிடி யுற்றுமெ லிந்தொரு பிணமாகும்
உலக வாழ்வைய கற்றிநி தந்தொழும்
அடியர் நேசமி குத்துவு ளந்தனில்
உனது சேவடி பக்திபி றந்திட வறிவூறி
ஒருமை யோடுனை நித்தம் நினைந்துடல்
பொருளு மாவியு னக்கென வந்துள
முருகி யோதுசி ரத்தைமி குந்திட வருள்தாராய்
கலைகள நாயகி சிற்சுக சுந்தரி
பெரிய நாயகி சுத்தசு தந்தரி
கருது மாறருள் கற்பக வம்பிகை எனதாயி
கனக மேனிப டைத்தசு மங்கலை
சிவைம னோமணி ருத்ரிப ரம்பரி
கனவி லாளுமை சக்திதி ரியம்பகி கலியாணி
தலையி லேவய னிட்டவ ரம்பினை
அழிய வேவிடு மற்புத சுந்தரி
தருண மேவியி ரட்சைபு ரிந்தரு ளபிராமி
சகல தேவரு மர்ச்சனை தந்தமை
யருளு மாயென மெச்சுநி ரந்தரி
சகல காரணி கச்சியில் வந்தொளிர் உமையாளே.

103

பூபாளம் ] " குவளை பூசல் " மெட்டு [ ஆதி

அகில லோகம ளித்தசு தந்தரி
புவன மோகன வற்புத சுந்தரி
அருள்வி லாஸினி சக்திதரி யம்பகி எனதாயி

அமல நாயகி சிற்சுக மந்தரி
நிமல நாரணி நித்யசு மங்கலை
அரனு மேபுகழ் பத்தினி சங்கரி யுமைமாது

சகல காரணி சத்திய மங்களை
இமய ராஜன ளித்தபெ ருந்தகை
தருண மேதிட பக்தர்வி ரும்பிய தருள்தாயே

சரச வாணிவ ழுத்திடு சண்டினி
கருணை வாரிதி கற்பக வம்பிகை
சமய மாறிலு முற்றருள் தந்திடு மபிராமி

பகலி ராவிலு மெச்சம யங்களு
மிடைவி டாதெனை நற்றுணை கொண்டருள்
பதிர காளிப ரத்திப யங்கரி கலியாணி

படியி லேபர வித்தைகள் தந்தெனை
அழிவி லாதிக முக்தியு டன்திகழ்
பகரொ ணாபிர சித்தம டைந்திட வருள்தாராய் ;

புகழு மாதவர் சித்தமு றைந்தவள்
எனது யான்முழு தற்றவர் பங்கினள்
புவியி லேழுபி றப்புமொ ழிந்திட வருள்மாது

புனிதை பூரண வித்தைத ருஞ்சிவ
இரவி லேகன விற்படு மம்பிகை
புவியி லேபுகழ் பெற்றிடு கஞ்சியி லுறைவாழ்வே.

104

காம்போதி ] " சுடரனைய " மெட்டு [ ஜம்பை

கடலனைய சமுசார மதனில்வரு பலகோடி
கலிகளொடு மிடிமூழ்கி யழிவேனைக்
கருணையொடு கரையேறும் வகையருளி மிடிதீர
கனகமழை யிதுவேளை பொழிவாயே ;

திடமனது முழுதோடு நினது புகழ் பலபாடி
திருவடிய ரொடுகூடி மகிழ்வேனோ ;
திருவடிவி சிவகாமி ஜெயமருளு மபிராமி
செகஜனனி கலியாணி மகமாயி

சடைமுடியர் நடராஜ னிடமருவு மலைமாது
சகலசுக மருளாயி திரிசூலி
சடையழகி நிருவாணி திரிநயனி கவுமாரி
தருணமதி லருளசிலி உபகாரி ;

அடலுடைய வுமைகாளி கருணைமிகும் விடமூணி
அமரர்பதி அயன்மாலும் அடிபேணும்
அடியருட னுறவாகி எவைகருதி லவையியும்
அருளவடிவி கலையாவும் அருள்தாயே.

## 105

மோகனம் ] " பந்தப்பொற " மெட்டு [ த்ரிபுடை

சந்திததுப் பேசவொ ணாதது
கணசுட்டிக் காணவொ ணாதது
தன்மைக்குத் தூரம தானது பண்பிலாத

தந்த்ரத்திற் காணவொ ணாதது
மந்தர்க்குத் தூரம தானது
சங்கித்துச் சேரவொ ணாதது எங்கு மோடுஞ் ;

சிந்தைக்குத் தூரம தானது
வம்பிட்டுத் தீரவொ ணாதது
செஞ்சொற்குக் கூறவொ ணாதது ஒன்ற தாகுஞ்

சிந்தைக்குட் சோதியு மாயுல
கெங்குற்றச் சீவனு மாய்வெளி
சந்தற்றுப் போய்நிறை வாகிய ஒன்று நீயே

பந்தப்பற் றேதுமி லாதுனை
நம்பிப்பொற் பாதம தேகதி
யென்றுற்றப் பேரடி யார்கள்ம கிழ்ந்து பேணப்

பண்புற்றுத் தாயென வோருரு
வம்பெற்றுப் பாரினி லேயுனை
வந்தித்துச் சீர்பெறு மாறருள் மந்த்ர

சந்தச்சொற் பாவொடு பாடியு
    னன்னைப் பெற் றேயடி யார்நிறை
    சஙகத்தைச் சேரவு ளூரருள் தந்திடாயோ?
தந்திக்குத் தாயென வேலுடை
    கந்தர்க்குத் தாயென வேயுயர்
    கஞ்சிக்குட் பார்புகழ் ஆயென வந்த தாயே.

106

கதனகுதூகலம் ] "விரல்மாறனைந்து" மெட்டு [ஆதி

எனையாள வென்று ஒருநாளு வந்து
    இரவோடி வந்து கனவூடே
    எழிலான மங்கை வடிவாகி நின்று
    இனிசீப தங்கொள் எனமேவி
சினமேயொ ழிந்து எனையே நினைந்து
    திருவாய் மலர்ந்து எனையோதி
    திருவேய டைந்து சிவஞான முண்டு
    திகழ்வாயெ னுஞ்சொல். மறவேனே;
கனவான தின்று நிசமாக வந்து
    கலிதீர வென்றன் முனமேகி
    கலியாண மங்கை வடிவோடு யின்று
    களிகூர வந்து னருள்தாராய்;
தனியாக வன்ப ரிடமேவி நின்று
    ஜயமேபு ரிந்து தயைகூரும்
    சகமோது கஞ்சி நகர்வாழு மம்பை
    சலகாக மங்கள் புகழ்தாயே:

107

நாதநாமக்ரியை ] "சங்கைதான்" மெட்டு [ஆதி

அந்தநாள் நின்றபா பங்களா லிந்தநாள்
    விந்தையாய் வந்தகாயம்
    அந்தகோ நின்றிடா தம்பிகே முந்திநீ
    வந்துகா வென்றநாளுஞ்
சந்தமோ டுன்றன்மே லன்பதால் வந்துநீ
    தந்ததோர் பண்களாலே

சங்கைதா னின்றிநா னுன்றன்பா தங்களே
தஞ்சமாய் வந்துபாடுஞ்
சிந்தையே கொண்டநா னுய்ந்துஞா னங்களோ
டென்றுமா னந்தமாகச்
செம்பொனே தந்தசீர் பொங்கவே வந்துநீ
எனறமே டொன்றிவாழ்வாய;
செந்தில்வாழ் கந்தவேள் தந்ததாய தொண்டர்பால்
அன்பு பூண மங்களாயி
திங்கள்சூ டும்பிரான் பங்கில்வாழ் மங்கையே
கஞ்சிவாழ் எங்களாயே.

மோகனம் ] 108 [ சாபு

சந்த்ர சேகரி சாமள சுந்தரி
எங்க ளாய்சிவ காமசவுந்தரி
சண்ப காடவி வாழ்ஜக தம்பிகை த்ரிபுராயி
சண்டி நாரணி நீலிசு தந்தரி
அண்ட நாயகி பார்புக ழுந்தரி
சம்பு போகினி சீலிசு மங்கலே யுமைகாளி
மந்த்ர ரூபிம காபர தந்த்ரி
யந்த்ர மேருவில் வாழ்புர சுந்தரி
மாலங்க மாலொடு நானமுக னும்புகழ் அபிராமி
மஞ்சள பூசிய கோமளே குங்குமம்
இந்து வாணுதல் மீதொளிர் மங்களே
வந்து மேகதி நீயெனு மன்பர்தம் உளவாழ்வே
எந்த நாளுமு னைரருள் பொங்கிட
என்று மேபுகழ் பாடியு முய்ந்திட
இங்கி தாம்ருத மாமொழி தந்தது மறவாத
என்றன் மாவினே யேகவு கந்தினி
தென்றன் மாமிடி தீரவி ரைந்தெனே
இந்த நாள்நிதி யாவுமடைந்திட அருள்வாயே;
கந்த னேடுக ஜானன னுந்தரு
மம்பை மீன்விழி யாள்பர குண்டலி
கண்ட மாதவர் யோகியர் பங்கினி னுறைவாழ்வே
கங்கை யாளர்ச தாசிவ னும்புகழ்
அன்ப ராருயி ராணப ரம்பரி
கஞ்சி வாழ்மக மாயிச கம்புகழ் எனதாயே.

தன்யாசி ] 109 [ ஆதி

கருவிலினி வந்து பிறவாதே
கருமறலி கண்டு மருளாதே
இருவினையொ ழிந்த நிலையோடு
இகபரசு கங்க ளருள்வாயே ;
கருணையொடு கஞ்சி நகர்மேவும்
கனவிலருள தந்த அபிராமி
அருமறைகள் கண்டு மறியாத
அதிசயமி குந்த எனதாயே.

யோகனம் ] 110 [ ஆதி

சரணகம லங்க ணிதமோதி
சகலவித சஞ்ச லமுமோட
இரவுபக லென்ற னுறவாகி
இகபரசு கங்க ளருள்வாயே ;
பரகருணை மிஞ்சு மபிராமி
பரசிவனி டங்கொள் உமைமாது
அரியயனு மென்று மடிபேணும்
அருமைமிகு கஞ்சி நகர்வாழ்வே

111

சுத்தசாவேரி ] "வசனமிக வேற்றி" மெட்டு [ திரிபுடை

மனிதவடி வாக்கை யழியாமுன
மனதுளுனை யேததி அடியேனும்
இனியுமைக டாக்ஷ மதனாலே
இகபரசெள பாக்ய மடைவேனோ ;
கனவிலெனை யாட்கொ ளபிராமி
கவுரிகம லாக்ஷி யுமைகாளி
புனிதையென மாட்சி யுடன்வாழும்
புவனமுழு தேத்து மொருதாயே.

112

"வசனமிகவேற்றி" மெட்டு

விதிவழியி னேட்டில் நலியாதே
மிடியுமெனை வாட்டி யழியாதே
நிதிபலவு மாக்கி யெனைமேவி
நினையறியு மார்க்க மருள்வாயே ;

அதிசயப ராக்கி ரமமோடே
நாட்டி யமுமாடி
கதிதருக டாக்ஷ மதனாலே
சகலவுல யருள்தாயே'

113

கானடா ] "அந்தகன் வநந்தினம்" மெட்டு [ சாபு

சஞ்சலமி குந்திடும் புவியினிற்
சஞ்சிதமி குந்தெழுஞ சடமொடுத்
தன்சதியு மைந்தருஞ் சதமெனத் தடுமாறிச்
சங்கடமி குந்திடுந் துறைகளிற்
சென்றுளாமு டைந்திடும் படிமிகத
தந்த்ரமி குந்துநொந் துயிர்பிழைத் திடுவேனைத்

தஞ்சமென நம்பிவந் துனதருட்
செஞ்சரண பங்கயங் கதியெனச்
சந்ததமு மன்புகொண் டுருகுமப் பெரியோர்கள்
சங்கமதை யண்டிநின் றிருவருட்
பண்களைமொ ழிந்துநின் றுனதருட்
சம்பிரம மின்றுகந் தெளியனுக் கருள்வாயே

குஞ்சிதந டந்தருஞ் சிவனுமச்
சங்கொளத னந்தனந் தனவெனக்
கொண்டநட னந்தரும் பயமிகுத் திடுகாளி
குங்குமநி றங்கொளுந் திரிபுரச்
சங்கரிச கந்தொழுஞ் சிவையெனக்
கும்பிடுமு ளம்புகுந் தருளுமற் புதநீலி

கஞ்சியில மர்ந்தரும் பதமருட்
சுந்தரிசு கந்தருஞ் சரவணக்
கந்தனொடு தந்தியுந் தருமருட் கலியாணி
கங்கையணி சங்கரன் சதியெனக்
குங்குமம ணிந்திடுந் திருவெனக்
கண்களி லமர்ந்துளங் குளிரவைத் தருள்தாயே.

114

மத்யமாவதி ] "எத்தனை கோடி கோடி" மெட்டு [ ரூபகம்

எத்தனை கோப தாப மெத்தனை லோப மோக
மெத்தனை சூது வாது அளவேதோ
இப்படி வாழ்வு தோறு மிட்டதி பாவி யாகி
இப்பிற வாழி மூழ்கி யுழல்வேனை
சத்திய மான ஏக நித்திய ஞான ரூப
சத்தென வேதமோது மரிதான
தத்துவ ஞானமோடு அத்தமு மேலதாகி
சற்கதி கூடி வாழ அருள்வாயே ;
நித்தமு மாவலோடு பத்திர பாத மோது
நிட்டைய ரோடு நாளு முறவாகி
சித்தர்கள ஞானயோக சித்தர்கள் தேவர் பேண
நித்திய வாழ்வை யீயு முமையாளே ;
அத்தனும் வேதன் மாலு மர்ச்சனை யோடு சாரு
மற்புத பாத நீலி அபிராமி
அக்கண நாத னோடு சித்திர வேல னீயு
மக்ஷர ரூபியாகு மெனதாயே.

115

எதுகுலகாமபோதி ] "ஞானங்கொள்" மெட்டு [ ஆதி

வேதங்கள் பகரொணாத சிலங்கொள் கவுரி நீலி
யேவுந்த னடியர் வாழ வருள் தாயி
வேகங்கொ ளசுரர் மாள வாள் கொண்டு நொடியில் வீசும்
வீரங்கொள் பதிர காளி மகமாயி
பாதங்கள் கதிய தாக கீதங்கள் நிதமு மோதி
பாரின்க ணருளை நசடு மடியார்கள்
பாரங்கள் தனது மாக சேமங்கள் பலவு மாக
பாவங்கள் பொடிய தாக அருள்தாயே :
தாதந்த தனன தான தாதந்த தனன தான
தாதந்த தனன தான எனவேதான்
தாளங்க ளொலிகள் பாய வானந்த நடன மாடு
தாள்கொண்ட பரமர் பாக முறைதாயே ;

போதங்கொ ளறிவு மாகி லோகங்கள் புகழ்கள மாலை
பூணந்த பெருமை யோடும் அடியேனை
பூமங்கை யருளு மாகி நாமங்கை யருளு மாகி
போகங்கள பெருகி வாழ அருள்வாயே.

116

காம்போதி or கல்யாணி ] "கடிமா மலர்கரு" மெட்டு [ ஆதி

அருணை தயத்தை நிகர் சரணை னபாதமதி
னடலோ திந்தத முனை துணைசேதடும்
அடியே னையிப்புவியில் மிடிதி ரவைத் துனது
அருளை தழைத் தொளிர அருள்வாயே ;
கருணை கரிக்கவுரி சிவகா மிசித சொருபி
கதியே யளிக்குமொரு கலியாணி
கமலா சனதியொடு கலைமா துமெதகவிரு
கழலோ நிற்குமெழில் கொளுமாதே
குருநா தனக்குமர அறுமா முகததவனை
குணமோ டளித்தவுமை மகமாயி
கொடிபோ லலைச்சலொடு துணைதே டுபக்தரிடர்
குறைதி ரவைத்தருளு மபிராமி
சரணே யெமக்குகதி யெனவோ தியப்பரொடு
சதுர்மா முகத்தனரி தொழுமாதே
சகலா கமப்பொருளு மெனவா கிமுக்தியருள
சகமோ துகச்சியுறை எனதாயே.

117

சங்கராபரணம் ] "பாதிமதிநதி" மெட்டு [ ஆதி

பாதி மதியணி ஜோதி வடிவினள்
பாலை பயிரவி கவுமாரி
பாத மதைநித மோது மவர்குடி
பார மதுதன தெனவேகொள்
ஆதி பகவதி நீலி நிருமலி
ஆயி யநுபவை அபிராமி;

ஆதி ரையனுட னுடி யுலகுகள்
யாவு மருளிய உமைகாளி;
வேத முதல்விபு ராண பரசிவ
காமி மரகத மகமாயி;
வீரி விமலிவி சால விழிதிகழ்
தேவி திரிபுரை எனவோதி
பாத மெழிலது பாடு மெனதிடர்
பாவ வினைமிடி பிணிதீர
பாரில் நிதிபல வாகி பரகதி
காணும் வகைதனை அருள்வாயே.

## 118

ஆனந்த பைரவி ] "அதல சேட" மெட்டு [ ரூபகம்

அறிவி னோத சீரோடு
அரியின மீதி லேயேறி
அகில லோக மாதேவி கொலுவாகி
அமரர் சூழ மாதேவ
சபையில் ராணி யேயாகி
அரும் வேனை யேவீணை யுடன்மேவி
மதுர வாணி சீர்பாட
வனசை தாள மேபோட
மதன ராஜ னோநானு மெழிலோடே
மகிழு மாயி சீர்பாத
மதனை தேவ மாராஜன்
அயனு மாலு மாதேவர் புகழ்தாயே;
பதிர காளி காமாரி
கருணை வாரி மாமாயி
பரம யீச னுர்வாமி சிவகாமி
பவதி நீலி மாசூலி
யுவதி சீலி மாயோகி
லலித கௌரி மாமோகி எனுமாயே;

இதய மீது சீர்பாத
மதனை நாளு மேபூணு
மௌனியன் பாரி லேஞான முடையோனும்
எதிரி லாத சீரோடு
மிடிகள் நோய்கள் வாராத
எழிலீ னோடு மேவாழ அருள்வாயே.

119

கமாஸ் ] "காரணமாக" [ கண்டத்ரிபுடை

ஆதிமுத லாகி நின்ற பொருளே தான்
ஆகுவ னநேக மென்ற நினைவாலே
ஓதருச ராச ரங்கள் பலவாகி
ஊடுருவி யாளு கின்ற பரமாதே ;
வேதமுடி வாகு மெங்க ளபிராமி
தேவியென வாக மங்கள புகழ்தாயே
மேதினியி லேழை பங்கி லுறவாகி
மேன்மைமிகு வாழவு தந்து மகிழ்வாயே.

தன்யாசி ] 120 [ ரூபகம்

எனது மனத் துயர்தீர
இனிய தமிழ்க் கவிபாடி
தினமு முனைச் சரணாக
திருவ ருளைப் பெறுவேனோ
சினமு மொழித் திடுவோர்கள்
திருவு ளநற் பதிவாழ்வே ;
கனம துரைப் பதிமீதே
கருணை மிகுத் துறைதாயே.

121

பியாகடை ] "அம்பொத்த" மெட்டு [ ஆதி

சிந்தைக் கினிய சந்தத் தொனிகொள்
செஞ்சொற் கணிறைக் கவியாலே
செம்பொற் சரணம் நம்பித் தினமெ
சிந்தித் திடுமிச் சிறியேனை

எந்தத் திசையும் வந்தித் திடவுன்
விந்தைப் பதம்வைத் — தெனைமேவி
என்றைக் கும்வளர் சம்பத் துடனு
மின்புற் றொளிரத் — தயைகூர்வாய்
தந்தைக் கரிய செஞ்சொற் குரைசொல்
கந்தக் குகனைத் — தருமாதே
தம்பிக் குமுனம் வந்துக் கனிகொள்
தந்திக் கடவுட் — கொருதாயே;
தொந்தப் பிறவி யென்றக் கொடிய
துன்பக் கடலக் — கரைசேர
துங்கப் பதவி பன்பர்க் குதவி
சொந்தப் பரிவுற் — றருள்தாயே.

122

மோகனம் ] [ ஆதி

அவசர புத்தியை — அடையாதே
அவமிகு துற்செயல் — புரியாதே
தவமிகு சித்தம — துடனே நான்
சரணம தைப்பெற — முயல்வேனோ?
சிவனிட பக்கம — துறைமாதே
செகமுழு தைப் பெறு — மபிராமி
பவமொடு கச்சியி — லுறைவாழ்வே
பரகதி யைத்தரு — முமையாளே.

123

சிறுமைத னைத்தரு — மதியாலே
செகமதி லற்பனு — மெனவாகி
வறுமைமி குத்திடர் — பிணியாலே
மடிவதெ னக்கினி — வரலாமோ?
பிறவிய லைக்கட — லுழலாதே
பிரமப தத்தினை — யருள்வாயே:
அறுமுக னைத்தரு — முமையாளே
அருளொடு கச்சியி — லுறைதாயே.

124

நினது மலர்ப்பத மதைநாளும்
நிமல மனத்துட னரிதான

உனது திருப்புகழ் பலபாடி
உலகி னர்மெச்சிடு பெருவாழ்வும்

தனமி குமற்புத பவிசோடே
சகல சுகத்தையு மடைவேனோ

கனம தரைப்பதி தனிலேவாழ்
கதித ருகற்பக மெனுமாயே.

கேதாரம் ] 125 [ கண்டத்ரிபுடை

உவகையொடு மலர்ச்சரண மதைநாடி
உனதரிய திருப்புகழை நிதமோதி

அவதிதரு மனக் கவலை யதுதீர
அருமைமிகு பதத்தினையு மடைவேனோ?

பவதபக வதிக்குமரி உமைகாளி
பரமசுக மளித்தருளு மகமாயி

சிவனிடது புறத்திலமர் அபிராமி
செகசெனனி யெனத்திகழு மொருதாயே.

126

ஆபேரி ] "நகுமோ" மெட்டு [ ஆதி

வினையாலப் பிறவாகி
மிடியாலற் பனுமாகி

மனம்வாடிப் பிணிமூடி
மருள்வேனுக் கருள்வாயே:

கனியேகற் பகமேநற்
கதியேசிற் பரமேயென்

அனையேயற் புதையே நற்
கடலூர்புக் குறைதாயே.

127

[ ஆதி

ணம் ]

"நீலங்கொள்" மெட்டு

வேதங்க ளோதெங்க ளபிராமி
வீரங்கொள் வாளுங்கொ ளுமைகாளீ
பாதங்கள் ஓதென்ற னுளமேவி
பாரின்க ணோர்தந்து னருள்தாராய்
போதந் தரானின்ற எழில்சாரும் ;
பூமங்கை நாமங்கை புகழோதும்
சீர்தங்கு மோர்கஞ்சி நகர்வாழும்
சீரங்க னூர்தங்கை எனுமாயே.

கமாஸ் ]

128

[ ஆதி

இப்புவி முற்றிலும் நீயே யிவாய்
இப்பொருள் முற்றிலும் நீயே யாவும்
எப்பொரு ளுக்குளும் நீயே வாழ்வாய் எனவேதம்
இப்படி செப்பிட ஏனோ தானோ
சிற்சில வித்தக மேலோ ரானோர்
இச்சக மித்தைய தாயே கூர்வார் மனமேதான்
சொப ன வித்தென தானே யாயே
எப்படி யவ்வுல காயே தானே
துய்த்தநு விப்பது தானே யாமோ அதுபோலே
சுத்தத னிப்பொருள் தானே தானே
சித்துச டப்பொரு ளாயே தானே
துப்பற வுட்பொரு ளாயே தானே தனியாமே ;
அப்பொருள் பெற்றிட வானோர் மேலோர்
எத்தனை மெய்த்தவ மானா ரானோர்
அத்தவ மிச்சிறி யேனு லாமோ இயலாதே ;
அக்கதி யைப்பெற நீயே தாயே
தக்கண முற்றருள் தாயே போலே
அக்கறை யுற்றெனை மீளா வாளாய் அடிசேராய்!

ஒப்புயர் வற்றொனிர் சிவீ ஙிவீ
செப்பரி யப்பர மாதே நாதே
உத்தம பக்தர்க ளோடே வாழ்வா யவர்பாலே
உற்றரு ளொத்தரு தாயே மாயே
பற்றுடை யற்பர்கள் காணு சூலீ
உத்தமி கச்சியி லேவாழ் தேவீ எனுமாயே.

## 129

மத்யமாவதி or செஞ்சுருட்டி ] " சரணகம " [ சாபு

தரணிதனி லேமி குக்த வறுமையொடு நோய்களுற்று
சகலவிட ராகி நிதத முழல்வேனை
தருணமதி லேய டுத்து திருவருளும் நீகொ டுத்து
சகல செல்வ வாழ்வ ளிதது மகிழ்வாயே ;
சரணமடை வோர்கள் சித்த மெனுமரிய கோ யிலுக்குள்
சகலசுக வாழ்வ ளிக்க நினைவாகி
சகசமென வேவ சித்து சகலவினை தீர வைத்து
சமயபர ஞான சிதத மருள்தாயே ;
அரனயனு மாலு நித்த மடிபுகழு மாப கத்தி
அமரர்புகழ் தேவி மெத்த யிடமேவி
அலைமகளு மேவ லத்தில் கலைமகளு மேவி நிற்க
அரசியென வேசி றக்கு மபிராமி
பரகருணை வாரி பக்தர் பரமவுப காரி நித்ய
பதமருளு மாயி சக்தி யுமைகாளி
பரமகதி யீயு மத்தி முகவனொடு வேல்பி டித்த
குகனையருள் சிவி கச்சி யுறைவாழ்வே.

## 130

நீலாம்புரி ] " நஞ்சினைப் " [ ரூபகம்

வஞ்சகப் பேயர் புரி வஞ்சனைத் தீயில் விழும்
வண்டெனப் பாரில்மிக நொந்துநாயேன்
மங்கியெப் போது மிடி மிஞ்சியக் கோர பிணி
மண்டியக் கிணை நர கம்புகாமல்

நெஞ்சிலெப் போது முனை நம்பியெச் சிறு மருள்
நின்பதத் தாம ரைகள் தஞ்சமாகி
நின்புகழ்ப் பாடல் பல வின்புறப் பாடி யுன
திவ்கிதப் பேற ருளை என் று காண்பேன் ;
அஞ்சலைக் கூறி யருள் நங்கை நற்றுய்க வுரி
அன்பருக் கோர்து ணைவி எங்களாயி
அம்பலத் தாடு மவர் பங்கினிற் போய மரு
மம்மைசித் ரூபி சிவை மங்களாயி
கஞ்சியிற் கோயில் கொளு மங்கைபத் மாஸ னிச
கம்புகழ் தேவி பர மங்கைநீலி
கஞ்சமுற் றேயு றையு மம்மைநற் பார தியு
மென் றுநற் சேவை புரி எங்களாயே.

131

கலியாணி ] '' நிலையாக '' மெட்டு [ தரிபுடை

மணம்வீசி யமஞ்சளின் மீது யிடுகாவி நலங்கொடு காணும்
மணிநாத சிலம்புக ளோடு திகழ்பாத
மலரோடு சிவந்தபொன் மேனியதுமீது துலங்கிய வாடை
மணியோடு சலங்கைக ளாடி இடைகாண
மணிமாலை சுமங்கல நாணு மலர்மாலை யணிந்திடு மார்பு
மதியேம குடந்தனின மீது ஒளிவீச
மதிபோலு முகந்தனில் நாசி மணிவீசி யிலங்கிட சோபை
மிகுதாட கமுஞ்செவி மீது கதிர்வீச
அணிசிறு மலங்க்ருத மாக நுதல்மீதி டுகுங்குமமோடு
மிதழ்மீது தவழ்ந்திடு மோர்புன் னகையோடே
அருள்மாரி பொழிந்திடு பார்வை யொடுகூடி யகண்களும் நாளும்
மறவாது நினைந்திடு மேழை புவிமீதே
உணவோடு வுறைந்திட வீடு முலகோர்கள் புகழ்ந்திடு வாழ்வும்
உனையோதி யுணர்ந்திடு ஞான முடையோனும்
உனைநாடி நிதந்துணை தேடும் அடியேனை சுகம்பெறவேவை
இதுசால வுமுன்கடனாகும் எனதாயே.

132

கல்யாணி ] ‘ நிலையாத ’ [ த்ரிபுடை

அதிமோக மிகுந்திக வாழ்வில் பலதீமை புரிந்திழி வான
அதிகோர பயங்கரமான பிறவாழி
யதில்மூழ்கி யுழன்றிட ரோடு மிடியாகி கொடும்பல நோயு
மிகவாகி யழிந்திடு வேனை புவிமீதே
நிதமேயு னிதந்தரு பாத மனைநாடி யரும்புகழ்பாடி
நெறியோடு நினைந்திடு வோர்கள் உறவாகி
நிதிகூடும் நிரந்தர மான பரஞான மிகுந்திடு வாழ்வின்
நிறைவோடு திகழ்ந்திட வேயு னருள்தாராய
பதியான திகம்பர ரோடு வுலகேழு மகிழ்ந்திட வாயு
பவிசோடு சயம்பெறு காளி ஜகதீசை
பரமாது சுதந்தரி சூலி சிவகாமி சவுந்தரி நீலி
பரிவோடு பரந்தனை யீயு முமை மாதே ;
சதியான சிதம்பர மாது கலியாண சுமங்கலை யாகி
சகமேழு முகந்தருள் சீலி தினமானம்
தனையோதி மகிழ்ந்திடு வோர்கள துணையாகி சுகந்தரு
தேவி
தருவாகி நினைந்தவை யீயு மெனதாயே.

33

மோகனம் ] “ தந்தபசிதனை ” மெட்டு [ ஆதி

அந்தி பகலுமென்னை யண்டி யருள்புரியு
மம்பை யழகுமிகு மபிராமி ;
அண்ட முழுதுமருள மங்கை பரமசிவன்
அங்க மதனிலுறை சிவகாமி ;
எந்த வினையுமற எந்த பிணியுமற
எந்த மிடியுமற வுளமேவி
இங்கு சகலவித மங்க ளமுமுதவி
இன்ப பதமருளு மெமதாயே ;
சொந்த அமையெனவு கந்து னருளருளி
தொந்த பிறவியற எனைமேவி

துன்ப முழுதுமற இன்ப மனமுமுற
துங்க பரகதியு — மருள்வாயே ;
சிந்தை குளிரமலர் மங்கை யிடமுறைய
சென்று கலைமகளும் — வலமேவி
செம்பொன் வடிவழகும் திங்கள் முகவழகும்
செஞ்ச ரணவழகு — மகிழ்தாயே.

## 134

அடாணா ] "எந்தத்திசையினு" மெட்டு [ ஆதி

எந்தத் திசையினு முனதெழி லுலவிட
எந்தப் பதியினு முனதருள பெருகிட
எந்தக் குடியினு முனதடி புகழ்பெற — அடியேனும்
இன்பத் துடனுன தருளகொடு தமிழ்கொடு
சந்தத் துடனிசை யெழிலுட னுதவிய
இந்தப் புகழினை யநுதின மொழியிடு — மடியார்கள்
இந்தப் படியினில் மிடியொடு பிணிகளு
மெந்தப் பகைகளு மிடர்களு மறமிக
இன்பப் பவிசொடு நிதியது மிகுமொரு — பெருவாழ்வும்
இங்கெப் பொருளினு முறைபர மதனையும்
அந்தத் துடனொளி தினிலுறு திறமையும்
மிங்கப் பரகதி யதனையு முறவினி — தருள்வாயே ;
தொந்திக் கணபதி தனையரு ளுமையவள்
கந்தக் குமரனை யுதவிய யிமையவள்
சொந்தத் துடனர னிடமதி லுறையொரு — சிவகாமி
துங்கப் பதமதை யநுதினம் நெறியொடு
வந்தித் தனுகிடு மடியவர் மகிழ்வுற
சொந்தப் பழவினை யகலவு மருடரு — மபிராமி
சிந்தைக் கினியதும் அருளொடு நிறைவுறு
சந்தச் சுவையொடு பொருணிறை வொடுபல
செஞ்சொற் கணிறையு மிசையினில் மகிழ்வுறு
கலியாணி
செம்பொற் பதமதை மலர்மகள் கலைமகள்
வந்தித் திடுமொரு கொலுகொளு மெழிலொடு
சிந்தைக் குகையினில் மணியென நிதமுறை எனதாயே.

குந்தலவராளி ] 135 [ ஆதி

நாமென்று மாதடடி யழுயாமல
நாளும்ப ராசக்தி யருள்நாடி
ஞானங் கொள் போதத்தை யுடையோனுய்
ஞாலஞ்சி லாகிக்கும் நிலைதாராய் ;
மோனங்கொள் மாசித்த ருளம் வாழ
மோகங்கொள் கோலத்தி அபிராமி
தானென்று சாதித்து உலகீயும்
தாயென்று மேகச்சி யுறைவாழ்வே

பிலகரி ] 136 [ ஆதி

தீனனெனக்குத் துணைநீயே
தேவியெனப்பொற் பதம்நாடி
யானென தற்றுப் புவிமீதே
யாவுமு னக்கர்ப் பணமாக
ஞானமு முற்றுப் பவிசோடே
நாளுமி ருக்கத் தயைகூர்வாய் ;
யானமி ரட்சித் தருள்தாயே
மாமது ரைக்குட் பெருவாழ்வே.

137

மோகனம் ] “திமிரவுததி” மெட்டு [ ஆதி

அரனு மயனு மரியு மமரர்
பதியு மடிகள் நிதமோதும்
அமலை விமலை கமல நயனி
அழகி னழகி யபிராமி
சரண கமல மதனை நிதமு
மிதய கமல மதுமீதே
தவிழ மகிழு மடியர் மகிழ
சகல சுகமு மருள்தாயே ;
இரவு பகலு முனது புகழை
இனிய விசைக ளொடுபாடும்

எளிய னுலகி லொளிர வருளி
இனிய பதமு மருள்வாயே ;
பரத நடனி யுவதி குமரி
பவதி கவுரி கலியாணி
பதும மகளு மறிவின் மகளு
மடிகள் பரவு முமைமாதே.

138

காமபோதி ] "அலங்கார" மெட்டு [ ஆதி

அலைந்தோடி பலத்திசையிற் றனந்தேடி புவிக்குளெவர்க்
கடங்காத குணத்தனெனப் பெயராகி
அகங்கார மிகுத்தழிவைத் தருங்காம மதற்கிரைபட்
டலங்கோல பவச் சுழலுற் றழியாமல்
கலங்காத மனத்தொடுனை தினந்தோறும் நினைத்துருகிக்
கசிந்தோது மெனக்குறுநற் றுணையாகி
கருங்காலன் மதித்தகலக் கடுங்கோர பவக்கடலைக்
கடந்தேற விதித்தருளித் தயைகூர்வாய் ;
பலன்காண லொழித்துதொழிற்
புரிந்தோர்கள் வினைத்தொடர்கட்
பலஞ்சார்த லறப்பிறவிக் கடலேகா
பரஞ்சேர்வ ரெனப்பகர் செய்ப்
பெருங்கீதை தனைத்தருமப்
பரந்தாமன் வழுத்திடமற் புதநீலி
சிலம்போசை திமித்திமிதித் தனந்தான தனத்ததனத்
திமிந்தோதி யெனச்சதிர் செயச் சிவனோடே
செயங்காண நடித்துலகிற் பெருங்காளி யெனப்புகழ்பெற்
றிடுந்தாயி பரத்தையருட் பெருமாதே.

139

கரகரப்ரியா or செஞ்சுருட்டி ] "கருவினுருவாகி" மெட்டு [ சாபு

மலைமலைக ளாயெழுந்து அலையெனவு மேதொடர்ந்து
வருமிடர்கள் கோடி கொண்ட சமுசார
மதனில்மனை யாளுமைந்த ருடனவதி யேமிகுந்து
மனவமைதி யேதுமின்றி யழியாமல்

உலைவறவு தார மிஞ்சு மூனதுசர ஞுர விந்த
முவகையொடு பாடி யென்றன் விணைதீர

உரிமையொடு தாய தென்று மருவியெனை யாள வந்து
உயர்கதியை நீயு கந்து தரவேணும் ;

அலையி னிடை யேது மின்று அகிலவுல காளு கின்ற
அரியுடனு மேபி றந்த அபிராமி ;

அலர்மகளும் வாணி வந்து வலமிடம தாக நின்று
அடிபரவு சீர்மி குந்த கலியாணி ;

தலையிலர வோடு கஙகை யிளமதியு மேய ணிந்து
சபைநடுவி லாடி நின்ற நடராஜன்

சலனமுற வாடி வென்ற வுமைபதிர காளி சண்டி
சகலசுக மீய கஞ்சி யுறைதாயே.

140

கமாஸ் or சாரஙகா ] "இமகிரிகுமாரத்தி" மெட்டு [ சாபு

மலைமலைக ளாய்நித்த மலையாலைக ளாய்மெத்த
வருமிடர்கள் கோடிக்கு மிரையாகி நாளுமே

மனைவிபல வாமக்க ளுடனுமிடி யேயுற்று
மனவமைதி யேயற்று மிகவாடு மேழையேன்

சொலவரிய தாயபக்தர் உளமுறைவ தாய்மெதத
சுருதிபுகழ் பாதத்தை தினமான மோதியே

துரிய கதி யேயுற்று பலநிதியு மேபெற்று
சுகமுறவு நீநித்தம் எனையாள வேணுமே ;

அலைமகளு மாசற்ற கலைமகளு மேநித்த
மடிபுகழும் ஏருற்ற அபிராம நாயகி

அரியயனும் வானுற்ற வமரர்களு மாலுற்று
அநுதினமு மேவித்த ணருள்நாடு தேவியே

பனிமுடியி லேவைத்த பதமுடைய மாலுக்கு
பகினியென வேமெத்த மறையோது காளியே

பயிரவிப ராசக்தி கவுரிபர காயத்ரி
பவதிலவி தாகச்சி நகர்வாழு மோகியே.

141

நாயகி ] "மாண்டாரெனும்" [ சாபு

ஆண்டா னருங்குகன் வந்தெனை
வேண்டேன் நலம்பிரி தென்றொரு
ஆங்கா ரமுங்கொடு மங்கிய எளியேனை
ஆண்டாய் பதம்பெற வந்தருள்
பூண்டாய் நிதந்துணை நினைறிடர்
ஆம்போ தகன்றவை சென்றிட அருளாகி
வேண்டா தவெம்பிணி வந்தெனை
தீண்டா மலென்றுமு வந்தொரு
வீணகோ ரவெம்பவ சிந்துவி லுழலாதே
மீண்டே றிநின்சர ணந்தனை
பாங்கா யடைந்துல கந்தனில்
மேம்பா டுதந்திடு முன்றனை மறவேனே ;
பூண்டார் சிரந்தனி லம்புலி
பாம்போ டுகங்கை கொளுஞ்சிவ
பூந்தோ கையெனறுதி கழ்ந்திடு மபிராமி
பூம்பா வையுங்கலை மங்கையு
மாங்கே நிரந்தர மன்பொடு
பூம்பா தபங்கயம வந்தனை புரிமாதே
ஏண்டா மென்மைநத னுமஞ்சிட
யீண்டே நிவந்தனை யந்தக
தீண்டா தகன்றிடு வென்றெனை அணைதாயே
ஈன்றே சகந்தனை யன்புட
ஞண்டே நிரந்தர முஞ்சுக
மீந்தே சகம்புகழ் கஞ்சியி லுறைதாயே.

142

சுபபந்துவராளி ] "மருவேசெறித்த" மெட்டு [ ஆதி

தனியே யிருக்க விடுகா துமெத்த
தகைவா யடுத்து மெனைமேவி
சகமே முமெச்சு பெருவாழ் வளித்து
தமியே னகத்தி லுறைதாயே .

வினைவே றறுத்து கலிதீ ரவைத்து | நிதியாவு
மிடியோ டவைத்து |
மிகவே பரத்தி னியலோ துவித்து | யருள்வாயே ;
னழியா பதத்தை |
கனியே பெறத்த னமையோ டுமப்ப | வலமான
ரையுமே சிறக்க |
கரிமா முகத்த னருள்மா துசக்தி | ரமரூபி
கருணா கரிப்பி |
சினமே யொழித்த முனிவோர்கள் | யபிராமி
முறைமா துசக்தி |
சிவகா மிநித்ய கலியாணி பக்தர் | யுறைவாழ்வே.
பரிபா லிகச்சி |

143

“ மூலாநில ” [ ஆதி
கானடா ]

தீரா வினைதனை சீரா யகலவை | மபிராமி ;
தேவி யெனவரு |
சேய்போ லடியரை மாளா திகபர | மருள்தாயே ;
சீரோ டுறையவு |
நாரா யணர்புகழ் மாசோ தரியெனு | மகமாயி
மாதா மரகத |
நாலா மறைபுகழ் பாலா திரிபுர | சிவகாமி
ஞானா கரிபர |
வாரா யுனதருள் தாரா யிருவினை | தடிமீதே
தீரா யெனவுன |
மாலா கிடுமெனை யாளாகிட வொரு | தருவாயே ;
வாடா பரகதி |
சூரா திபனுயிர் வேலா லுருவிய | மகிழ்தாயே
தோளா னறுமுகன |
சோணா சலசிவ ஜோதீ ஜகஜக | முமையாளே.
ஜோதி யெனவரு |

## 144

மோகனம் ] " எருவாய் " மெட்டு [ ஆதி

ஒருமா பொருளே நிகரே துமிலா
துயர்பே றறிவாய் பலகாலும்
உளதா யுயிராய் உணர்வாய் மனதாய்
உளமே புகுமோர் பரமாகி
அருவா யுருவாய் வெளியாய் வளியாய்
அனலாய் புனலாய் புவியாகி
அலையாய் மலையாய் நிதியாய் விதியாய்
பலலோ கமுமாய் விரிவாகி
உருவா யுலகோர் புகழோர் பரமாய்
உயர்பே ரருளாய் அடியார்கள்
உளமே யுறைகோ யிலதா யுறைமா
துமையா ளெனவே திகழ்தாயே ;
குருவாய் வருவா யருளே தருவாய்
குணமோ டடியேன் புவிமீதே
குறையே துமிலா நிதியோ டொருவாழ்
வுறவே விரைவா யருள்வாயே.

## 145

பியாக் ] " சந்தனத் " [ ஆதி

பஞ்சதந் திரங்கள் கொண்டு
வஞ்சகம் புரிந்து தொந்த
பந்தமும் பவங்கள் மிஞ்சி புவிமீதே
பண்ப ழிந்து மைந்தர் மங்கை
யன்பொ ழிந்து சிந்தை நொந்து
பங்க துன்ப முந்தொ டர்ந்து அழிவேனை
சஞ்ச லம்ப றந்தொ டுங்க
துன்ப முந்த விர்ந்த டங்க
சந்த தம்பு கழ்ந்து வுன்ற னடிபாடி
தஞ்ச மென்று வந்து வந்துன்
அன்பர் சங்க மும்பு குந்து
தங்கு முன்கு முந்தை முன்பு அருளாகி

செஞ்ச ரண்க ணின்றி லங்கி
அஞ்ச லஞ்ச லஞ்ச லென்று
செஞ்சி லம்பு கொஞ்சு மந்த எழிலோடே

சிந்தை யுங்கு ளிர்ந்து என்றும்
மங்க ளஞ்சி றந்து பொங்க
செம்ப தங்தெ ரிந்தி லங்க அருள்தாராய் ;

கஞ்சம் நின்றி லங்கு மங்கை
வெண்க லண்கள் கொண்ட நங்கை
கண்க ளென்று வந்து வந்து புகழ்தாயே ;

கந்த னுஞ்ச ரிந்த தொந்தி
மைந்த னுங்க ளிந்து தந்து
கஞ்சி யின்கண வந்த மர்ந்த உமையாளே.

146

மத்யமாவதி ] "தண்டையணி" மெட்டு [ சாபு

செஞ்சொலொடு மங்களம் பொங்குவச னங்களுஞ்
சிந்தையுரு கும்பெருஞ் சந்தமோடே
செஞ்சரண பங்கயம் பண்புறதி னந்தினஞ்
சிந்தைபினி லன்புடன் பண்கள் பாடித்

தஞ்சமென வந்திடுந் தொண்டனெனை யண்டியென்
சஞ்சலமொ ழிந்திடுஞ் சிந்தையோடே
தண்கருணை தந்துவந் தென்றுனை யிருந்துடன்
சந்ததமு மின்பமுந் தந்து வாழ்வாய் ;

குஞ்சரமு கன்பரங் குன்றிலுறை கந்தனுங்
கொங்கையமு துண்டுமென் றன்புகூருங்
குங்குமம ணிந்திடுஞ் சங்கரிச கந்தொழுங்
குண்டலித்ரி யம்பகன் பங்குளாளே ;

கஞ்சிநக ரம்புகுந் தஞ்சலென வன்பர்தங்
கண்குளிர வந்தமர்ந் தெந்தநாளுங்
கஞ்சமுறை மங்கையும் பண்கள்தரு மங்கையுங்
கண்டுபுக ழும்பதங் கொண்டதாயே

## 147
# நோய்கள் தீர

கமாஸ்] ''அறுகுநுனி பனியனைய''மெட்டு [கண்டத்ரி (கண்டகதி)

வயிறுவலி பெறுவயிறு எயிறினுட பலபிணியும்
வாத மோடுகா மாலை நோயுமே
வறளையொடு பிளவைகளு மொருதலையின் வலியதுவும்
வாயு நீரிழு லூடு நோய்களே
வழுவழென உமிழுமிகு மிருமலொடு சளியுடைய
மார்பு நோய்களா யீளை பீளையாய்—வருபலவிதநோய்கள்
மலசலமு மடைபடவெ விடுகொடிய பிணிகளொடு
மாத ரீயுமா மேக நோய்களே
முகமதனி லிருள்படவெ படருவெகு படைகளுடன்
மூல நோயதோ டான நோய்களே
வலிகளொடு பொருமல்வகை குமரவலி குலைவலியும்
மாறி மாறியே யூறு நோய்களே மலைசுர மொடுகாசம்
துயிலறவெ களையுவெகு விதபிணிகள் சுரவகைகள்
சூலை நோயுமோர் சீத ரோகமே
குளிர்சுரமு முடசுரமு நெடுசுரமு முறைசுரமும்
கோழை யோடுமே கூடு நோய்களே
சொறிவகைகள் கடுவன்வகை படுவனொடு யுடலுருகு
சோகை நோயதோ டாகு நோய்களே
கயல்வலி யிவையோடே
துயர்மிகவெ தருபிணிகள் சுடலைவரை யுளபிணிகள்
சோர்வு மீறுமோர் நீரின் நோய்களே
குனுமமொடு விஷபிணிகள் கடிகளென உலகில்வரு
கோடி நோய்களே யோடி வீழவே
துரிதமென இதுசமய மெளியன்முனம் அருளுடனே
தூல காயமே தூய்மை யாகவே வரமது தருவாயே ;
மயிலைதனி லொளிருமொரு மயிலனைய வடிவுடைய
மாக பாலினீ மோக மாலினீ
வருவினைக ளிருவினைகள் பவவினைகள் களையவல
மாசி லாமணீ காசி வாஸினீ

மதுரைதனி லரசியென வளருமொரு அருள்சொரியு
மாமகேஸ்வரீ சோம சேகரீ மரகத மகமாயி
மதிதனை தன் முடியிலணி நதிசடைய ரிடமதுறை
வாகு பாதியாய் லோக வாதியாய்
விடபிணிக ளிடர்களிக ளடியுடனெ கடியவல
வீர வேலனே பேணு தாயுமாய்
மகிமையுட னடியருள மதில்மருவி யருள்பொழியு
மாம னுமணீ மூல காரணீ மணமலர் அளியாகி
கயிலைதனை ரிகருமொரு புவிநகரி லடியர்பலர்
காணு ஜோதியாய் காம ரூபியாய்
அமலமன முளவடியர் கவலைகளை வருமளவில்
ஆவ லோடுதீர் காவ லாளியாய்
கவடுமிக வுடையரிட மொருபொழுதும் அருளவணு
காதமோடியாய் மாரி தாயதாய—கலைமகள் திருவோடே
கணமதுறு சகலசித்தி யருளுமொரு கொலுவுடனெ
காம ராஜரோ டோம தாகியே
கனவுநன விலுமடியர் சுடரதென நயனமிடை
காணு ரூபியாய மேரு வாழுவதாய்
கசியுமன வடியரிடர் களையவல கலைகளொடு
காம கோடியாய் வாழு தேவியாய்
கருணையொ டருள்தாயே

## 148

## லக்ஷ்மி கடாக்ஷம் பெற

எதுகுலகாமபோதி ] [ ஆதி

மகலக்ஷ்மி சுகலக்ஷ்மி வனலக்ஷ் யொடுபேணும்
வரலக்ஷ்மி ஜெயலக்ஷ்மி மதிலக்ஷ்மி யிவரோடே
ஜகலக்ஷ்மி கஜ லக்ஷ்மி தனலக்ஷ்மி வெகுதான்யம்
தருலக்ஷ்மி வமிசத்தினை தளிர்லக்ஷ்மி ஒருவீர ;
குகலக்ஷ்மி குணமித்தனை கொடுலக்ஷ்மி யருள்கூட
குறுகிப்பணி யடியர்க்கென குறைவற்றருள் புரிவாயே ;
வெகு பக்ஷமொ டமுதக்கடல் விடபக்ஷண ரிடமேவி
வினைபக்ஷணி யெனகச்சியில் மிக சக்தியொ டுறைதாயே.

149

ஆரபி ] "கமல மாதுடன்' மெட்டு [ ஆதி

கருணை வாரிதி யென்றுயர் கஞ்சியி
லருளை வாரிவ ழங்குசு மங்கலை
கமல லோசனி யம்பைத்ரி யம்பகி எமதாயி

கலைலை திரவு கந்தருள் மங்களை
மதுரை மாநகர் வந்தபெ ருந்தகை
கயல்வி லோசனி எங்குநி றைந்தருள் கலியாணி

தருணி மாஜக தம்பிகை யிந்திரை
அயனு மாலும கிழ்ந்துதி தம்புகழ்
சரண நாரணி சம்பும கிழ்ந்திடு முமைகாளி

சகல லோகமு கந்தருள் சங்கரி
இமய மாதுப ரம்பரை யந்தரி
சமய மாறிலும் நின்றப ரம்பொருள் சிவகாமி

புரண காரணி குங்கும மங்களை
கவுரி நீலிசு தந்தரி சண்டினி
புலவர் நாவினில் நின்றரு ளம்பிகை மகமாயி

புவன மோகன சுந்தரி மந்தரி
குமரி சூலிப யங்கரி குண்டலி
புகழு மாமறை யந்தசு கந்தரும் மபிராமி

சரண மேகதி யென்றுதி னந்தினம்.
அருண வாரிச செஞ்சர ணம்புகழ்
தமிய னேனுல கந்தனி லின்புற வுளமேவி

சகல மாவினை சிந்திட வென்கொடு
மிடியு மோடிட செம்பத மும்பெற
தருண மேநிதி யும்பெற வந்தருள் புரிவாயே.

மோகனம் ] 150 [ சாபு

அற்ப மாஞ்சக வாழ்வது பெரிதெனு
துச்ச மாஞ்சட மேநித முளதென
அற்ப மாந்தன மேபெரி தெனநித மதுதேடி

அற்ப மாங்கடை யாளரை வழிபடு
மட்டி பூங்குழ லார்மய லதுமிகு
மற்ப ஞெஞ்சட ஞகியு முலகினி வழியாதே

## 150

பொற்பு வாய்ந்தரு ளோதய மெனவொளிர்
சொர்க்க மீந்தருள் மாமறை புகழ்தரு
பொற்ப தாம்புய மேகதி யெனவதன் மிசைதூவும்
புட்ப மாந்தமி யேனுள மதிலருள்
சித்தியாம்படி ஞானமு மிகவொளிர்
புத்தி யாம்படி நீதய வுடனருள் தரவேணும் ;
சிற்ப ராம்பிகை சீர்மிகு மநுபவை
அற்பு தாம்பிகை ஆரணி புகழ்து
செப்பு மாந்தர்கள் தீமிடி யகலவு மருள்தாயி
திக்கெ லாம்புகழ் தேவியி மயமகள்
சக்தி யேந்திய வேலவ னுதவிய
சித்தி ராங்கிம காபர சிவையுமை யபிராமி
கற்ப காம்பிகை சேயெனை மருவிய
சொற்ப ரும்பிகை காவிய மருளிய
கற்பு வாய்ந்திடு வாணிச கலகலை யருள்தாயி
கற்ற மாந்தர்கள் காணவு மரியவள்
பக்தி பூண்டவர் காணவு மெளியவள்
கச்சி வாழ்ந்திடு பூரணி பயிரவி எனதாயே

## 151

பியாக் ] வாழ்த்து [ ஆதி

வாழ்க வாழ்க வாழ்க வாழ்க வாரணர்க்கு மன்னையே
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க வேலவர்க்கு மன்னையே
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க மூவர்கட்கு மன்னையே
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க ஏவுயிர்க்கு மன்னையே ,
வாழ்க வாழ்க வாழ்க லோக மேழ ளித்த அன்னையே
வாழ்க வாழ்க வாழ்க ஒரு மேழைகட்கு மன்னையே
வாழ்க வாழ்க வாழ்க யீசர் வாம மூற்ற அன்னையே
வாழ்க வாழ்க வாழ்க வேதம் நாலளித்த அன்னையே
வாழ்க வாழ்க நாளு ளும மோதுசித்தர் அன்னையே
வாழ்க வாழ்க யோகி யோர்கள் ஜோதியொத்த அன்னையே
வாழ்க வாழ்க காளிரூப ஆதிசக்தி அன்னையே ;
வாழ்க வாழ்க காமரூப காமகச்சி அன்னையே ;

வாழ்க வேயு ளுமை மோது மாசு அற்ற தொண்டரே
வாழ்க வேயி வேழை யேனை வாழ வைக்கு மன்புமே ;
வாழ்க வேயி வாழ்க வேயி சீர்சிறக்க என்றுமே
வாழ்க காம கோடிபீட மேல்சிறக்கு மன்னையே.

152

மோகனம் ] போற்றி [ திஸ்ரத்ரிபுடை

மாகாஞ்சி வாழ்வே போற்றி மாசாந்த மாயே போற்றி
மாகாந்தி மீனுள் போற்றி மயிலாளி
மாவேந்தர் சார்பே போற்றி நாதாந்த ரூபி போற்றி
மால் வேண்டு மாயே போற்றி தவமானோர்
ஏகாந்த வாழ்வே போற்றி யோகாந்த ஜோதீ போற்றி
வேதாந்த ரூபீ போற்றி அரிதான
ஏர்வாய்ந்த தாயே போற்றி பேர் வாய்ந்த பேறே
போற்றி
ஏகாம்ப்ர ஜாயே போற்றி எழிலான
மோகாங்க மானுள் போற்றி காலாந்த காளே போற்றி
மோகாந்த மானுள் போற்றி உலகீயும்
மூலாந்த மானுள் போற்றி மூனுஞ்சனுளே போற்றி
மால் பூண்ட மேலோர் கேட்ட பொருளீயும்
த்யாகாங்க சீலே போற்றி லோகாந்த சூலே போற்றி
தேவேந்த்ரர் கோவே போற்றி மயிலேறு
சேயீன்ற தாயே போற்றி தாள்வேண்டி வானோர்
போற்று
சீர்வாய்ந்த தாயே யோக்யர் உளவாழ்வே.

153

## போற்றி

சுருட்டி ] "நிருதராார்க்கொரு" மெட்டு [ ஆதி

மயிலை வாழ்ந்திடு தாயே ஜெயஜெய
அரிய காஞ்சிதன் வாழ்வே ஜெயஜெய
மதுரை யோங்கிடு மாதே ஜெயஜெய அடியார்கள்

மனதில் வாழ்ந்திடு தேவீ ஜெயஜெய
முனிகள் காண்டிரு ஜோதி ஜெயஜெய
மருவி யாண்டெனை யாள்வாய் ஜெஜெய அருளியும்
அயிலை யீந்திடு தாயே ஜெயஜெய
திருவை யீந்திடு மாதே ஜெயஜெய
அருளை யீந்திடும் ஆயே ஜெயஜெய புவியாவும்
அருளி யாண்டிடு ராணீ ஜெயஜெய
கலைக ளீந்திடு வாணீ ஜெயஜெய
அழகு வாய்ந்திடு ரூபீ ஜெயஜெய பிறைசூடும்
கயிலை யாண்டவர் வாமீ ஜெயஜெய
பழனி யாண்டவர் தாயீ ஜெயஜெய
கரியை யீன்றிடும் ஆயீ ஜெயஜெய கடல்போலே
கருணை வாய்ந்திடு வாரீ ஜெயஜெய
நலம தீந்திடு நாரீ ஜெயஜெய
கவலை தீர்ந்திடு மாறே யெனதுள முறைவாழ்வே
வயதி லாண்டெனை மாளா திகபர
சுகம தீந்திடு வீடே தரவென
மருவி யோங்கிடு நாதே தினமுன தடிபேச
வசன மீந்திடு மாயே எனதுள
முருக வூன்றிய கோவே அருளொடு
மகிமை வாய்ந்திடு தாயே யினியுனை மறவேனே.

## 154

"பரிமளகளப" மெட்டு

சிவயந மவெனுமொர் பஞ்சச் சொற்சொற் றுணையாலே;
சிதறிடு மனதைய டங்கக் கண்டப் பெரியோர்கள்
தவநிலை தனிலெதிர் வந்துற் றின்பைத் தருமாதே
தமியனு நெறியுற யின்புற் றன்புற் றருள்வாயே ;
அவினியி லுயரிய விந்தைக் கஞ்சிப் பதிவாழ்வே
அரியரன் மகபதி வந்திக் கும்பொற் கழலாளே
சிவனிட முறைதரு தொண்டர்க் கின்பச் சிவகாமி
ஜெய ஜெய ஜெய ஜெய சிந்தைக் கின்பக் கலியாணி.

# மூன்றும் பாகம்

## கண்ணிகள் கீர்த்தனைகள் முதலியன

## (1)

செஞ்சுருட்டி ] 1 [ ஆதி

காமபீ டத்திலோர் காமரூபியாய்
காஞ்சி நகர்தனிலோர் ஜோதி கண்டேன்
காயத்ரி மண்டப காம கோடியே
தாயென வேவந்தெனை யாண்டருள்வாய்
காமாக்ஷி காமாக்ஷி
கருணை கசிந்தொழுகும் காமாட்சி

புன்னாக வ்ராளி ] 2 [ ஆதி

அஞ்ஞான வனமெரிக்கும் அக்நிஜ்வாலையே
அன்பே யுருவாய் வந்த அம்பிகையே
ஆனந்த மயமான ஆதி மூலமே
ஆதரித் தாண்டருள்வாய் ஆதிஜனனீ
அம்பிகையே அம்பிகையே
அடியேனை ஆதரிக்கும் அம்பிகையே

செஞ்சுருட்டி ] 3 [ ஆதி

சிங்கார மாகவே ஹ்ரீங்கார ப்ருங்கியே
சுமங்கலி வடிவமாய் விளங்கக் கண்டேன்
சிந்தாத சித்தத் தார்க்குச் சிந்தா மணியே
சிந்தை யடக்கும் வகை யூட்டி யருள்வாய்
சித்ரூபீ சித்ரூபீ
சின்மயமாய்வி ளங்கும் சித்ரூபீ.

புன்னாகவராளி ] 4 [ ஆதி

குஞ்சரத் தோனை யீன்ற குண்டலினியே
குற்றங்கள் பொறுத்தருள் குணவாரியே
குன்றக்கு டிக்குமரன் கொஞ்சிடும் அன்னையே
குறுகிப் பணியுமெனைக் காத்தருள்வாய்
குண்டலினியே குண்டலினியே
யோகிகள் நாடிடும் குண்டலினியே.

செஞ்சுருட்டி ] 5 [ ஆதி

மீனலோசனியாம் மீனும்பிகையே
மெய்ஞான அறிவினை யூட்டியருள்வாய்
மூகனுக் கருள்செய்த மூகாம்பிகையே
முழுதுமலாப் பொருள் தந்திடாயோ
மீனாக்ஷி மீனாக்ஷி
மதுரைமா நகர்வாழும் மீனாக்ஷி.

புன்னாகவராளி ] 6 [ ஆதி

விஷ்ணுப்ரம் மாவும் போற்றும் விஸ்வேஸ்வரியே
விதியைவி லக்கும் வகை யூட்டியருள்வாய்
விண்ணவர் போற்றும் கங்காநதிக்கரசி
வினைகளகற்றிடவே வந்திடுவாய்
விசாலாக்ஷி விசாலாக்ஷி
விஸ்வனாதர் வாமத்துறை விசாலாக்ஷி

## 2

எதுகுலகாம்போஜி ] பல்லவி [ திஸ்ரசாபு

கஞ்சியி லோங்கிய காமாக்ஷி—யென்னை
அஞ்ச லென் றேவந்து ஆதரிப்பாய் கஞ்சி

அனுபலலவி

சஞ்சித பவவினை அஞ்சியே ஓடவே
மிஞ்சிய யிருவினை கெஞ்சியே நிற்கவே கஞ்சி

சரணஙகள

பஞ்சப்ரே தாஸன சித்ரூபி—என்றன்
நெஞ்சிற்க வலைதீர்த்து அஞ்சலெனபாய்
துஞ்சவே யிருள்பிணி மங்கவே எனதிடர்
அஞ்சவே வருவினை பொங்கவே யுனதருள் கஞ்சி 1

பஞ்சத சாக்ஷரி காமாக்ஷி—உன்றன்
செஞ்சர ணம்வைத்து ஆண்டருள்வாய்
கஞ்சப் புனல்போற் றவிக்கு மென்றன்மனம்
தஞ்சமென் றுன்னையே கொஞ்சி யடையவே கஞ்சி 2

காயத்ரி மண்டப காமாக்ஷி—இந்த
மாயப்ர பஞ்சத்திலுழலு மென்னை
தாயெனவே வந்துன் கரத்தினி லெடுத்தே
நாயேனை உய்விக்க ஞானப்பாலூட்டவே கஞ்சி 3

ஸ்ரீசக்ர வாஸினி காமாக்ஷி—வெகு
சிங்கார மாய் காமபீடந்தனில்
காந்திமிகு முத்து வாளியுடனே
காஞ்சியு நவரத்ன மாலை யுமணிந்து கஞ்சி 4
செஞ்சுடர் மேனியுஞ் செங்கனிவாயுங்
குஞ்சித சரணமும் ரஞ்சித வடிவமும்
பஞ்ச புஷ்ப பாண பாசாங்குசமும்
குங்கும ஆடையுங் கரும்பு வில்லுங்கொண்டு கஞ்சி 5
தஞ்ச மென்ற பக்தர்க் கிரங்கி யருளவே
மிஞ்சிய கருணை வடிவங்கொண்டு
அஞ்சு புலன்களு மொன்றனையே யெண்ணி
சஞ்சலப்ரபஞ்சத்தில் சாந்தமாய் விளங்கவே கஞ்சி 6
கனவினிற் றோன்றிய காமாட்சி—என்றன்
அனவினை நீக்கவே யெண்ணங் கொண்டு
கனமிகு சாந்தோ பதேசந்தன்னை
வினவு முன்னே யீந்த சற்குருவாகிய கஞ்சி 7
கனக நிறத்துடன் காமபீடத்தில்
இனிது விளங்கும் ஸ்ரீகாமாட்சி
அனலின் பின் சுமங்கலி வடிவங் கொண்டு
வினவு மடியேனை சுகமுறவே வைத்த கஞ்சி 8
ஹ்ரீங்கார ப்ருங்கியே காமாட்சி—வெகு
சிங்காரமாய் ஜோதியுட் புகுந்து
இருள மூண்ட அடியேனை த தனமயமாக்கவே
நெற்றியில் பொறியுடன் சுற்றிச் சுற்றிவந்த கஞ்சி 9
பஞ்சமா பாத மும்பஞ்சு போலோடுங்
கஞ்சிமா நகரினை யொருவிசை யடையுமுன்
தஞ்ச மென்றடியேனு மென்மேலு முய்யவே
மஞ்சளும் புஷ்பமும் மகிழ்ந்துமே யீன்றிட்ட கஞ்சி 10
லோகம் பல வீன்ற மீனாட்சி—மிக
யோகநிலைகொண்ட காமாட்சி
வினைகளகற்றிடுங் காசிவிசாலாட்சி
நினைபவ ருளத்துறை மதுரை மீனாட்சி கஞ்சி 11
திருமக ளொருபுறங் கலைமகளொரு புறம்
திருவுங் கல்வியு முன் பக்தர்க் களிக்கவே
பருவமாய் எனதுள்ளம் பழுக்கவுமருள் செய்து
பேரும் புகழுமே பலபல பெற்றிட கஞ்சி 12

பந்துவராளி or நீலாம்புரி ]  [ சாபு

சிம்மவாஹன மேறும் சிங்கார ரூபியே
சின்மயமாய் விளங்கும் சிவகாம சுந்தரியே ; 1

ஹம்ஸவாஹன மேறும் சாரதா தேவியே
ஹம்ஸ ஸோகமே தந்து அடியேனை ஆதரிப்பாய் ; 2

பத்ம பீடத்தமர்ந்த பத்மாஸனியே
பக்தனு மென்றனக்குன் பாதங்கள் தருவாயே ; 3

தந்திமுகனைப் பெற்ற த்ரிபுர ஸுந்தரியே
புந்திக்கிலேசம் போக்கி பந்தங்களை தீர்த்தருள்வாய் ; 4

பாலனை யீன்றிட்ட பார்வதி தேவியே
காலனணுகாமலே கார்த்தெனை யாண்டருள்வாய் ; 5

கருணைவடி வாய்வந்த கற்பகவல்லியே
திருவுங்கல்வியுந் தந்து தமியேனுக் கருள்வாயே ; 6

கஞ்சி மாநகர் வாழும் காமாக்ஷித்தாயே
தஞ்சமென் றுனையடைந்தேன் அஞ்சலென் றருள்வாயே; 7

மதுரை மாநகர் வாழு மீனாக்ஷித்தாயே
மதுரமாயுனைத் துதிக்க மகிழ்ந்துநீ யருள்வாயே ; 8

வினைகளகற்றிடும் காசி விசாலாக்ஷி
நினைபவர் வினை தீர்த்து நித்யமதளிப்பாயே ; 9

அன்பேயுருவாய் வந்த அன்னபூரணியே
இன்பமுடனே ஞான அமுதூட்டி யருள்வாயே ; 10

சிந்தாத சித்தத்தார்க்குச் சிந்தாமணியே ;
சிந்தையடக்கும் வகை ஈதென் றுணர்த்துவாயே ; 11

ராஜராஜர்கள் போற்றும் ராஜராஜேஸ்வரீ
பூஜனைபல செய்தேன் பூவடி சேர்ப்பிப்பாயே ; 12

அண்டமுழுது மீன்ற அகிலாண்டேஸ்வரி
வண்டழகியாய் வந்து வரங்கள் தந்தருள்வாயே ; 13

கோமள மாயுதித்த கோமதித்தாயே
தாமதம் செய்யாமல் தாஸனுக் கருள்வாயே ; 14

பஞ்சமாபாதம் தீர்க்கும் பர்வதவர்த்தனி
அஞ்சலென் றடியார்க்கு அபயந்தந் தருள்வாயே. 15

கஞ்சிமாநகர் வாழும் காமாக்ஷி அந்த
காயத்ரி மண்டப காமாக்ஷி ;
பஞ்சப்ரே தாஸன காமாக்ஷி என்றன்
பவவினை தீர்த்தருள்வாய் காமாக்ஷி. 1
காமபீடத்தமர்ந்த காமாக்ஷி உன்றன்
நாமமே தஞ்சமென்றேன் காமாக்ஷி ;
தாமதம் செய்யாமல் காமாக்ஷி இந்த
தாஸனுக்கருள் செய்வாய் காமாக்ஷி. 2
பஞ்சதாக்ஷரி காமாக்ஷி என்னை
அஞ்சலென் றருள்செய்வாய் காமாக்ஷி ;
தஞ்சமென் றுனையடைந்தேன் காமாக்ஷி என்றன்
நெஞ்சிற் கவலை தீர்ப்பாய் காமாக்ஷி. 3
ஸ்ரீ சக்ரவாஸினி காமாக்ஷி திவ்ய
ஸ்ரீ வித்யாரூபிணி காமாக்ஷி ;
சௌபாக்ய சுந்தரி காமாக்ஷி ஹம்ஸ
சோகமதருள் செய்வாய் காமாக்ஷி.
ஹ்ரீங்கார பீஜமே காமாக்ஷி என்றன்
ஆங்கார மடங்கவே காமாக்ஷி ;
ஹ்ரீங்கார ப்ருங்கியாய் காமாக்ஷி அந்த
ச்ருங்கார காக்ஷிதந்த காமாக்ஷி. 5
கனவினிற் றோன்றியே காமாக்ஷி என்றன்
அனலினை யடக்கவே காமாக்ஷி ;
கனமிகு சாந்தத்தை காமாக்ஷி யானும்
வினவு முனீன்றிட்ட காமாக்ஷி. 6
பன்மயமாய் விளங்கும் காமாட்சி என்றன்
பவவினை தீர்த்தருள்வாய் காமாட்சி;
தன்மயமாக்கவே காமட்ாசி இந்த
தமியேனை யாட்கொண்ட காமாட்சி 7
மீனலோசனியாய் காமாட்சி மதுரை
மீனாக்ஷியா யுதித்த காமாட்சி;
வினைகள கற்றிடவே காமாட்சி காசி
விசாலாக்ஷியா யுதித்த காமாட்சி 8
கருதிய பக்தர்க்கென காமாட்சி மயிலை
கற்பகமா யுதித்த காமாட்சி;

திருவுங் கல்வியுந்தந்து காமாட்சி ஞான
குருவாய் வந்தருள்வாய்நீ காமாட்சி 9

புன்னாகவராளி ] 5 [ சாபு

கஞ்சிமா நகர்மேவும் காமாட்சித்தாயே
தஞ்ச மென்றோர்க்கருள் காமாட்சித்தாயே;
காயத்ரி மண்டப காமாட்சித்தாயே
தாயென வந்தருள் காமாட்சித்தாயே;
காமபீடத் துறை காமாட்சித்தாயே
தாமதம் செய்யாதே காமாட்சித்தாயே;
பஞ்ச புஷ்ப பாண காமாட்சித்தாயே
நெஞ்சிற் கவலைதீர் காமாட்சித்தாயே;
செஞ்சுடர் மேனியாம் காமாட்சித்தாயே
செஞ்சரணஞ் சேர்ப்பாய் காமாட்சித்தாயே;
பாசாங்குசதாரி காமாட்சித்தாயே
மோசம் செய்யாதேநீ காமாட்சித்தாயே;
யோக நிலைகொண்ட காமாட்சித்தாயே
ரோகங்கள் தீர்த்தருள் காமாட்சித்தாயே;
மூகனுக்கருள் செய்த காமாட்சித்தாயே
வேகமாய் வந்தருள் காமாட்சித்தாயே;
காலையில் பஜிக்கிறேன் காமாட்சித்தாயே
பாலையாய் வந்தருள் காமாட்சித்தாயே;
மாலையில் பஜிக்கிறேன் காமாட்சித்தாயே
ஜ்வாலையாய் நின்றருள் காமாட்சித்தாயே;
வண்டமுகியான காமாட்சித்தாயே
கண்குளிரவே வா காமாட்சித்தாயே;
கனவினிற் றோன்றிய காமாட்சித்தாயே
மனமிரங்கியருள் காமாட்சித்தாயே;
அஷ்டலக்ஷ்மியான காமாட்சித்தாயே
இஷ்டங்களீன்றருள் காமாட்சித்தாயே;
கருணை வடிவான காமாட்சித்தாயே
இருவினை தீர்த்தருள் காமாட்சித்தாயே;
ஜோதிவடிவான காமாட்சித்தாயே
சோதனை செய்யாதே காமாட்சித்தாயே;
சுமங்கலி வடிவான காமாட்சித்தாயே
மங்களந் தந்தருள் காமாட்சித்தாயே.

## 6

செஞ்சுருட்டி ] (இந்துஸ்தானி: தோடி)[ சாபு

கஞ்சிமா நகர்தனில் செஞ்சுடராய்நின்ற
ஆதியே பரஞ்ஜோதியே குணவாரியே வெகு
ரஞ்சித மாகவே பஞ்சப்ரேதாசனம்
ஏறுவாய் அருள் கூறுவாய்

குஞ்சரத் தோன்மிக கொஞ்சிவிளையாடும்
தேவியே என்றன் ஆவியே சுகவாரியே உனைத்
தஞ்சமென்ற என்னை அஞ்சலென்லேவந்து
போற்றுவாய் கவலை ஆற்றுவாய்

செம்பொன்மயி லேறி வந்தமுரு கேசன்
அன்னையே மறைக் கன்னியே என்றன் அன்னையே—
நம்புமடி யாருக் கின்பமுடனருள் [உன்னை
கூட்டுவாய் நலம் நாட்டுவாய்.

நொந்து ஒரு மைந்தன் தஞ்சமென் றேவந்து
நாடினேன் புகழ் பாடினேன் மிக வாடினேன் இனி
வந்து எனக்கருள் தந்து மகிழ் விக்க
முந்துவாய் அருள சிந்துவாய்.

இங்குவுள உன்னை அங்குமெங்குந் தேடி
வாடினேன் உண்மை காணிலேன் உளம் நோகினேன்
எங்குமுளநீயுங் தங்கியென்ற னுள்ளம் —இனி
சேருவாய் க்ருபை கூருவாய்

## 7. ணங்கள்

மோகனம்சாமா ] பல்லவி [ ஆதி

ஆதரித் தாண்டருள்வாய்—அம்பா நீ எனை
ஆதரித் தாண்டருள்வாய்.

அநுபல்லவி

ஆதிமு தலதும்நீ அடைக்கலப் பொருளும்நீ
அகிலாண் டேஸ்வரிநீ சகலமும் நீயாதலால் ஆதரித்து

சரணம்

படியினில் மிடியினுல் பரதவித் ததுபோதும்
பலபல விடர்களிற் பட்டதெல்லாம் போதும்
சடுதியில் அடிமையின் குடியினைக் காத்துநீ
சகலசௌ பாக்யமும் பரிவுட னருளியே ஆதரித் 1

தாவிப்ப டரவொரு கொழுகொம்பு தானிலாத
தனிக்கொடி போலவிங்கு தவிக்குதே யென்றன் மனம்
காவிக்க மலமென்னும் உன்னிரு சரணமே
கதியென வந்தடைந்தேன் கற்பகம் நீயாதலால் ஆதரித் 2

# 8

குந்தலவராளி or மத்யமாவதி ] பல்லவி [ ஆதி

பாரினில் உனையல்லால் யாரை நான் துணைகொள்வேன்
பரமகிருபா நிதியே; தாயே நான் இந்தப் பாரினில்

அனுபல்லவி

நாரணன் நான்முகன் நாயகன் ஈசனும
தாரகம் நீயெனவே கைதொழு தேயிருக்கப் பாரினில்

சரணம

தந்தையுந் தாயும்நீ தாங்கிடுந் தெய்வமும் நீ
தமியனுக் கஞ்ச லென வந்தருள் தஞ்சமும் நீ
சிந்தையில் நினைவொளிருஞ் செல்வச் செழுஞ்சுடர் நீ
சீருஞ் சிறப்புமருள் தேவியும் நீயாதலாற் பாரினில்
உள்ளொன்று வைத்துமே புறமொன்று பேசுகின்றார்
கள்ளத் தனமாகவே காரியம் புரிகின்றார்
வெள்ளமாய்ப் பொருள்தேட வீணுக்கே யிறைக்கின்றார்
எள்ளும்மெய் யில்லாமலே யினைப்பொய் பேசுமிந்தப்
பாரினில்

# 9

சாமா ] பல்லவி [ ஆதி

மானசம் ரக்ஷணியே—தாயே யென்
மானசம் ரக்ஷணியே

அநுபல்லவி

வானவர் மானிடர்க்கும் மாதவர் பக்தர்கட்கும்
மோனமெய் ஞானிகட்கும் முத்தர்கள் சித்தர்கட்கும் மானசம்

சரணம

கண்ணிமை இமையது காததிடல் போலவும்
கன்றினைத் தாயுமிங்கு போற்றிடல் போலவும்
எண்ணிய போதிலுமென் எண்ண மொழிந்த போதும்
எந்தக்கா லத்திலும்நீ என்றனுக் கருள்செய்வாய் மானசம்

# தேவி

ஷண்முகப்ரியா : (1) ஆதி

பல்லவி

பதமே கதி—பர தேவதே யுன்
பதமே கதி

அநுபல்லவி

நிதமும் அடியார்க கிதமே புரிய
இதய கமல மதன்மீ தினில்வாழ (பத

சரணம்

அரனின்முடி மீதும் அயனின்முடி மீதும்
அமரர்முடி மீதும் அமருஞ்சீர மிகுந்து
பரிவுட னடியார் முடியின்மீ தணிந்து
பாடியு மாடியும் பக்திகொண்டு போற்றும் (பத

(2)

இடர்கள யாவும்நீக்கும் இருவினைகள போக்கும
படியில் மேன்மை யாக்கும் பாலித்தருள செய்யும
அடலுட னன்றுபோய் மன்றுளாடி நின்ற
நடனராஜ ஞேடே நடனமாடி வென்ற (பத

மோகனம் : (2) ஆதி

பல்லவி

காமாக்ஷி—நின்
கமல பதமதுவே கதியென
நம்பி வந்தேன் (காமாக்ஷி)

அனுபல்லவி

பூமாதும் வாணியும் பூசித்தனு தினமும்
பூவடி போற்றிநிற்கும் ராஜராஜேஸ்வரியாம் (காமாக்ஷி)

சரணம்

பூமியில் உன்னைப்போல பூரணக ருபைகொண்டு
தாமத மின்றியே தாசருக கருள் செயது
க்ஷேம மிகுந்த வாழவும சீர்கள் பலவுந்தந்து
தேவைகள் பூர்த்தி செய்யும வேறு தெய்வமு
முண்டோ (காமாக்ஷி)

(2)

நோயகள நொடிகள் போககி நுண்ணிய மதியு மாக்கி
சேயெனப் போற்றி செயது செல்வமுஞ் சீரு மீந்து
தூய கதியுந் தந்து துணையாக என்றும நிற்கும்
தாயதும் நீயலலவோ தஞ்சமும நீயல்லவோ
(காமாட்சி)

(3)

திண்ணமாகத் தேவி யுன்றன்
சீர்மிகும் அருளும வேணடில்
பணணிய புண்ணியம சாலப்
பாரினில வேணடு மம்மா
எணணிய போதினிலும
எணணை மொழிந்த போதும
கண்ணிய மாக வந்து
காத்தருள தாயே கஞ்சி (காமாக்ஷி)

பிலகரி : (3) ஆதி

பல்லவி

ஆண்டருளவே வேண்டும்—என்னை நீ
ஆண்டருளவே வேண்டும்.

அநுபல்லவி

வேண்டிய போதடியர் வேண்டிய
யாவையுமே
வேண்டிய வாறேயருள் காஞ்சி
காமாட்சியே நீ (ஆண்ட

சரணம்

படியினில மிடியினால் பரதவித்தது போதும
பலபல விடாகளாற் பட்டதெலலாம் போதும்
அடியனை நாளுமுனதன் ஆளென ஆக்கியிங்கு
ஆரருள் சாலததந்து அழியாத வாழ்வுந
தந்து (ஆண்ட

தயமாவதி : (4) ஆதி

பல்லவி

அருளோடு பொருளீய வா
ஆதரவு தேடியுன்றன் பாதமதை நாடுமென்முன்

அநுபல்லவி

திருமாது சீதேவி கலைவாணியும் போற்றும்
ஸ்ரீராஜ ராஜேஸ்வரீ கஞ்சி காமாக்ஷி (அரு

சரணம்

அகிலவுல கமீயும் அகிலாண் டேஸ்வரி நீ
ஆதிப ராசக்தி அம்பிகை யாவதும நீ
இகமதிற் சுகமொடு பரமப தமுநதந்து
என்றுமன் பரைக்காக்கு மீஸ்வரிநீ யாதலால் (அரு

(2)

ஆளுவா யென்னை யென்றே நாளுமுன் புகழ்பாடி
ஆரருள் பெற்றிடவே ஆசையுங் கொண்டேனம்மா
கோளின்கே டகலவும நோய்கள் நொடியகல
கூடல் மகாராணியாய விளங்குமீ னுக்ஷியே நீ (அரு

தன்யாசி (5) ஆதி

பல்லவி

தேவிமீ னுட்சியை சேவித்த பேருக்குச
செல்வமுஞ் சீருமுண்டு.

அநுபல்லவி

தேவர்கள் மானிடாகள சித்தாகள யோகியாகள்
யாவருந் தஞ்சமென்றே நாடிச சரணடையுங (தேவி

சரணம

சாலத தனமளிப்பாள சௌபாக்யந் தானளிப்பாள
ஞாலம புகழும ஞானம முற்றும் அளித்திடுவாள்
கோலமுடன் புவியில வாழ்வே செயதிடுவாள
கூடலிற் கோவில கொணடு செஙகோல புரியுமந்த
(தேவி

ஆனந்த பைரவி : (6) ஆதி:

பல்லவி

அம்பை காமாட்சியே அகிலாண்டேஸ்வரீ
ஆதரித்தாண்டருள்வாய—நீ யெனனை
ஆதரித்தாணடருளவாய்.

அநுபல்லவி

சம்பு மகாதேவன் சதுர்முகன் மாதவனும்
தாரகம் நீயெனவே தாளிணைகள போற்றும் (அம்பை

சரணம்

அமல மன துடனே கமல மலரடியை
ஆர்வமு டனேபாடி ஆரருள் நாடிவந்தேன்
சமயமதே வந்து சாலத் துணைபுரியுஞ்
சௌபாகய தாயினியே
சௌந்தாய ரூபிணியே (அம்பை

முகாரி (7) ஆதி

பல்லவி

என்றைகுன் கருணை வருமோ — ஈஸ்வரீ
என்றைகுன் கருணை வருமோ

அநுபல்லவி

கன்றுநதன் தாயினைக கூவியழைப்பது போல்
என்றுமுன் செஞ்சரணம ஏததித துதிககுமெனக
(கென்றைக்

சரணம்

அசசமே யுனககின்றி அன்பாநும் வாழுகினறா
துச்சமாய செறியுமின்றி தூயாபோல் நடிககின்றுர்
இச்சக மாயையிலே ஏதுனக கிடமம்மா
கச்சித மாக வநதென் உளளமுறைநதிடவே
(என்றைக

(2)

தஞ்சமென் றடைவோர்க்குத தாயுமே யாகுவைநீ
அஞ்சலென் றடியார்கரு அபயமருளவதும்நீ
மிஞ்சிய சீருடைய மீனுட்சி நீயல்லவோ
கஞ்சிகா மாட்சியே ராஜரா ஜேஸ்வரியே (என்றைக

(3)

தனமும் மிகவும் வேண்டும்
தாஙகவுன அருளும வேண்டும்
வினைகளும தீரவேணடும வீடும்
பெறறிடல வேண்டும
மனமும நிம்மதி யாகி
மாணபுடன வாழவேண்டும
தினமுமுன் துணைவேணடும இவை
யெல்லாம பெற்றிடவே (என்றைக

மத்யமாவதி · (8) ஆதி :

பலலவி

இதுவுனக கழகாகுமா—
ஈஸ்வரி தேவி ராஜராஜேஸவரி

அநுபல்லவி

பதும பதஙகளேயே பாடி நிதம வணஙகும
பகதாதமைக கைவிடடுப் பராமுக முஙகொணடால். (இது

சரணம

தஞசமே னவேவநது தாயின்சரணடைந்து
கொஞ்சுங் குழவிபோலக குழைநது குழைந்துவந்து
அஞ்சுபு லனடககி ஆருயிர் நீயெனவே
மிஞ்சிய அன்புளோரைக காவாது நீயிருநதால் (இது

எதுகுல காம்போதி : (9) சாபு :

பல்லவி

கனவிலும நீயென்னைக கைவிட மாட்டா யென்றே
கருதியுன் கழலிணை நமபிநான் வநதேன்—
தாயே ஸ்ரீகஞ்சி காமாட்சி.

அநுபல்லவி

தனதரும் மகவினை தாங்கியருள் வதுதான்
தாயின் கடமையன்றோ தருமமும் இதுவன்றோ.

(கனவி

சரணம்

சீதேவி யிடாநதனில் சீராய்மத் தளம்போட
காதேவி வீணையில நாதமெழுபபிட
மாதாம கேஸ்வரியாய ராஜராஜேஸ்வரியாய்
காளுஞ் சுமஙகலியாய நின்ற நிதய கல்யாணி (கன

தன்யாசி : )10) ஆதி :

பல்லவி

கௌரிகல் யாணத்தின் வைபோக
மதனைப் பாடாத கல்யாணங கல்யாண மாகுமோ

அநுபல்லவி

சௌரியம யாவுமீயுஞ் சகல சௌபாககிய மீயும
சௌந்தர்ய ரூபமீயும சாந்த மனமுமீயும (கௌ

சரணம்

தாஙகுவாா யாருமின்றி சாமபல தேகததிற் பூசி
சடையிற பாம்பினை வைதது புலிததோலு மேயுடுதது,
ஓஙகி யுடுககடிதது ஓஙகாரச் சஙகூழுதி
ஊரூராயச சென்று பல கூததுக ளாடிமனம
ஏஙகித தவிததலைநது காசிககுச சென்றுவிட்ட
ஈசனைக கூவிட ழைத் தென்னருமை பெண தருவேன்
என்றிம வானுங கூர ஈசனுக தாலிகட்ட
ஈடற்ற சோபையுடன் மஙகள மாய முடிந்த

(கௌரி

மஞசள குங்குமமுடன் மணமிகு சநதனமும்
மாணபுடன் கையிலேநதி நவமாதர் வந்து சூழ

பஞ்சமம தன்னில்வாணி மங்களப பண்ணிசைகக
பாஙகுடன் பூமகளும் பாததகதில் நலங்கிட
கஞ்சமுறைப் பிரமன் மந்திரஞ் சாலவோத
கார்முகில வண்ணனுமே கையினில தாரைவார்கக
கொஞ்சிக குலாவிடவே கூததன் தருணநேட
குதூக லிததுத தேவர் கொண்டாடியே மகிழ்ந்த
(கௌரி

ஷண்முகப்ரியா. (11) ஆதி:

பல்லவி

தேவியைத துதி மனமே—
தினமே நீ

அநுபல்லவி

ஆவிககாவியா யெங்கும் அருள்வடி வாகி நின்று,
சேவிதத பேருக்குச செல்வமுஞ் சீருந்தரும (தேவி

சரணம்

(1)

ஆதிபரா சகதி அமபிகை தானவளே
அகிலாண்ட கோடி யீன்ற யீஸ்வரி நுமவளே
வேதமுதல்வி யவள் விததைக கரசியவள்
மேனமைகள் தநதருளும் மீனாட்சி யாகு மாத (தேவி

(2)

கூவி யழைததிடுமுன் கோரும பொருளளிதது
மேவி யடியார்க கென்றும் மேலாந துணையுமாகி
காவல் புரிநதே நின்று கண்ணிமை போலக காதது
கற்பக மாகியருள் கஞ்சிகா மாட்சியாம் (தேவி

(3)

பூமகள் நாமகளும் பூவடி போற்றிநின்று
தாமரை யானும் மாலும் தஞ்சமென் றெமகிழ்ந்து

மாமயில்வேலவனும்
மடிமே லமர்ந்திருக்க
வானவா தானவரும்
வாழ்த்தி யடிபணியும் (தேவி

எதுகுல காம்போதி: (12) சாபு:

பல்லவி

கனவிலும் நீயென்னைக கைவிட
மாட்டா யென்றே கருதியுன்
கழலிணை நமபி நாண வநதேன்
கஞ்சி காமாடசியே ராஜரா ஜேஸவரியே.

அநுபல்லவி

தன தரு மகவினைத தாஙகி யருளுவதும்
தாயின் கடமையன்றோ தருமமும இதுவன்றோ (கனவி

சரணம்

சீதேவி வலநதனில் சீராயமந தளம்போட
நாதேவி வீணையில நாதமெ ழுபபிட
மாதாம கேஸவரியாய ராஜராஜேஸ்வரியாய
நாளுஞ்சு மஙகலியாய நினற கலயாணியே (கனவி

எதுகுலகாமபோதி (13) சாபு:

பல்லவி

பாத தரிசனம பாாககவே வேணுமென்று
பாடிப் பரவசமாய்ப் பணிநதுன சன்னதி வந்தேன்
பார்வதிபர மேஸவரீசக தீஸவரி பக மாலினீயுன்
(பாத

அநுபல்லவி

ஆதியந்த முமில்லா வகிலாண்ட நாயகி
வேதமு டிபபொருளாங கஞ்சி காமாட்சியுன் (பாத

சரணம

நீதய வாகியெனை நேர்ந்தியா யாண்டிலையேல்
ஆதர வெனக்கிங்கு யாருள ராவரம்மா
பூதலம் போற்றிடுஞ் சீரமிகும் வாழ்வுடனே
போதமெய ஞானமும் பூரண மாயருளும் (பாத

காமபோதி : (14) சாபு

பல்லவி

பாத தரிசனம பாாககவே வேணுமென்று
பாாவதி தேவியே பாடிநா ஞேடிவநதேன.

அநுபலலவி

ஏது மறியாதுபோல் நீயுமிருநதாயேல
ஏழைநா னென செயகுவேன எபபடி யுய்வேனம்மா
(பாத

சரணம

ஆதியும அந்தமுமநீ ஆதார சகதியுமநீ
அகிலாணட கோடியீன்ற அமபிகை நீயல்லவோ
வேத முதலவியுமநீ விதைதககரசியுமநீ
வேணடிய யாவும அருள கறபகமநீ யாதலால (பாத

(15)

மதயமாவத் அலலது மோகனம ஆதி

தேவி மீனுடசி—மாமதுரை வளா
சோமசுநதரன் மகிழ
சேமமிகவருளுஞ் சியாமளசுநதரி (தேவி

பூவடியில் மலா தூவி தின முனது
சேவை செயு மெனையும வாழவருள செயகுவாய் (தேவி

சேயெனையு மினிதாள மன முருகி
தாயுமென மருவி சால வணைதது மெனை
தூய கருணைவிழி யாலுமருள பொழிந்த
தோற்ற மதனைமற வேநாளொரு பொழுதும்
(தேவி

# லக்ஷ்மி துதி

**ராகம் :** **ஆதி :**

பல்லவி

சீதேவியே மகாலக்ஷ்மியே
சிந்தைகுளிரவுன் திருவருள் தந்தருள் (சீதேவி

அநுபல்லவி

மாதா மதுசூதன் மார்பில் விளையாடும்
மங்கள நாயகி மாமலா வாஸினி (சீதேவி

சரணம்

(1)

உத்தம ராகிலும் உன்னருள் இல்லையேல்
சித்தங் கலங்கியே சிறியோராய்த் திரிவாரே
பத்தரே யாகிலும் பாரிற் பொன்னில்லையேல்
பவுசற்று வாழ்விற் பரதவிப்பரன்றோ (சீதேவி

( )

பாவி மிடியினால் பாரில அடியேனும்
பரத விதத்து மின்னும் போதாதோ பார்க்கவி
ஆவியே போமாறு அவதியுற்றது போதும்
அம்மைநீ யுடன்வந்து ஆண்டருளல் வேண்டும்
(சீதேவி

(3)

மனமிருந் தென்னாகும் மாண்பிருந் தென்னாகும்
தனமிருந் தாலன்றோ சாதிக்க லாமேதும்
கனமிகும் வாழ்வாகும் கவலையும் தீர்ந்திடும்
மனமும் நிம்மதியுறும் மாதாநீ யறியாயோ (சீதே

# சரஸ்வதி துதி

தன்யாசி　　　　　　　　　　　　　　　　　　　　　　　　ஆதி

பல்லவி

தேவி சரஸ்வதி திவ்ய கலாரூபி
திருவருள் தந்தருள் வாய.

அநுபல்லவி

ஆவிகளுள் ஆவியாகி அகிலகலை களாகி
அண்டசராசரமாய அறிவின் அறிவுமான　　(தேவி

சரணம்

(1)

நாடு மடியவாகள நாவினிற கோயில் கொணடாய
பாடு மடியவாகள பண்ணி லிசைநது நின்ருய்
தேடு மடியவாகள சிததத தமாநது நின்ருய்
ஏடும மணிமாலையும் என்றுங கரத்திற கொணட

(2)　　　　　　　　　　　　　　　　　　　(தேவி

பகதருக காகவேணடி பாரதி யாகிநின்ருய
சிததருக காகவேண்டி சிதரூபி யாகிநின்ருய
சததியு பாஸகாககுச சாரதை யாகிநின்ருய்
முததருக காகமோன குருவாகி நின்றருளும　　(தேவி

(2)

மருவியெனை நிததமும நன்மதி தந்தருளி
இருவினை மலமாயை இருளினை நீககியொரு
குருவென வந்துமிநதக குவலயத தேயெனையும்
பெருமையு டனெளிரும் பெருவாழ்வு தநதருளும்(தேவி)

# தேவி திருவாரம்

## துணைப்பஞ்சகம்

நாதநாமக்கிரியை " பித்தாபிறை சூடி " ரூபகம்

மெட்டு

1

தாயேவுனக் காளாயபல நாளுஞ்சர ணாயே
ஆயேயபி ராமீயெனப் பண்ணுற்றுதி செய்தேன்
நீயேயெனைச் சேய்போற்பரி பாலித்தரு ளாயேல்
நாயேனினி யாரைத் துணை கொள்வேன்பகர் வாயே.

2

நீயேகதி நீயே துணை நீயேபர மென்றே
நாயேனுனை நாடிப்புகழ் பாடத்திரி கின்றேன்
தாயேயெனை யாளாதினி வாளாயிருந் தாயேல்
சேயேனினி பாரிற்றுணை யாரைக்கொளு வேனே.

3

பெம்மானசிவ னோடேநட மாடிச்சய மாயே
சிம்மாசன மீதேகொலு வோடேயமர் தேவி
எம்மாலில லாதேயினி பாரிற்பிற வெய்தல்
அம்மா துணை கொண்டேயெனை யாள்வாயிது நாளே.

4

என்னாகிலும நீயேயெனை வந்தாளுவை யென்றே
நன்றாகினு நீதாகினும நலியாமன மானேன்
இன்றே துணை நின்றேயெனை யாட்கொண்டரு ளாயேல்
என்றுயென யாரையினி நானேயழைப் பேனே:

5

தன்னைத்தொடர் துன்பத்தினை பாராதருள் கின்ற
அன்னைக்கெதி யாரேவுளர் பாரிற்பகா வாயே.
பொன்னைப்பெற சீரைப்பெற போதம்பெற வேதான்
என்னைத் துணை கொண்டேயினி வாழ்வாயென -தாயே

# காத்தற் பதிகம்

ஆரபி : " முத்திநெறி யறியாத " ஆதி

மெட்டு

1

பித்தனெனப் பாரின்மிசை பேய்போலத் திரிவேனைப்
பத்தரொடு கூட்டுவித்து பரகதிதான காணும்வண்ணம்
சித்தமிசைச சீர்கொண்டு தேவியெனை ஆளாயேல் .
இத்தலமீ துற்றதுணை யாவருளார் செப்பாயே

2

பேய்போலத் திரிந்துழலும் பேதையெனை நின்னருமைச்
சேய்போலப் போற்றிநிதந் சீர்பலவுந் தந்தருளே ;
காய்போலப் பிறந்த வெனைக் கனியாக்கி எனையாண்டு
தாய்போலப் பாவித்துத் தாங்கியருள எந்தாயே.

3

மண்ணின்மிசை மாண்புற்ற மானிடனுய்முன்னிழைத்த
புண்ணியத்தால் நினனடியைப் பூசித்தே யென்னாளும்
பண்ணிசையாற் பகலிரவும புகழ்பாடித் திரிவேனைக்
கண்ணிமைபோற் காமாட்சி காத்தருள்வா யின்னாளே.

4

தஞ்சமென நாடிநிதந் தாளிணைகள் போற்றுமெனை
அஞ்சலென வித்தருணம அபயந்தந் தாண்டருளே;
செஞ்சரணஞ் சாரந்தோர்க்குச சீரெல்லாந் தருமாதே
கஞ்சிவளா காமாட்சி காத்தருளே யின்னாளே.

5

அறிவில்லா அறிவதனை அறிவாக கருதியிங்கு
குறியிலலாக் குறியதனைக் குறியாக்க கொண்டுநிதம்
நெறியிலலா நெறிவழியே நெறியின்றித் திரிவேனுக்
கறிவெல்லா மறிகின்ற அறிவினைநீ யருளவாயே.

6

கூத்திடுமோர் கோமானைக் கூடிநிதங் களிக்குமுனை
ஏத்திடவே மதியளித்துளன்றுமெனைத் துணைகொண்டே
பூத்திடவே நிதியாவும பூத்திடவே நின்னருளும்
காத்தருளவாய் காமாட்சி கற்பகமாய் வந்தினறே.

7

காயமுடன் வீடுதருங கஞ்சியில்வாழ் காமாடசி
தாயடிகள போறறிநிதந் தாரணியில சீரபெற்றே
நோயநொடிகள் தீருமவணணம நுதலமீதே
குஙகுமத்தை
நேயமுடன பூணபவரே நித்தியமாய் வாழ்வாரே.

8

திங்களமுடி சூடுமரன் சீரபெறவே, யவர்பாலே
தஙகியருள காமாட்சித் தாயடிகள போறறிடுவோர
மஙகளமும் மாணபதுவும மகிழவுநிறை வாழவதுவும்
பொஙகிடவே பூவுலகிற் போகமெலலாம பெறுவாரே.

9

காரியமுந தாஞகிக காரணமுந தாஞகிச்
சீருடனே யாவுமருள தேவிபதந தஞ்சமெனப்
பாரினமிசைப் பகலிரவும பகதியுடன பாடுமவர்
கோரியவை கைகூடிக குவலயத்தே வாழ்வாரே.

10

தாயாகுந் தேவிபதந் தஞ்சமெனச சார்ந்துநிதம்
வாயார வாழத்திடுவோர வல்விணைகள தீரநிங்கு
நோயேதும் வாராதே நுணணறிவும பெறறுயென்றும்
தேயாத பெருநிதியுஞ் சீர்பலவும பெறுவாரே.

# பரஞான பஞ்சகம்

காட்டை ரூபகம்

"தோடுடைய செவியன்"

மெட்டு

(1)

பேயெனவுந் திரிந்தே வினைமூடியே பீதிப் பிறவாழி
மாயையினிற் புகுந்தே மனமவாடியே மாயும்
அடியேனைத்
தாயெனவும் பரிவாயப படிமீதினிற் சாலத் தனமோடே
சேயெனையும பரஞா னமுமேபெற தேவீ யருள்வாயே.

(2)

தொந்தமான பவசா கரததேறியான் தூயக
கதிகாணச
சொந்ததாயு மெனவா கியென்பாலருள்
தூவிப் பெருவாழ்வுந
தந்து பேணிப் படிமேற் பரஞானமுஞ்சாலத்
தரவேதான்
சிந்தைகூரு முனைப்போற் றியுஞ்ஞேடுறத் தேவீ
தயைகூரே.

(3)

அந்தநாளி லொருதா யெனவே யெனையாண்ட அபிராமி
எந்தநாளு முனையே கதியாகவே ஏததிப் புகழ்வேனை
முந்திநாளின் வினையாற் பிறவாழியில் மூழ்கித்
தவியாமல்
இந்தநாளிற் றுணையாய்ப் பரஞானமு மீந்தே
யருள்வாயே,

(4)

பந்தமுடன் பலமா வினைசூழ்ந்தினிப் பாரிற்
றவியாமற்
சந்தமுடன் புகழ்பா டியுமாடியுந் தஞ்சம புதவேனை
சொந்தமுடன் உனதா ரருள்சேர்ந்தொரு
தூயக கதிசேர
அந்தமுடன் பணிகளை விடாதோர் துணை
யாவாய் எனதாயே.

(5)

சுத்தியாகி மனமவாக கொடுகாயமுந் தூயப்பதமீதே
பக்தியாகிய புகழ்பா டிடுமேன்மையும் பாரிற் பவிசோடே
சித்தியாகி யுனதா ரருள் பூத்திடுஞ் சீருஞ் சடமோடே
முத்தியாகித் திகழ்வாழ் வளித்தாண்டருள
முகாம பிகைத்தாயே

# தேவி பஞ்சகம்

(1)

உலகெ லாமரு ளுத்தமி யாமவள
பலக லைகளுமே நாயகி யானவள
மலம றுத்தொரு மாண்பினை யீபவள
தலம திற்பெருந் துணையுமந் தேவியே

(2)

சம்பு நாதரைச் சார்ந்திடுஞ் சாமபவி
அம்பை ஆரணி பூரண சுந்தரி
நம்பு மன்பர்கள் ஞானமும பெற்றிடச்
செம்ப தந்தரு மம்பிகை தேவியே.

(3)

எணப லாமுரு கிபபுகழ பாடிடு
மன்யா பஙகினில் நின்றருள செயதவா
துனபம யாவுந துடைததுமிப பாரினில்
இன்பம யாவையுமீபவள் தேவியே.

(4)

சஙக ரன்சதி யாகிடு மம்பிகை
தஙக மேனிகொள் சுநதர சாம்பவி
சஙகை யின்றியே வாழ்ததுவோர்க கென்றுமே
மஙக ளஙகளை யீபவள தேவியே.

(5)

அண்டம யாவையு மீன்றரு ளம்பிகை
சண்டி நாரணி, தாயசிவ காமினி
பணக லாற்புகழ் பாடிடு மன்பரைக
கண்க ளாலுடன் காப்பவள் தேவியே

# தேவி திருப்பதிகம்

அட்டாணு அலலது சஙகராபரணம் ரூபகம்

"மநதிரமாவது நீறு" மெட்டு

(1)

மஙகள மீபவள் தேவி மாண்பு மிகுததவள் தேவி
சஙகடந் தீரப்பவள் தேவி சாரத் தருபவள் தேவி
எஙகுமி ருப்பவள தேவி யீடுயா வற்றவள தேவி
பஙகயன் மாலரன் போற்றும பாங்குடை யாள்
தேவியாமே

(2)

விதிதனை வெலபவள் தேவி வெஙதுயர் தீர்ப்பவள் தேவி
நிதிதனை ஈபவள தேவி நிம்மதி யீபவள் தேவி
கதிதனை யீபவள் தேவி கண்ணெனக காபபவள் தேவி
பதியென யீசனுர் பஙகிற் பாதிகொள் வாளதே
வியாமே

(3)

நறறுணை யாகுவள தேவி ஞானம ளிபபவள் தேவி
சொற்றுணை'யாகுவள் தேவி சுருதிப பொருளமத் தேவி
பற்றறுத தோர்புகல தேவி பகதர்க கிரஙகுவள் தேவி
பெற்றண டமயாவையும பேணும் பீடுடை யாள்தே
வியாமே.

(4)

வல்வினை தீர்ப்பவள் தேவி வாழவே வைப்பவள தேவி
தொல்வினை தீர்ப்பவள தேவி தூய்மை தருபவள் தேவி
சொல்வள மீபவள் தேவி சொாககம ளிபபவள் தேவி
கல்வியுஞ செலவமுங தந்தே காபபவ ளுநதே வியாமே.

(5)

சகதி யளிபபவள தேவி சற்குரு வாகுவள தேவி
பகதி யளிபபவள தேவி பரகதி யீபவள் தேவி
முகதி யளிபபவள் தேவி மும்மலங தீர்ப்பவள் தேவி
சிததி யளிததெமைக காககுஞ் சீருடை யாளதே
வியாமே.

(6)

இட்ட மளிப்பவள் தேவி ஏற்ற மளிப்பவள் தேவி
பட்ட மளிப்பவள் தேவி பார்சுக மீபவள் தேவி
கட்டங தவிர்ப்பவள தேவி காலனை வெல்பவள் தேவி
அட்ட விலககுமி யாகும் அம்பிகை யேதேவி யாமே.

(7)

தேடற் கரியவள் தேவி சேவைக் குரியவள் தேவி
நாடற் குரியவள் தேவி ஞானப் பொருளவள் தேவி
பாடற் கினியவள் தேவி பக்தர்க் குரியவள் தேவி
கூடற் கரசிமீ னாக்ஷி யானவள் தேவியு மாமே.

(8)

நோயினைத் தீர்ப்பவள் தேவி நுண்ணறி வீபவள் தேவி
பேயினைத் தீர்ப்பவள் தேவி பெரும்புக ழீபவள் தேவி
சேயினைக் காப்பவள் தேவி செல்வந் தருபவள் தேவி
தாயென யாவையு மீன்று தாங்குவள் தேவியு மாமே.

(9)

மந்திர ரூபியத் தேவி மாயசொ ரூபியத் தேவி
தந்திர ரூபியத் தேவி சாத்திர ரூபியுந் தேவி
யந்திர ரூபியத் தேவி யாதும ளிப்பவள் தேவி
சுந்தர ரூபியு மாகித் தோன்று வதுந்தேவி யாமே.

(10)

செஞ்சுடர் போலவே மேனி செம்பொன் நிறத்துடன் வீச
கொஞ்சிய சீருடன் கூடிக் கோலச் சுமங்கலை யாயென
நெஞ்சினில் நித்தமும் நின்று நித்திய வாழ்வினை யீயும்
கஞ்சியிற் காமா க்ஷியாகுங் கௌரியித் தேவிதா னாமே.



# அமர பஞ்சகம்

(1)

உலகுக ளகிலமு மருளிய வுமையவள
பலபல வுயிர்களி னுளமதி லுறைபவள
நலமதை யுதவிடு மமையென வருபவள
தலமதி லவளடி பணிபவ ரமரரே.

(2)

மலமுழு தகலவு மருடரு மிமையவள
பலவகை நிதிகளு முதவிடு மமையுமை
குலமது வளரவு மருளொரு குலமகள
தலமதி லவளடி பணிபவ ரமரரே.

(3)

மலையென வருமிட ரகலவு மருளபவள
கலைகளை யருளுமை கதிதரு பரசிவை
நிலைபெறு நீதிதனை யுதவிடு நிருமலி
தலைமிசை யவளடி யிடுபவ ரமரரே.

(4)

வளமிகு மிகசுகம வலுவினி லருளபவள
தளாவது சிறிதுமில கிதபல தருபவள
இளமையு மினிமையு முதவிடு மிமையவள
உளமதி லவளடி யிடுபவ ரமரரே.

(5)

அறிவினை யறியவ லறிவினை யருள்பவள்
குறியென பரமது கொளுமவ ரறிபொருள்
பொறிகளை வசமென வுடையவ ருறவினள்
நெறியுட னவளடி நினைபவ ரமரரே.

## திருவருட் பஞ்சகம்

(1)

அருவென நினைவுறி லருவென வுறைபவள
உருவென நினைவுறி லுருவென வருள்பவள்
தருவென நினைவுறி லதுவென வருளுமை
திருவரு ளெழிலினை யறிபவ ரரிதே.

(2)

திருவென வடியவ ருளமதி லுறைபவள
தருணமு தவியரு ளமையுமை யநுபவை
கருவினி லுறுவினை யறவரு ளிமையவள
திருவரு ளெழிலினை யறிபவ ரரிதே

(3)

இருவினை மலமற வெனதுள முறைபவள
கருமற லியகல கதிதரு மமையுமை
குருவென வடியவா கனவினி லருளபவள
திருவரு ளெழிலினை யறிபவ ரரிதே.

(4)

இருநில சுகமதை எளிதினி லருளபவள்
பெருநிதி யொடுபல பெருமைக ளருள்பவள்
அருமறை புகழ்தரு மருடரு மிமையவள்
திருவரு ளெழிலினை யறிபவ ரரிதே.

(5)

பொருளுட னருடரு புகழ்மிகு மமையுமை
மருளற மதிதரு பகவதி பயிரவி
இருளற வொளிதரு மிமையவள் பரசிவை
திருவரு ளெழிலினை யறிபவ ரரிதே.

## திருவடிப் பஞ்சகம்

1

அருமறை முடிவென வருவது மடியவர்
மருளற வொளிர்வது மறிவது தருவது
மிருவினை மலமற பரசுக மருள்வதும்
அருளொடு திருவருள் திருவடி தானே.

2

சுரர்களு நரர்களு மடியவர் முனிவரு
மரியுட னரனயன் முடியிடு வதுமொரு
பரகதி தருவது மகிலமு மருள்வது
திரிபுர பயிரவி திருவடி தானே.

3

நிதிதனை யருள்வதும் நிதமொரு துணையென
மதிதனி லுறைவது மகிமைகள் தருவதும்
விதிதனை யகலவு மருள்வது மொருபர
கதிதனை யருளுமை திருவடி தானே.

4

அடிபுக முடியவர் பிணியற விடுவது
மிடியொடு பலவகை வினையற நலமொடு
படியினில் நிதியொடு பவிசுகள் தருவதும
நொடியினி லருளுமை திருவடி தானே

5

பழவினை யறபர கதியொடு வுடலது
கிழமுறு விதியற விளமையு மருள்வதும்
எழுவகை பிறவியு மொழியவு மருள்வது
மழகிய வுமையவள் திருவடி தானே.

## அம்பாள் பஞ்சகம்

1

அண்ட நாயகி ஆதிரை யானிடங்
கொண்ட நாயகி கோமள நாயகி
கண்ட போதினிற் றீவினை தீர்ப்பவள்
தொண்ட ராருயிராக கற்பக வல்லியே.

2

மங்க ளந்தரு சங்கரன் பங்கினள்
அன்ப ராயுயி ரான பெருந்தகை
என்பெ லாமுரு கிப்புகழ் பாடுவோர்க
கின்ப மேயரு ளீசைகா மாட்சியே.

நோயி னைக்களைந் திட்டருள் செய்பவள்
பேயி னைப்பறந் தோட்டிடச் செய்பவள்
சேயெ னைப்பிரி யாதருள் நோக்குடன்
தாயெ னப்பரிந் தாற்றுமீ னாக்ஷியே.

ஆதி நாயகி அற்புத நாயகி
வேத நாயகி வெற்பருள் நாயகி
கோதை நாயகி கோமதி நாயகி
பாத மோதுவார் பாரிற் றேவரே.

தஞ்ச மானவர்க் கஞ்சல்கூ றம்பிகை
பஞ்ச பாதகந் தீர்த்தருள் பார்வதி
கஞ்சி வாழுமை யாரரு ளன்பரை
சீருளர் யாருமிங் கில்லையே.

சங்கராபரணம் " கூற்ருயினவாறு " மெட்டு

(1)

நீக்கே துமிலா நிறைகின் றநினை
நிமலை கமலை யெனதா யெனவே
வாக்கால் மனத்தால் வளர்கா யமதால்
மலர்த்தாள் தொழுதே னிரவும் பகலும்
நோக்கால வடிவுந் தனமும் புகழும்
நொடியிற் பெறவே யருள்தா யுமையே
சாக்கா டறவே சமயத் துணையாய
சகலச சுகமுந் தமியேற் கருளே.

(2)

தருவே மணியே யிமையோர் பசுவே
சதுர்வே தமுமோ திடுமெய்ப் பொருளே
திருவே பரமே சிவகா மினியே
செயமே தருமோ ரெனதா ருயிரே
குருவே குணமே மிகுமோ ருறவே
குறைதீ ருமையே எனவோ தடியேன்
கருவே யணுகா பரமா கியவோர்
கதியே பெறவே யருளவா யுமையே.

(3)

பாவாற் பலவாய்ப் புகழ்பா டியுமநான்
பகலாய இரவாயப் பதமே துணையாய்ப்
பூவாற் பரவித் தொழு தேனுனையே
புவியிற் புகழுந் தனமுந் தருவாய் ;

காவா தெனைநீ யுறைவா யெனிலோ
கருணாநிதியென் றுணையோ துவதோ
தேவா திபனுந் திருமா லயனுந்
தினமே துதிசெய் சிவமா துமையே.

(4)

நீயே கதியும விதியும் மதியும
நீயே பரமுந் துணையும் எனவே
தாயே வுனைநா னிரவும பகலுஞ்
சலியா துவணங் கினநித தமுமே ;
தீயே யெனவே யெனைவாட் டிடுமித
தீரா வினைதீர்த் தெனையாள் குவையே
சேயே யெனநின் னடியா ரையெலாந்
தினமுந் தினமுந் துணைகொள் உமையே.

(5)

உளளத துணையே வுறுநற் றுணையாய
உவகை மிகவே தொழுமே ழையைநீ
தளளத தகுமோ தகுமோ வமையே
தருமமிதுவோ எனதா யுமையே ;
தெள்ளத தெளிவா மதியோ டுலகோர
சேவித திடுமோ எழிலார் பதுமம
அள்ளக குறையா நிதியீந் துனதோர்
ஆளாய்த திகழ வருள்செய் குவையே.

## அடியார்க்கடிமை பஞ்சகம்

(1)

எநதாயின் அடியார்கள் எல்லார்கடும் அடியேன்
இமவான்றன் மகளாளு ளுமையாட்கு மடியேன்
சிந்தாத சித்ததிற் சீர்கொண்டாட் கடியேன்
தேவிககே தொண்டாற்று மடியார்க்கு மடியேன்

நொந்தாரை வாழ்விக்கும் நோன்புடையாட் கடியேன்
நூலிடையாள் மீனுளின் மெய்யடியார்க் கடியேன்
வந்தாளும் பண்புடையாள் வார்கழலுக் கடியேன்
மங்களமே யீவாளென் மாதாவுக் காளே.

(2)

வேதங்கட் கப்பாலாம் வியன்மாதுக் கடியேன்
மீனவிழியா ளருள்கண்டா ரெல்லார்க்கு மடியேன்
நாதங்கட் கப்பாலாம் நாயகிக்கு மடியேன்
ஞானத்தின் வடிவானாள் நல்லாளுக் கடியேன்
பாதங்க ளாற்பலவு மீவாட்கு மடியேன்
பரகதிதந் தாட்கொள்ப ராசக்திக் கடியேன்
கீதங்க ளாற்போற்றும் அடியார்க்கும் அடியேன்
கேடறியா வீடுதரும் அபிராமிக் காளே.

(3)

தும்பிக்கை கொண்டானை யீன்றாட்கு மடியேன்
துயர்நீக்கித் துணைகொள்ளும் தூயாளுக்கடியேன்
நம்பிக்கை கொண்டோரின் நல்லாளுக் கடியேன்
நான்மறைகள் சொற்பொருளாம் நாயகிக்குமடியேன்
அன்பர்க்கே ஆளாகு மம்பிகைக்குமடியேன்
ஆதிரையான் பாகத்தாள் அம்மைக்குமடியேன்
உம்பர்க்குந் தாரகமா முயர் தேவிக்கடியேன்
ஒன்றாகிப் பலவாகி உறைபொருளுக்காளே.

(4)

அண்டமெலா மீன்றருளு மபிராமிக் கடியேன்
ஆரூரன் பாகத்தா ளடியார்க்கு மடியேன்
தொண்டரெலாம் போற்றிசெயுந் தூயாளுக் கடியேன்
சுருதிபுகழ் மெய்ப்பொருளாம் தேவிக்கு மடியேன்

வெண்டுகிலாள வாணிபுகழ் வியன்மாதுக கடியேன்
வேண்டுவன யீநதருளும விணணரசிக கடியேன்
கண்டவுடன் விஜைதீாகருங கழலாளுக கடியேன்
கஞ்சிநகர் தங்கியருள காமாக்ஷிக காளே.

(5)

எங்குறைக டீாததருளு மீஸ்வரிககு மடியேன்
ஈசைககேயாளாளா யாவர்ககு மடியேன்
பொஙகுநிதி தநதருளும பூரணிககும அடியேன்
போகமெலா மீநதருளும புனிதவலலிக கடியேன்
தஙகவேல தரிததாஜை யீன்றாளுக கடியேன
சாதுகக ளுளளமுறைச சகதீசைக கடியேன்
மஙகளமே யென்நாளு மீவாளுக கடியேன
மாதுமையா ளெனவொருளிரும மாதாவுக காளே.

# தாயியற் பஞ்சகம்

1

எஙகேயென் சேயெனறே எநநாளும பரிவாகி
இஙகேவந தெவ்வினையுந தீாததடியா பஙகுறைதல்
மஙகாத செல்வமுடன் மாணபதுவு மீநதருளும்
சிஙகாரி கஙகாளி சிவகாமித தாயியலே.

2

தஞ்சமென நாடியவள செஞசரணே கதியென்று
நெஞ்சுருகிப போறறிசெயும நினமலமா மன்பாககு
பஞ்சநிதி யுநதநது பாரிலுயா வாழவருளல
கஞ்சிநகர் வாழுமொரு காமாக்ஷித தாயியலே.

3

பண்டைவினை யுங்கழிய பாரிலுயர் பவிசருளி
அண்டிநிதந் துணையாகி ஆண்டருளிப் பாவித்தல்
வேண்டுகிலாள் நாமகளும் பொன்மகளாம் பூமகளும்
கண்டுநிதந் தாளபணியுங் காமாக்ஷித் தாயியலே.

முன்னைவினை யும்போக்கி நிகழ்வினையிற றுணைநின்று
பின்னைவினை வாராதே பேணியடி யார்காத்தல்
கன்னியென மறைபேசுங் கலியாண மங்கையென்றன்
அன்னைபர தேவதையா மபிராமித் தாயியலே

எப்பிழையுந் தானபொறுத்து ஏழமையற வேபோக்கி
அப்பழுக்கு மேதுமற்ற அவனிபுகழ் வாழ்வளித்தல்
முப்புரமுந் தானெரித்த மூவர்க்கு முதலான
அப்பரிட பாகமுறை அபிராமித் தாயியலே.

“பொன்னார் மேனியனே”
மெட்டு

1

பொன்னே பூரணியே புவியேழு மளித்தவளே
முன்னாள் யானுமிங்கே யிழைத்திட்ட வல்வினையால
இன்று ளென்னையுமநீ ஏற்றுக்கொண் டருளியதால
அன்று யுனையல்லால இனியாரைத தொழுவேனே.

2

சும்மா விருந்தவெனைச் சூடொன்று காட்டியுமே
பெம்மான் முருகனுமவந தாட்கொண்டன் றருளியபின்
அம்மா நீயுவந்தே அன்பாய டுத்தனையால
எம்மா லுனைநினையா திருக்கவுமிங கியலாதே.

கண்ணுற் கோரியவை கைகூடப் பண்ணுமலைப்
பெண்ணு மாதுமையாள் பேற்றைறதத ரும்பதத்தைப்
பண்ணுற் பாடியும்கான் பலகாலு மின்புறுங்கால்
புண்ணுய்ப் புழுங்கிமனம் வாடுதலு மிங்கிலையே

4

என்ருய காமாட்சி இணையேது மற்றவளே .
அன்றே வந்தெனையும் ஆட்கொணடே யருளியபின்
நன்றே வருகினுமென் தீதேதான் வருகினுமென்
என்றே யினி துறையு மெனககே து மனத துயரே.

5

நீயே கதியெனறு நின்மலமாம சிநதையொடு
நாயே னநுதினமும் நாடுவதும் யாதெனிலோ
சேயே யெனவென்னைக் கணணிமைபோல எநநாளும
தாயே யெனபபோற்றுங காமாக்ஷித தாளிணையே!

## அடித் துணைப்பஞ்சகம்

(1)

தேவி யேயுல கஙகளை யீபவள
தேவி யேபர ஞானமு மீபவள
தேவி யேமிக போகமு மீபவள
தேவி யேதுணை யென்றடி போற்றுவீர.

(2)

தேவி யேயம பீதியை நீககுவள்
தேவி யேபெரும் பேற்றையு மீபவள்
தேவி யேபிற விப்பிணி தீர்ப்பவள
தேவி யே துணை யென்றடி போற்றுவீர்

(3)

தேவி மேபத மோ துவாாக காருயிர்
தேவி யேபிழை யேபொறுத தாள்பவள்
தேவி யேவொரு மானமுங் காப்பவள்
தேவி யே துணை யென்றடி போற்றுவீர்.

(4)

தேவி யேகுடி பாரமு மேற்பவள்
தேவி யேபல யோகமு மீபவள்
தேவி யேமன நிம்மதி யீபவள்
தேவி யே துணை யென்றடி போற்றுவீர்.

(5)

தேவி யேபிணி தீர்த்துமே யாளபவள
தேவி யேநிதி யாவையு மீபவள
தேவி யேகலை ஞானமு மீபவள்
தேவி யாவது கஞ்சிகா மாக்ஷியே

## சரணப் பஞ்சகம்

(1)

அம்மைநீ அப்பன்நீ அன்பர்தேடுஞ் சோதிநீ
இம்மைநீ மறுமைநீ ஈடில்லாத தெய்வம்நீ
செம்மைநீ சீரும்நீ செகங்களீன்ற தாயுநீ
எம்மையா ளுநின்னையே ஏத்துவோ மென்றுமே.

(2)

அறிவுநீ அருளும்நீ ஆற்றலீயு மம்மைநீ
உறவுநீ உயிரும்நீ உள்ளம்வாழுமீசைநீ
குறியுநீ குணங்கள்நீ கூடலவாழு மன்னைநீ
இறையுநீ எவையுநீ என்னுளேநீ வாழ்வையே

(3)

எண்ணும் நீ எழுத்தும் நீ எத்துவோர்கள் வீடும் நீ
மண்ணும் நீ விண்ணும் நீ மாசிலாத நடுவும் நீ
கண்ணும் நீ கருத்தும் நீ காமகோடி வாழ்வு நீ
பண்ணிலே நிதமுமே பாடுவேனுன் பாதமே.

(4)

எங்குமே நீக்கிலா மேவிநிற்கு மீசை நீ
பொங்கியோர் மங்களம் புரிந்துகாக்கு மம்மை நீ
பங்கிலே பரிவுடன் பரமன் கொண்ட தாயு நீ
சங்கையே தின்றியுன் தாள் வணங்கி வாழ்வனே.

(5)

இரவு நீ பகலும் நீ என்றுமோடுங் காலம் நீ
பரமும் நீ தேசம் நீ பரவுவார்கள் பற்றும் நீ
கருத்துவார் குருவுமாய கஞ்சிவாழு முன்னையே
சரணமா யடைந்தனன் சரணம் நாளுஞ் சரணமே.

# வாழ்வுப் பஞ்சகம்

(1)

வாழ வேண்டும் நான் வையகத்திலே
வாகை யோடுமா சற்ற சீருடன்
ஆழ வேண்டும் நா னன்பு மீறியே
அம்மை நின்பதத் திவ்ய வாரியில்
சூழ வேண்டும் நான் சுத்த பக்தரைத்
தூய்மை சேருமோர் வாய்மை யோடுமே
ஏழு லோகமு மீன்ற யீசையே
ஈடி லாததோர் ஏர்கொள் தேவியே.

பாட வேண்டும்நான் பகதி பூண்டுமே
பாரி லுன்பதம் பரவி நிததமே
கூட வேண்டும்நான் கொள்கை யோடுமே
கோதி லாததோ ருன்ற னன்பரை
தேட வேண்டும்நான் திககெ லாமுமே
சீர்மிகுந்திடுத தொண்டா தமமைபே
நாட வேண்டுமே நித்தம் நின்னருள
நாலு வேதமு மோது தேவியே. 2

பற்ற வேண்டுமநான் நின்ப தததினை
பண்பு கொண்டுமே பாடி நிததமும்
சுற்ற வேணடும்நான் உன் றன் கோயிலை
தூய வுளளமே கொணடு நாளுமே
மற்ற குததிரத தெயவம நாடிடா
வண்ண மோடுநான வாழ வேண்டுமே
பெற்ற தாயினும் பாச மிககெனைப்
பேணி நாளுமே காககு மன்னையே. 3

காண வேண்டும்நான் கனவி லேனுமே
காண வேயொரு வுன்றன் மேனியை
பேண வேண்டும்நான் பிளளை போலவே
பேற்றை யீயுமுன் பொற்பததினை
பூண வேணடும்நான் நித்தம் நெற்றியில்
பூதி தநதிடுங குஙகுமந் தன்னை
நாண வேமதன் சீரமி குந்திடும்
நாலு வேதமும போற்று மன்னையே.

பேய்கக ணஙகளைப் போககி என்னையும
பேணி நின்னருள் ஈதல் வேணடுமநீ
வாய்க்கும் வல்வினை தீர்ந்து மிஙகொரு
மாண்பு சேருமோா வாழ்வு மீகுவாய
சேய்ககுத் தாயுமே செயதல் போலவே
சீர்கள் தந்தெனை யாளவேண்டும்நீ
தாய்க்கு மேலொருதாயு மாகியே
தாங்கு மன்னைகா மாக்ஷிதேவியே. 5

## மறவாப் பஞ்சகம்

தோடி · "மற்றுபற்றென" சாபு

மெட்டு

நம்பு வாரதமை நாடி யேநிதம
நணணி யாரருள கூருமுன்
செமப தஙகளைச சீரு டனபுகழ்ந
தேதது மேழையி னூழவினை
வமபு தீரவும் வந்து மாணபுள
வாழவு தநதெனை யாளுமோா
அமபி கேவுனை நான் மறககினும
நீம றப்பதிங கிலலையே. 1

தன்னை யேவுயா வாக வேயகங
காரம பூண்டவாக கரிலையாநீ
பொனனை யேபர மாக வேநினை
வுற்ற காமிகட கரிமையநீ
உன்னை யேகதி யென்று நாடுவோர்க
ளெளியையாகி ய ருளசெயயும
அன்னை யேவுனை நான்ம றககினும
நீம றபபதங கிலலையே. 2

களள மாகவே மெளள வேயெண
துளள மேபுகுந தெனனையாட்
கொளள வேயொரு நளளி ராவநு
கூலை யாயெனை மேவியே
என்னி யேழைமை ஏசி டாதொரு
வாழவு யீநததோர் பேரருள
வெள்ள மேயுனை நானம றககினும
நீம றப்பதிங கில்லையே. 3

தாயை யேநினை யாமலேயொரு
சேயு மேநிதம் வாழினும்
சேயை யேநினைந் தோடி வநதமு
தூட்டற் ருயியல் பல்லவோ?

ஆயி போலுமே அன்று வநதுநீ
ஆட்கொண் டேயெனை ஆண்டதால
மாயை யாலுனை நானம றககினு
நீமறப பதிங கிலலையே.

பறறி நாளுமுன் பாத மேகதி
எனறு வாழுமிங கெளியனேன்
கற்றி லேன்பல நூலகள பாரினிற்
கேட்டிலேன ஞானி யோருறை
முற்று முன்னரு ளாலுன் சேயபல
ஞானமும பெற வெண்ணினேன
பெற்றதாயினைச் சேய்ம றககினுந
தாயமறபப திங கிலலையே. 5

## வினைதீர்ப்பதிகம

நீகக முடியா பழவினை தன்னை
நீககி யருளு நீமலலீ யனறோ ?
சீககி ரமாயுவந தனறு மடுவிற்
சிககி யவெணனைக கரைசேற் றுநீயே
வாககு மீநதது மெயயது வாருமேல்
வநது யிபபொழு தெனற னிடததுகால்
வீகக முநீககி யருள் செய சிடுவாய
மேன்மை யுடன்கஞ் சிவாழுமென் தாயே. (1)

அந்த நாளெனை ஆட்கொள வெண்ணியே
அன்னை போலவே வநதருள கூறநதுநீ
தந்த பேரருள சறறும மறபபனோ
தாயே சேலவிழிக கறபக வல்லியே ;
சிந்தை யுளளிருந தென வினை யாவையுஞ
செவ்வ னேகளைந திடடருள தெய்வமே
விநதை யேயென வநதென் னிடததுகால
வீகக முநீககி யருள்வையென தாயே. (2)

அமுத சேயினுக காகமுன் காழியில்
அமுத மூட்டிய தாயுமநீ யல்லவோ ?

பொழுது மன்பர்க குறுதுணை யாகிநி
　　பூரண மாயருள் தாயுமநீ யன்றோ ?
பழுதி லாததோரா பகதிசெய திட்டுநான்
　　பாதங கதயெனப் பாடிய புகழ்நதே
தொழுது வந்திடு மென்ற னிட துகால
　　தூய தாகவு ஞரருள் செய்வையே. (3)

தொாநதப் பிறவிக கடலிடை மூழகி
　　துனப மிகுததுத துடிததும போதும
முநதி யிழைததோர் நலவினை யாலே
　　முற்று முனதடி நமபித துதிததேன்
அநத நாளிற் கனவினி லனனை போல
　　அண்டி யன்னததது மெயயது வானுல்
இந்த நாளுவந தெணனிடர் தீாத நீ
　　இன்ப மளிபபதுன பாரமென தாயே. (4)

கன்றின் கூககுரல் கேட்டுச் சடுதியிற்
　　காகக வேவரு மாவினைப போலவே
என்றும் நின்புகழ பாடிப பணிநதிடும்
　　ஏழை யென்வினை நீககலுன பாரமே ;
அன்று வந்தென ஆட்கொணட நீயுமே
　　யாது மேயறி யாதுபோ லுற்றிடில்
இன்று யிஙகெனக கார துணை செபபுவாய்
　　ஈசை யாகுமென் கஞ்சிகா மாக்ஷியே. (5)

என்று மடியா ருள்ளத திருநதுநீ
　　யாவு மளிதத லியலபுனக கல்லவோ
அன்று வலியவந தெனனை யன்புடன்
　　ஆட்கொண் டருளிய பணபதி ஞலே
நன்று கலைகளைக கற்றிலா யானும்
　　ஞான முற்றிங கொளிர்வது மாகுமேல்
இன்று யிவ்வினை நீக்குத லிஙகுனக
　　கெளிதா குமென்பதற் கேதிங் கையமே. (6)

யானு முன்வினைக காளா யுலகினில்
ஆகி மங்குதல் நீதியிங காகுமேல்
ஏது வந்தெனை யாட்கொண் டருளினுய்
ஈசை யாகுமென் சஞ்சிகா மாக்ஷியே ?
தானு வந்தொரு சேயினை யீன்றபின்
தாபந தானுறத தாயவிட லாகுமோ ?
தேனு கற்பகஞ் சிந்தா மணியுமாஞ்
சீலி என்றுமே செப்புதல் நினைனயோ ? (7)

நின்ப தந்தனை நிததமும நெஞ்சினில்
நேம மாகவே வைதது புகழுநதிடும்
அனபன் யானென் பதிஙகுமெய் யாகுமேல்
அண்டி யெனவினை தீாததலுன் பாரமே
துனபம யாவையுஞ் சாலத துடைத தெனைத்
தூய்மை யாககிடுந தாயுமநீ யல்லவோ
இன்பம் யாவையு மீநதருள கறபகம
என்றே யாவரும போற்றுமென் அம்மையே. (8)

மற்றுப் பற்றெனக கின்றியென் அன்னையே
மாண்பு மிககவுன செஞ்சர ணுடியே
பெற்ற தாயுநீ பேணும புகலுமநீ
பேற்றைத தருமபெருந தெயவமு நீயே
சுறறம் நட்புமநீ தூய கதியுநீ
சொற்குத துணையுநீ என்றுசொாள என்னை
முற்று முன்னருட் காளுமா யாககிநீ
முன்வினை தீாதது முகதி யருள்வையே (9)

பாரிற் தேவியின் ஆரருள பெற்றதோர்
பகத னேயெனப் பேர்கொளும் யானுமே
யாரு மேகதி யற்றவன போலவே
ஈன நோயினுக கேயிரை யாகிடில்
பேருஞ் சீரதும பெற்றதா யுன்றனைப்
பேணிப் பணிய யாரு மிசைநதிடார்
கோருஞ் சீரருள் கற்பக மென்றுனை
கூறும் நூல்களும் பொய்யென வாகுமே. (10)

## பயன்

பங்க சாசன தேவி கலைமகள்
பதும லோசன தேவி திருமகள்
திங்கள் சூடிடு சம்புவ மீந்திரன
செங்கண மாலொரு பங்கய னுந்தொழும
எங்க ளாயுமை பாதம் பணிந்துமே
இந்த விணதீப பதிக மோதுவார
மங்க ளமபல பெற்றுமே பாரினில
வந்த வெவ்வினை தீர்ந்தநள காணபரே

## சலிகைப்பதிகம்

என்னையே ஏசிடினும் நின்னையே ஏசினர்காய
உன்னியே யனனவரை உடகறியப் பழிவாங்கும
அன்னையே நின்சலிகைக் கீடே துமிலையெனினும
என்னையே அர்ப்பணித்தேன் ஈடதுவாய்க் கொள்வாயே. (1)

எண்ணமதிற் கொண்டாலும எண்ணறு வருந்திடினும்
திண்ணமொத்த தாயபோலக் திணந்தினமு மெனனைமேவி
கண்ணிமைபோல் காத்தருளுங் காமாக்ஷி நின்சலிகை
வண்ணமதின் சீருரைக்க வாயேதுமிங்கிலையே. (2)

ஈனமொழி செப்பியுந் தீட்டபல செய்துமென
மானமது போக்வைக்கும மதியீனர் தமைத்தாக்கிப
போனதிசை யெல்லாம புண்பட்டுத் தவிக்கவைக்குந
தீனசம் ரக்ஷகியே நின்சலிகைக் கிணையிலையே. (3)

இவனென்ன ஞானியே என்றென்னை ஏளனஞ்செய
அவமமதை கொண்டிடும பண்டிதர் வியப்புறவே
சுவைமிகு பதமருளி தூயதா மறிவருளும்
சிவையுனது சலிகைக்கு நேரெதுவு மிங்கிலையே. (4

பயான மமதைமிகும் பித்தனெனைச் சார்ந்தருளி
வாயார வாழ்த்தெனநல் வாக்கருளி யெந்நாளும
சேயாகப் போற்றியிங்கு சீர்பலவுந் தந்தெனையுந
தாயாகப் பேணுமுன் சலிகையருட் சலிகையே. (5

## நான்காம் பாகம்

### 1

# அம்பாள் திருப்பள்ளியெழுச்சி

பூபாளம்: சாபு

அம்மையே ஆதியே அருட்பெருஞ் ஜோதியே
ஆனந்தவாரியே லோகோப காரியே
இம்மையே எந்தனைக் காத்தருள் ஈசையே
இணையற்ற பொற்புடைக் கற்பகத் தருவே
செம்மையே யாயதோர் செம்பதம் யீந்தருள
சித்ரூபி யெனவரும் அத்வைதப் பொருளே
எம்மையே ஆட்கொளும் எழிலொடு துயிலொழிந்
தெந்தாயே நீ பள்ளி எழுந்தரு ளாயே. (1)

உதயமும் ஆயிற்று ஊர்க்கோழி கூவிற்று
ஓங்கார வோசைநற் சங்கமொ லித்தது
பதியவே வேதியர் வேதம்ப யின்றனர்
பக்தர் குழாமுநற் பஜனை புரிந்தனர்
விதியை விலக்கவே வீடுபெற் றுய்யவே
வீதிக ளெங்குமுன் கீதம் பிறந்தது
இதயங் குளிரவே எத்தினே னுந்தனை
எந்தாயே நீ பள்ளி எழுந்தரு ளாயே. (2)

மயிலின மோங்கிக் குகாவெனக் கூவின
வலியனுங் கூவியே காலமு மாயிற்று
குயிலினங் கூவின காகங் கரைந்தன
கும்பிருள் நீங்கிக் குளிர்காலை யாயிற்று
ஒயிலுட னருண னுமொண்கதிர் வீசினன
உடுவின் மணிகளும் விண்ணில் மறைந்தன
கயிலை யரயனைக் குலவிக் கலந்திடும்
கயற்கண்ணி நீ பள்ளி எழுந்தரு ளாயே. (3)

சற்றேனுந் துயிலாதிச் சகமதைக் காத்திடும்
சங்கரி யேன்கனைப் பித்தனை சொல்லாய?

மற்றேதுமபற்றிலார் குடியினைக காததகோ?
மதுரையிற் சென்றிருந தரசியல் பூண்டதோ?
வற்றாநற் கருணையா லமரரைக காததகோ?
மாவடி தன்னிற றவமதி ழைததகோ?
மற்றேது வாகிலுந் துயிலதொ ழிந்துமே
மாதாவே நீ பள்ளி யெழுநதரு ளாயே (4)

தந்திமுகநதனைத தந்த களைப்பதோ?
சண்முக னுககொரு சகதி கொடுததகோ?
விந்தையா யீரேழு லோகங்க ளீன்றதோ?
இறைவா திகைததிட ஆடிக களைததகோ?
முந்தி யரககரைக காயநத களைப்பதோ?
மூவா தொழிலுககுஞ் சகதி யளித்ததோ?
எந்த முகாநதரமாகினுந துயிலொழிந
தெநதாயே நீ பள்ளி எழுநதரு ளாயே. (5)

தௌளு மறையினா வேதமப யின்றதுன்
சிலம்பொலி தானெனச சிநதிததிருநதாயோ?
கிளளை யினஙகளின் கீதம் பிறநததுன்
கலீஙகார மெட்டிக ளென்றிருந தாயோ?
உளளும புறமதும் ஓஙகார மாகவே
உனனியுறஙகிட ஊககங கொணடாயோ?
எளளும பிழையாத ஈச்வரியேநீ
சீராகவே பளளி எழுந்தரு ளாயே. (6)

தந்தி முகன்றனைத் தரிசிததது வநதேன்.
சணமுகனையுமநான் தரிசிதது வநதேன்
நநதி தேவன்றனை வநதிதது வந்தேன்
நாயக னீசனைச சிநதிதது வநதேன்
ஐநது புலன்களின் சேட்டை யடககியே
அம்மையே யுன்றனைக காணவே வநதேன்
சிந்தை குளிரவுன் காட்சி யளித்திடத
தேவியேநீ பள்ளி எழுந்தரு ளாயே. (7)

அம்மை காமாட்சியே கருணை கடாட்சியே
அரிய மதுரையை யாளும் மீனாட்சியே
நம்பு மடியாாகள கண்ணுறும காட்சியே
நாகையதில் வாழும நீலாய தாட்சியே
சம்பு மோகித்திடுங் காசி விசாலாட்சி
சாலத்திக ழுமா ரூர்க கம லாட்சியே
கும்பிட் டனதடி குறுகிப் பணிந்தேன்
கௌரியே நீ பளளி எழுந்தரு ளாயே. (8)

எங்கும் நிறைந்தருள ஈஸ்வரி யேயுன்னை
என்றும புகழ்ந்து நான் பாடித திரிந்தேன்
இங்கு யென் னுளளந் னைக கவாந திட்டுநீ
ஏமாற்று மாறுனக கேனெண்ண மன்றாய்?
தங்கியென் னில்லரு செழித்தருள பொங்கிடத
தாமதம் செயயாமல தரிசனம தநதிடப
பங்கயன் மாலும பரமனும் போற்றிடும
பாலையே நீபள்ளி எழுந்தரு ளாயே. 8

நாசியோ கததின் வகையினைத தெரியேன்
நாலு மறைகளு மோதித தெரியேன்
மாசிலா மதியுடன் என்னையா னறியேன்
மணிமந் திரஞ சிததி யேதும் அறியேன்
கூசிடுஞ் ஜோதியைக கண்டுநா னறியேன
கோணுமற் கலைகளைக கற்றுமநா னறியேன்
ஆசையா யுன்சரண அணடிப் புகழுநதேன்
அமமையேநீ பளளி எழுநதரு ளாயே. (10)

வாதம பலபேசி வீரஙகள கூறியே
வாழ்நாளைப போககுவன் நானலல அம்மா
வேதம தெரிந்தும உன்மேன்மை தெரியாத
வீணன வேதியன் நானலல வமமா
கீதம் பலபாடி சிநதை யடககாத
கீழ்சம யத்தவன் நானல்ல வம்மா
பாதம் பணிந்திடு பகதன் நானம்மா
பரிவுடன் நீ பள்ளி எழுந்தரு ளாயே. (11)

அருண னுதித்ததி ஞலொரு காரிருள்
அகலப் பொழுதுமே சீராய் விடிந்தது
கருணை மிகுத்தவுன் அருண சரணங்கள்
கண்டிடும் காட்சியைப் பெற்றபோ தல்லால
இருணிறை கின்றயிவ் வெளியேனும் சீரடைந
தெவ்வாறு விடிவது செயபு நீ யம்மா
தருண மிதனிலே துயிலதொ'ழிந்துமே
சாம்பவியே! பள்ளி எழுந்தரு ளாயே. (12)

இருளை யகற்றியே ஒளியும் நிறைந்தது
எவர்களு மவரவா பணிகள தொடஙகினர்
பொருளை விருமபினா வகையினை எணணினர்
போகம் விரும்பினர் யோசனை கொண்டனா
மருளை நீககியே மாபதம பெற்றிட
மாதாவே நானுன்னை நாடியே வநதேன்
அருளை யளித்திடு மமபிகையேநீ
ஆனந்த மாய்ப்பளளி எழுநதரு ளாயே : (13)

எனறனை வாட்டிடும பநதஙகள தீாத்திட
என்றன் பசைகளைக காயநது களைநதிட
என்றன் மிடியொழித தென்றன் பிணியொழித
தென்னை யுயாததிடச் செல்வமுந தநதிட
சந்தக கவிபாட சற்கதி யுஙகூட
சகல மெயஞானமும் தநதெனைக காததிட
இநதக குளிர்காலை தன்னிற் றுயிலொழிந
தென்தாயே நீ பள்ளி எழுநதரு ளாயே. (14)

சிவகாமியே என்றன் அபிராமியே யெநதை
சிற்சபை யீசரைப பிரியாத நேசையே
அவமான மடுவினிற கவிழ்ந்து விழுநதிடும
அடியேனைக கரை யேற்றும அகிலாண்ட நாயகி
எவையெவை கோரிடில் அவையவை யீந்திடும்
என்தாய் க்ருபாகரி யீடற்ற மீனாட்சி
கவிகொண்டு காலையுன் சரணம புகழ்ந்தேன்
காமாட்சி நீ பள்ளி எழுந்தரு ளாயே. (15)

2

உ

## அம்பாள் கவசம்

கந்தவேள் தந்த எந்தாய கஞ்சி காமாட்சி யேநீ
தந்தையுந் தாயு மாகித் தமியனைக் காக்க வென்றே
விந்தையா யிங்கு வந்தென் வெவ்வினை தீர்த்து
யிங்கென்
சிந்தையுங் குளிருமாறு சீரினை யருளுவாயே. (1)

வருகவென் குடியைக் காக்க கஞ்சிகா மாட்சி வருக
வருகவென் மிடியை நீக்க மதுரை மீனாட்சி வருக
வருகவென் வினைகள் தீர்க்க மாவிசா லாட்சி வருக
வருகவென் பகைகள் தீர்க்க பயிரவி வருக வருக. (2)

வருகவென் குறைகள் நீக்க மயிலைகற் பகமே வருக
வருகவென் பயங்கள் தீர்க்க மாகாளி வருக வருக
வருகவென் நோய்கள் தீர்க்க மாமாயி வருக வருக
வருகவே யெமனு மோட துாக்கையே வருக வருக. (3)

வருகமும் மலமும் நீக்க பாசவங் குசமொடு வருக
வருகவென் மனமும் அடக்க கரும்புவில் லுடனே வருக
வருகவைம் புலன டக்க ஐம்மலர்க் கணை யொடு வருக
வருகமெய்க் குருவென வருக கஞ்சிகாமாட்சி வருக. (4)

பைசாச முனிகள் சேட்டை மதுரை மீனாட்சி நீக்க
வைசூரி வயிற்றுப் போக்கை மாமாயி நீக்கிக் காக்க
மைசேரு வேலை மயக்கம் மயிலவ னனனை நீக்க
வைசூன்ய மேவ லெல்லாம் மாகாளி யொழித்துக்
காக்க. (5)

சீறிய பாம்பின் விஷமும் தேளவகை யாவின் விஷமும்
கூறிய கொடுக்கும் பல்லுங் கொண்டவெவ் வுயிர்கள்
விஷமும்
வேறெவ் விஷமுள வுயிர்கள் கலலொடு புற்பூண
டிவையால
ஏறிய விஷங்கள் யாவும் இறங்கிட எந்தாய காக்க. (6)

பல்வித சுரங்கள் ஜன்னி சிலேகரும வாதம் பித்தம்
கொல்புரி கொடிய நோய்கள் குட்டமா நோய்கள் குன்மம்
சில்விஷக கடிகள் சொறிகள் சிறங்கொடு பலவகை
நோய்கள்
கலலியே களைந்து காப்பாய் கருசிகா மாட்சி நீயே. (7)

சிங்கமும் புலியுங கரடி மதமுள யானை காட்டில்
தங்கிய விலஙகொடு புட்கள தலநதனி லூருங் கொடிய
எஙருள வுயிர்கள யாவும எந்தனைக கண்டா லோட
இஙகுநீ வந்து யென்னைக காததிட வேணுந தாயே (8)

வடிவினை யமமை காகக வதனமு மலராள் காகக
முடியினை எந்தாய் காகக மூளையைத தேவி காகக
நெடுநுதல் விமலை காகக புருவமும் பரிந்து காக்க
கொடியிடை மீனாள் என்றன் விழிகளைக காககககாகக. (9)

நாசியும செவியு மென்றன் காரணி காக்கப் புகழைப்
பேசிய வாயுங காகக நாவைகல் வாணி காகக
ஆசையொ டென்கழுத ததனை அம்மைநீ காக்க காக்க
மாசற வென்றன் மாரபை மாசிலா வென்றுய் காகக (10)

என்னிரு கரஙகள என்தாய் எழிலொடு காக்கப் பின்னும்
என்னிரு கால்கள் காகக குதமுங குறியுங காகக
முன்னுள பாகந தன்னை முடிவிலாத் தாயே காக்கப்
பின்னுள பாகந தன்னைப் பிரியமாய்க காகக காக்க (11)

எழுபதி ரணடா யிரமாம நாடிகள என்றுய காகக
பழுதெது மில்லா தென்றன் சதையுட னெலும்புங் காகக
பிழைசிறி திலலா திரதத மோடிடப் பரிநது காக்க
எழுவித யோகினி யாகும ஈசையே காகக காகக. (12)

எழிலுட னிதயந் தனனை என்னருந தாயே காக்க
உழலிடு மனதுந தாயை உன்னிட வைததுக் காகக
சுழலிடு புததி தன்னைச் சூககும மாககிக காக்க
கிழமுறு மேனி தன்னை இளமையு மாக்கிக் காகக. (13)

சினத்தவர் கூட்ட முள்ளுஞ் செருக்குடைச்
சபையினுள்ளுந்
தினைத்தய வில்லாக கொடியா தீமையோ டெதிர்த்த
போதுந்
தனித்திடு மெககா லத்துங் கஞ்சிகா மாக்ஷி நீயே
எனைத்துணை கொண்டு காக்க வேணுமென்
னருமைத் தாயே (14)

தாயபோற் காக்க வென்னைத் தந்தைபோல் காக்க
வுன்றன்
சேயபோற் காக்க வென்னை இமைபோற் காக்க விங்கு
காயபோற் பிறந்த என்னைக் கனிபோற் றுலங்கக
காக்க
வாயார வாழ்த்து வோருக் கருளுமீ ஞக்ஷி நீயே. (15)

3

உ

ஸ்ரீ காமாக்ஷி துணை.

## போற்றிப் பஞ்சதசி

அம்மையே போற்றி யெம்மையாட்கொளும்
அருளே போற்றி
இம்மையே யெம்மைக் காக்கும் ஈசையே போற்றி
போற்றி
பொய்மையைப் போக்கி மெய்யைப் புகட்டுமென்
குருவே போற்றி
செம்மையே யாய வுன்றன் செம்பதம் தருவாய
போற்றி. (1)

கருணையே உருவாய் வந்த கற்பகாம் பிகையே போற்றி
அருணமா நகருள வாழும் அரன்றனை மணந்தாய்
போற்றி
தருணமே அடியார் கட்டந் தவிர்த்தருள் தாயே போற்றி
சரணமே கதியென் றோரைத் தாங்குவாய் போற்றி
போற்றி (2)

வேதமும் பகர வொண்ணு விந்தையுள் ளொந்தாய்
போற்றி
பேதமும பிரிவுங கொணட பேதையாக கரியாய் போற்றி
கீதமே பாடு மனபாக கெளியையு மாறுய போற்றி
நாதமுங கடநது நிலை ற நானெனுமம பொருளே
போறறி. (3)

தநதையுந தாயு மாகித தய வுகொண டாள்வாய போற்றி
விநதைய ாய லோக மேழு மீனறமீ னுக்ஷி போறறி
சநதைபோற் கூட்ட முளளுந தணிததிட வருவாள்
போற்றி
கநதவேள் தநதாய் போற்றி காமாக்ஷி போற்றி
போறறி. (4)

மஙகையர்க கரசியே போற்றி மாசிலா மணியே போற்றி
கஙகையற் கிடமே போற்றி காசிவா ஸினியே போறறி
சஙகுடைத திருமா லுககுத தஙகையு மானுய போற்றி
எஙகுறை தீாகக வல்ல எழிலுடை எநதாய போற்றி. (5)

போறறியிப் புவன மெலலாம பரிநதருள தாயே போற்றி
போற்றியிவ வேழை யேனைப் புனிதனுக கிடுவாய
போற்றி
போறறிநற போத மியும பூரண போற்றி போறறி
போற்றியென் குறைக ளர்கரும பொறபுடைத
தருவே போறறி. (6)

செஞ்சுடா போன்ற மேனிச சீருடை யாளே போற்றி
தஞசமென் றோருக கெளிய தயவுடைத தாயே போற்றி
பஞசமா பாதம தீாககும் பாாபுகழ பரையே போற்றி
கஞ்சிமா நகருள வாழுங காமாக்ஷி போறறி போற்றி. (7)

கதியது வர்கி நினற கற்பகத தருவே போறறி
விதியது வெலல வலல விமலையே போற்றி போற்றி
நிதியது யியு மெட்டு இலககுமி யானுள போற்றி
மதியது யியு மெணறன கலைமக ளானுள போறறி. (8)

தாயே போறறி எனறன் தஞ்சமே போற்றி யெல்லாம்
நீயே போற்றி நீதி நெறியே போற்றி நிமல

மாயே போற்று என்னுள் மணியே போற்றி யுன்றன்
சேயே யாய வென்னைச் சீருட னுள்வாய போற்றி. (9)

கமலையே போற்றி கங்கைக் கடவுளாக கிடமே போற்றி
விமலையே போற்றி யென்றன் வெம்பகை தீர்ப்பாய்
போற்றி
நிமலையே போற்றி நெஞ்சிற் கவலைகள் களைவாய்
போற்றி
தமியனே னுயிர தாகுஞ் சங்கரி போற்றி போற்றி. (10)

மாமதி வதனம போற்றி மதிநுத லொளியே போற்றி
காமனை கண்டு நாணுங் கயற்கணி னியலே போற்றி
தீமைகள தீர்க்கவலல செவ்விதழ முறுவல் போற்றி
கோமள வடிவம போற்றி கொடியிடை போற்றி
போற்றி. (11)

மணிநிறை மாரபி லாடும மங்கள மணநூல் போற்றி
அணிவளை சரிநது நிறையும அருமபுய நான்கும போற்றி
துணையது வாகி யெனறன துயரொழி சரணம போற்றி
பணியணி ஈசர் பங்கிற் பரிவுடன் இருபபா ள
போற்றி (12)

வண்டின மொயககு மாலை மணிநிறை மாரபே போற்றி
அண்டின வடியாக கபய மளிததிடு மழகே போற்றி
வண்சரண வீழநதோர தமககு வரநதரு கரமே போற்றி
எண்டிசை போறறு மென்றன ஈசையே போற்றி
போறறி. (13)

மாசிலா மணிகள கொணட மதியணி மகுடம போற்றி
கூசிடு ஜோதி பாயுங் குழைகளி னெழிலே போற்றி
நாசியில் வீசு மணியின் நவிலொளு வொளியே போற்றி
பாசவங் குசமும போறறி பாலையே போற்றி போற்றி. (14)

நிதமுமுன் கீத மோதும் நின்மல வடியார் போற்றி
பதுமமா மிதயத் துன்னைப் பதிததிடு தவத்தோர் போற்றி
அதுவுநீ யென்னுந் தததுவ மறிந்துள மேலோர் போற்றி
மதுரைமீ னாக்ஷீ போற்றி மாதாவே போற்றி போற்றி. (15)

4

## உந்தியார் பஞ்சதசி

கஞ்சிகா மாக்ஷியைக் கனவு நனவிலும்
கருத்தினி லேற்றலே யுந்தீபற
கடையேறு மார்க்கமென் றுந்தீபற. (1)

தாயே சரணமென் றுன்னி யுருகியே
தன்னை மறந்தோரே யுந்தீபற
தரணியில் மேலோரென் றுந்தீபற. (2)

என்றன தொன்றிலை யுன்றன தெல்லாமென்
றெண்ணித் மொழுதலே யுந்தீபற
வீடுகொ டுத்திடு முந்தீபற (3)

எண்ணமொ ழித்தன்னை வண்ணப்ப தத்தினை
எண்ணியுள் ளேற்றலே யுந்தீபற
இணையற்ற பக்தியென் றுந்தீபற. (4)

கர்மமொ டரிதான யோகமும் ஞானமும்
கடினவ ழிகளென் றுந்தீபற
சற்குரு வரிதாலே யுந்தீபற. (5)

கலியினிற் கர்மமும் யோகமும் ஞானமும்
கசடுற் றழிந்திடு முந்தீபற
கலியின் மகிமையா லுந்தீபற. (6)

பரவச பக்தியே வீடுகொ டுத்திடும்
பார்சுக முந்தரு முந்தீபற
அதற்குநே ரில்லையென் றுந்தீபற. (7)

மலமுற்ற கர்மியர் யோகியர் ஞானியுள்
மலமற்ற பக்தரே யுந்தீபற
மாணபுடை யானென வுந்தீபற. (8)

திடமொடு பூஜை ஜபமுந் தியானமும்
செய்திடு பக்தரே யுந்தீபற
தெய்வத்தின் மேலோரென் றுந்தீபற. (9)

சித்த சுத்தியுடன் பத்திசெய் தோருக்குச்
செலவமுஞ் சீருமுண் டுநதீபற
தீவினை தருமென் துநதீபற (10)

சிவகாமி யைத்தினஞ் சிக்தித் திருப்போர்க்குச
சித்திக ளெட்டுமுண டுநதீபற
சிவகதி கிட்டுமென் றுநதீபற. (11)

இல்லறங் கணணுற றக்கதுற வுள்ளோாகள்
ஈடற்ற துறவிய ருநதீபற
ஈசனைக காண்பரென றுநதீபற (12)

உடல்பொரு ளாவியு முன்றன தெனறுமே
உனனித துதிப பாரே யுநதீபற
உணமைத துறவியென் நுநதீபற. (13)

உண்மைதனைச் சாதித துடபகதி செயதோரே
உணமை யடியாரென் றுந்தீபற
உயாகதி பெறுவரென் றுநதீபற. (14)

சாநதம னததுடன் மும்மல மற்றுமே
தாயைத தொழுதோர்க ளுநதீபற
சாதிகக லாமேது முநதீபற. (15)

## வாழ்த்துப் பஞ்சமி

கருணையே வுருவாய வாநத கற்பகாம பிகையே வாழ்க
அருணனோ கோடி போன்ற அருட்பெருஞ சுடரே வாழ்க
சரணமே கதியென றோரைத தாஙகுமென் தாயே வாழ்க
தரணியில் மேன்மை பெற்ற கஞசிகா மாட்சி வாழ்க. (1)

தாயே வாழ்க வென்றன் தநதையு மாவாள் வாழ்க
சேயே போன்று மென்னைச் சீாபெற வைப்பாள் வாழ்க
பேயே போன்று வென்னைம புலன்களின் சேட்டை நீககுந்
தீயே போன்ற வென்றாய் திரிபுரை வாழ்க வாழக. (2)

மாமதி மதனம் வாழ்க வாணுதல் வாழ்க என்றுய
கோமள வடிவம வாழ்க கொடியிடை வாழ்க வென்றன்
தீமைகள் தீர்கக வல்ல செவ்விதழ்·முறுவல வாழ்க
காமனே கணடு நாணுங கயற்கணி னியலே வாழ்க. (3)

வாழகசீா வடிவாந தாஙகு மதுரைமீ ஞக்ஷீ வாழ்க
ஆழகவென் தீய வெலலா மகற்றிடுந தாயே வாழக
ஏழுமா பிறவிக கடலே ஏறவோா துணையே வாழக
பாழுமே கடநத பின்னாப் பரஞ்சுட ராளுய் வாழ்க. (4)

விதிதனே விலகக வலல விமலே யே வாழக வென்றன்
கதிதனே யாண்டு கொள்ளுங கருசிகா மாக்ஷி வாழ்க
நிதிதனே யீநது மிடியை நீககிடு மாயே வாழ்க
மதிதனே மயககு மாயை களைநதருள தாயே வாழக. (5)

தஞசமென ஞேரைக காககுன் சரணகளின் சீலம வாழ்க
பஞ்சமா பாதம தீாககும பாசவங குசமும வாழக
அஞ்சின பேருக கபய மளிததிடு கரமும வாழக
நெஞ்சிலே நின்ற கவலே நீககிடு வரமும் வாழ்க. (6)

கற்பத மீயு மெந்தாய நாரணி வாழக வாழ்க
கற்பக மணியுந தேனுங கலந்தொரு வடிவாய வநதென்
சிற்பர வெளியில வாழுஞ சீருடைத தாயே வாழக
பாற்புடைப புனிதை வாழ்க பூரணி வாழக வாழ்க. (7)

மஙகையர்க கரசியே வாழ்க மலேதரு மகளே வாழ்க
பஙகயன் மாலும போற்றும பாஙகுடைத தேவி வாழ்க
கஙகைகொ ளீசா பஙகிற் களிததிடு நஙகாய வாழ்க
எஙகுறை தீாகக வலல எழிலுடைத தாயே வாழக. (8)

கரிமுகன் தந்த தாயின் காாமுகில் மேனி வாழக
சரிவனே நிறைநது வரஙகள் தருமபெரு புயஙகள் வாழ்க
பரிவுட னீரே ழுலகம் பயின்றவை யூட்டி வைககும்
இருதன வெழிலே வாழ்க ஈசையே வாழ்க வாழ்க. (8)

மாசிலா மணியே வாழ்க மதுரைமீ னுக்ஷி வாழ்க
காசிமா நகருள் வாழு மன்னபூ ரணியே வாழ்க
பாசிபோற் படர்ந்த மாயை யிருள்து நீக்க வல்ல
கூசிடு குழைகள கொண்ட அகிலாண்ட டேஸ்வரி வாழ்க (10)

மதங்கொளு மகிஷா சுரனை வதைக்கும் பிகையே வாழ்க
கதம்பவனத்திடை வாழுங் கலியாணி வாழ்க வென்றன்
சிதம்பரக் கோயில் கொண்ட சிவகாமி வாழ்கத் தாயை
நிதநதொழு மெளியேன் மொழிந்த திருப்புகழ் வாழ்க
வாழ்க. (11)

ஓங்கார பீடந் தன்னுள் ஒளிர்கின்ற வுமையே வாழ்க
ரீங்கார பீஜந் தன்னுள் பிறந்திடு சக்தி வாழ்க
தூங்காத தூக்கந் தன்னிற் றுலங்கிடு சுடரே வாழ்க
ஆங்கார மொடுங்கு மமல மனத்தமா சிவையே வாழ்க. (12)

பஞ்சமா வக்ஷரந் தன்னுட் பதிந்திடு சக்தி வாழ்க
அஞ்சுட னேரெழுத் ததனுள் அமர்ந்திடு மகிமை வாழ்க
மிஞ்சிய வோரெழுத் ததனின மேன்மையும வாழ்க
வென்றன்
கஞ்சிகா மாக்ஷி யாகுங் கருணையாம் வள்ளல் வாழ்க. (13)

உருவமே பூசை புரியும உத்தம பக்தா வாழ்க
அருவமே யுள்ளே யுன்னும் அரியமா யோகி வாழ்க
இருவித மில்லை யென்னும் ஈடிலா ஞானி வாழ்க
கருமமே கதிதரு மென்னுங் கருத்தினா தாழும வாழ்க. (14)

உன்னிரு சரணம் போற்றும ஒப்பிலா வடியார் வாழ்க
சென்னியிற் கங்கை வைத்த சிவனடி யாரும வாழ்க
பன்னிரு கைய னுன்றன் குகனடி யாரும வாழ்க
மன்னென வுலகைக் காக்கு மாலடி யாரும வாழ்க. (15)

---

# 6

## ஸ்ரீ காமாக்ஷி அருட்பாவை

### விநாயகர் துதி

அத்தி முகத்தோனை அன்றிருந்து பேறுது
சத்தி தனதென்று தானினைத்த சங்கரனை
சத்தி யியல்பறியத தேரச்சு தூளசெய்த
சித்தி விநாயகனைச் சித்தத்தில் வைத்தீரேல்
சத்தி யருளபெறலாம் சாதிக்க லாமேதும்
முத்தி நெறிபெறலாம் மும்மலமும் நீங்கியொரு
சுத்த வுளம்பெறலாம் தூயமையாம் வாழ்வுறலாம்
நித்த நிலைபெறலாம் நின்றேலோ ரெம்பாவாய்

### நூல்

### ஆனந்த பைரவி

தாயைத தனிமுதற் சாட்சியாம் சங்கரியை
மாயப் பிணியகற்றும் மந்த்ர மாமணியை
தூயப் பெருவாழ்வு தந்தருளும் சுந்தரியைச்
சேயைத் துணைகொளளும் சீர்மிகுந்த கற்பகத்தைப்
பேயைப் பழிக்குந் துாலகற்றிப் பேதையரே
நேயத் துடனதேடி நிமலச் சிந்தையொடு
வாயைத திறந்துநீர் வாழ்த்திறல் வாந்திடுவீர்
காயத் துடன்வீடு கண்டேலோ ரெம்பாவாய்.

### அட்டாணு

சும்மா விருவென்று சொன்னர் ஒருசாரார்
அம்மா வெனக்கூவி ஆறுதல நாம் காணுது
எம்மா விருக்கவிங் காகுமோ வாய்திறந்து
அம்மா வெனவழைத்தோம் ஆயே வெனவழைத்தோம்
சிம்மா சனததுறையுந் தேவி யெனவழைத்தோம்
பெம்மான் சிவனிடத்துப பெண்மணியே என்றழைத்தோம்
நம்மா வியன்றவரை நாவாரப் பாட்டிசைத்தோம்
சும்மா விருக்குமோ சொல்லேலோ ரெம்பாவாய் 2

### சங்கராபரணம்

செம்மான் மகளைத் திருடித் திருமணங்கொள்
பெம்மான் முருகனைப் பேணிப் பணிந்திடுநாள்
அம்மா வெளமைவந்து ஆட்கொண்டா ளாட்கொண்டாள்
இம்மா வருளதனை ஏதத்தா திருந்திடவோ ?
சும்மா வினிநாவுஞ் சொல்லா திருந்திடுமோ ?
தம்மா லுலகெல்லாந் தாங்கி யுணவூட்டுஞ்
செம்மால் புகழ்ந்தேத்துஞ் சீர்கொண்ட கற்பகத்தை
உம்மா லியன்றவரை ஓதேலோ ரெம்பாவாய். 3

### தோடி

உகமெல்லாம் ஓடியபின் ஒன்றாக நின்றிச்
சகமெல்லாம் ஈன்றருளும் சீர்மிகுத்த தாயை,
நகமெல்லாம் நாரணனின் பத்துதிப்பின் வித்தாய்
முகமெல்லாம் தண்ணருள்சேர் புன்முறுவல் காண
இகமெல்லாம் என்றுணையாய் என்குடியைக் காத்துச்
சுகமெல்லா மீயுஞ் சுமங்கலியைக் கண்டு
பகலெல்லாம் பாடிப் பரவசத்தால் ஆடி
அகமெல்லாம் போய்க்குளிர்வ தென்றேலோ ரெம்பாவாய். 4

### பிலகரி

காலைக் கடன்கழித்துக் காமாக்ஷி யம்மையினை
வேலைப் பிளந்துதிக்கும் விண்மணியிற் கண்டறிவீர்
மாலைப் பொழுதினிலே மாமதுரை மீனவளை
நீலத் திருவானின் வெண்ணிலவிற் கண்டறிவீர்
பாலைப் பருவமுள மங்கையெனப் பார்த்திடுவீர்
சீலச் சுமங்கலையின் செம்முகத்திற் கண்டறிவீர்
வேலைக் கரம்பிடித்தான் வேலிலையிற் கண்குளிர்வீர்
கோலக் குணவதியைக் கண்டேலோ ரெம்பாவாய். 5

### ஸஹானா

பஞ்ச மலர்க்கணையுங் தித்திக்கும் விற்கழையும்
அஞ்சு மடியரிடர் நீக்கவல வங்குசமும்
தஞ்ச மெனுமவரைக் காத்தருளும் பாசமுடன்
கஞ்சி நகர்தனிலே காமபீ டத்தனிலே

மிஞ்சு மழகுடனே வீற்றிருக்கும் சாம்பவியின்
கஞ்ச மலர்ப்பதத்தைக் கண்டுளமும் பூரித்துக்
கெஞ்சிப் பலர் செவிகள் கேட்கப் புகழ்பாடிக்
கொஞ்சி யருள்பெறுவ தென்றேலோ ரெம்பாவாய். 6

## காம்போதி

ஆதி முதலாகி அண்டமெலாந் தானாகி
நாத னொருபாதி நானென்ற நாயகியின்
நீதி நெறியுடையார் நின்மலச் சிந்தையில்வாழ்
பாதி மதிசூடும் பார்புகழுங் கற்பகத்தின
வேத முடிப் பொருளின் மேருவாங் கோபுரத்தை
வீதி வலம்வந்து விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும்
காது குளிர்ந்திடவே காமாக்ஷி நற்புகழை
ஓதி யுயர்ந்திடுவ தென்றேலோ ரெம்பாவாய 7

## மத்யமாவதி

வேணும் பொழுதடியர் வேண்டுமவை யீந்தருளித்
தோணித் துறையிருந்து தோன்றாத் துணையாகி
வீணிப் பிறவியலை வேலைக் கடக்கவருள்
வாணிக்கும் நாரணிக்கும் மேலான பூரணியைக்
காணக் கவலைபோங் கஞ்சக் கழலிரண்டும்
பேணப் பலநிதியாம் பேறுதருங் குங்குமத்தைப்
பூணப் புகழ் பலவாம் புண்ணியமாங் கண்ணியமாம்
காணப் புறப்படுமின் இன்றேலோ ரெம்பாவாய். 8

## ஹிமமேந்திர மத்யமம

பாடுவீர் பாடிப் பரவசத்தால் மெய்சிலிர்த்து
ஆடுவீர் ஆடி அடங்கியுளம் பூரித்துத்
தேடுவீர் தேடித் திருவடியை நுஞ்சிரமேற்
சூடுவீர் சூடிச் சுமங்கலையாந் வேவியருள்
நாடுவீர் நாடி நலம்பேறவே அன்பருடன்
கூடுவீர் கூடிநீர் பேரின்பங் கணடீரேல்
காடுமோர் வீடாகும் காசினியில் நீர்வசிக்கும்
வீடுமே பெருவீடாங் காணேலோ ரெம்பாவாய். 9

### கேதாரகௌளம்

போதனை போதாத புல்லறி வாளரன்றோ
சோதனை செய்திடுந் தெய்வமென்பார் இவ்வுலகில்
வாதனை தீர்க்கவந்த மாகருணை மெய்ப்பொருளோ
வேதனை செய்யுமிங்கு விட்டிடுவீ ரிம்மடமை
பார்தனிற் பக்தர்தமைக் காக்கவந்த கற்பகத்தை
நாதனைப் பாகமதில் வைத்திட்ட மாதுமையை
மாதினை மார்பணிந்த செம்மாலின் பின்னோனை
மேதினியில் மெய்மறந்து பாடேலோ ரெம்பாவாய். 10

### பைரவி

வானாட்சி காணன்னை மண்ணுலகில் லீலையாய்
கானாட்சி செய்யு மரியா சனத்தமர்ந்து
தானாட்சி செய்திடவே தென்மதுரை மாநகரில்
மீனாட்சி யாய்வந்த மாதா மனோன்மணியை
தானாட்சி செய்தும்மைப் பாழ்நகரில் வீழ்த்திவிடும்
ஊனாட்சி செய்துமது வுள்ளத்தில் வைத்திட்டு
யானாட்சி செய்துமல ஆணவம் நீத்தீரேல்
வானாட்சி காணலா மின்றேலோ ரெம்பாவாய். 11

### கமாஸ்

பொருணிறைவோ தேடப் புறப்பட்டு வந்தீர் ?
அருணிறைவைத் தேடவோ அங்கிருந்து வந்தீர் ?
இருணிறையும் ஏழையரே உய்யும்வகை கேளீர்
கருணைவடி வாகியொரு காஞ்சியெனு மூரில்
அருணர்சத கோடியென ஜோதியொளி வீசும்
சரணுடைய தாயொருத்தி தஞ்சமென் றோர்க்கு
அருணிறைவும் ஆங்கே பொருணிறைவுஞ் சேர்த்து
தருமணியாய்க் காத்துள்ளாள் காணேலோ ரெம்பாவாய் 12

### பியாகடை

தாய்க்குச் சுமையாய்த் தலைகீழாய் வந்துதித்துப்
பாய்க்குட் கிடந்தழுது பாழுலகி லேவளர்ந்து
ஏய்க்குந் திறனறிந்து எப்பொருளுந் தான்கவர்ந்து
பேய்க்கு நிகராகும் பெண்களிடை யேசொரிந்து

நாய்க்குங் கடையாகி நாடுநா டாயலைந்து
நோய்க்கே யிரையாகும் பொய்வாழ்வு தாயேவுன்
சேய்க்கு வரலாமோ வாராது காத்தருள்வாய்
தாய்க்கும் பெருந்தாயாய் வந்தேலோ ரெம்பாவாய். 3

முகாரி

பெருங்கா ரியப்போற் பிறந்தீ ருலகில்
அருங்கா ரியமதீர் புரிந்ததென் சொல்வீர்
குரங்காய்ப் பிறந்தீர் கிடந்தீர் தவழ்ந்தீர்
பெருங்கான் நடந்தீர் வளர்ந்துபிண மானீர்
ஒருங்கே வருவீர்நீர் உயயுர்வகை கேளீர்
சிரங்கை குவித்தம்மை சீரபாடித தாளை
நெருங்கி மலர் தூவி நித்தநிலை நாடி
இருங்கோள் அருள்வருமே தானேலோ ரெம்பாவாய். 14

மோகனம்

ஊருமே மெய்யல்ல உற்றுருப் மெய்யல்ல
பேருமே மெய்யல்ல பெண்டிரும் மெய்யல்ல
நீருமே மெய்யல்ல நும்மக்கள மெய்யல்ல
பாருமே மெய்யல்ல பலநிதியும் மெய்யல்ல
சேரும் பொருளீயுங் கற்பகமே தஞ்சமெனச்
சாரும அடியார்க்குத் தாயாகி காமாக்ஷி
யாரும் அறியாது ஆணடருளுந் தண்மையால்
நேருஞ் சுகமொன்றே மெய்யேலோ ரெம்பாவாய் (15)

நூற்பயன்

அஞ்சு புலனடக்கி யானென்ப தற்றிருந்து
கஞ்சி நகர்வாழுங் காமாக்ஷி யம்மையிரு
கஞ்ச மலர்ப்பதங்கள் கண்டு மனமகிழ்ந்து
தஞ்ச மெனவருட் பாவை நிதம்பாடிக்
கெஞ்சு மடியார்க்குத் தேவி யருள்சேரும்
பஞ்ச வினைதீரும் பார்புகழும் வாழ்வுவரும்
மிஞ்சு மழகுவரும் மேலான கல்விவரும்
பஞ்ச நிதிவருமே காணேலோ ரெம்பாவாய்,

## அம்பாள் அலங்காரம்

அம்மா வெனத்தன் னருஞ்சேய் கதறி யலறிடவுஞ்
சும்மா விருந்திடுந் தாயுமிங் குணடோ துதித்துணையே
எம்மா லியன றளை வேத்திஞே மின்றும் மிரங்கிலேயோ
பெம்மான் சிவனிடம் பெணபோ லமர்ந்த பெருந் தகையே. 1

ஆதிப் பொருளும் அடியார் உளத்தே அருள் சொரியுஞ்
சோதிப் பொருளுந் துரிய நிலைகண்ட தூயவர்காண்
வேதப் பொருளும் வினைதீர்க்குந் தாயுமாம் மீனவளின்
பாதப் பதுமம் பணிவோர்க் கிணையுணடோ பார்தனிலே? 2

பெருமான் சிவன்பா லமர்ந்த பெருமாட்டிப் பேரழகைத்
திருமால் மகனைகண் டுருவமே நீத்துச் செருக்கழிந்தான்,
திருமா மகளுந் தணிந்து வலதகே திகைததுசினறுள
ஒருமா துவாணியும வந்திடம் நின்றுள் உவகை கொணடே. 3

நோயென் செயும்வெவ் வினையென் செயுபெ மைநோக்கிவந்த
பேயென் செயுங்கொடுங் கோளென் செயுஞ்சுடும் பித்தர்
[களின்
வாயென் செயும்பகை தானென் செயும்எமை வாழவைக்குந்
தாயின் சலுகை நமக்கே யிருக்கத் தரணியிலே. 4

கல்லா லெறிந்தொரு சாக்கிய னீசன் கருணைபெற்றுன்
வில்லா லடித்தொரு பார்த்தன்பரமனை வெற்றிகொணடான்
சொல்லால் வழுத்தியே யனைபெல லாமே சுகமடைந்தார்
எல்லா மறிந்துமநீர் என்செய்வீர் ஏமன் இழுததபோதே? 5

பேய்க்கும் பிணிகட்கு மஞ்சார் நமனுக்கும் பீதிகொள்ளார்
தேய்க்கும் வறுமைக்குங் கோளுக்கு மஞ்சிடார் தீக்குமஞ்
[சார்
வாய்க்கும் பகைக்கஞ்சார் அஞ்சார் புலிகட்கு மன்னைவாக்கும்
தாய்க்குப் பெருந்தா யபிராமி செஞ்சரண் சார்ந்தவரே. 6

வாள்பட் டொழிந்தது பண்டா சுரன்குலம் மாதுமையாள்
தோள்பட் டொழிந்தது யிங்கென் குடிச்சுமை தூயதேவிக்
காள்பட் டொழிந்த தடிமையாம் வாழ்வெலாம் அம்பிகையின்
தாள்பட் டொழிந்ததே யிங்கயனிட்ட தலையெழுத்தே. 7

பொன்னைப் பெறவேண்டிற் போகம் பெறவேண்டிற்
[பூரணமாய்
முன்னை வினைதீர வேண்டிடி லிங்ஙனே முக்திவேண்டில்
தன்னை யறியவும் வேண்டிற் சகம்புகழ் சக்திவேண்டில்
அன்னை பதந்தொழு தின்றே யடைவீ ரனைத்தையுமே. 8

செந்தா மரையாள் இடத்தே யமர்ந்திடச் சீருடனே
வெண்தா மரைமீது வாணி வலமதில் வீற்றிருக்க
எந்தா யிராணியாய் நின்றதோர் பேரழ கேழைகாண
அந்தோ பதினு யிரங்கண படைத்திலன் அப்பிரமனே. 9

மாலோன் புகழு மணியையென் மாதா மகேச்வரியை
வேலோ னையீன றரு ளீசைகா மாட்சியை விண்ணவர்க்கு
மேலா னதேவியை, மீனாட்சி யம்மையை மெய்யுருகிக்
கோலா கலப்பூசை செய்தோரே வாழ்வார் குவலயத்தே, 10

விதியைனை யென்மதி யால்வென்று யிங்குயான் வேண்டும்மாறு
நிதிக னையும் பெற் றுளிரவும் நின்பாத நீழலுறுங்
கதந் னையுந்தத் தெனைக்காத் தருளவையோ கற்பகமே
பந்த னைமேவிச் சகமெலா மீன்ற பராபரமே. 11

கவியாற் புகழ்மாலை சூட்டினேன் தாயுன் கதைதனையே
செவியா லுணர்ந்தே னினியான சமுசாரத் தீயினிலே
தவியா தெனக்குன் சரணர விந்தமே தந்தருள்வாய்
புவியா வுமேபுகழ் போதந் தரவல்ல பூரணியே. 12

என்னைப் பொருளாய் மதித்தே யொருநா ளிரவதனிற்
சொன்னத் திருமேனி கொண்டொரு ஜோதிச் சுமங்கலையாய்
அன்னை தனிப்பெருங் காட்சி யளித்தெனை யாண்டிருக்கப்
பின்னை யுலகி லடியேன் பெறவேண்டும் பேறிலையே' 13

ஓடும் மனத்தை யுமையாள் பதங்களி லோச்சிடுவீர்
தேடுந் தனத்தை யெளியர் தமக்கே செலுத்திடுவீர்
பாடுந் திறத்தைப் பகவதிக் கேநீர் படைத்திடுவீர்
நாடுந் திருவருள் தானே வுமக்கு நலமிதுவே. 14

காணக் கலிநீங்குங் காமாட்சி யம்மைக் கழலிணைகள்
பேணப் பெருநிதி யாம்குங் குமத்தைப் பிரியமுடன
பூணப் பிணிநீங்கும் நாற்பத்து மூன்றும் புகழுடைய
கோணத் து நின்றுளைப் போற்றுவார்க் கென்றுங் குறை
[விலையே

நூற்பயன்

அம்பா ளலங்காரம் ஐம்மூன்று முள்ளத்தே
அன்போ டுரைப்பவர்க் கல்லல்போம்—தெம்பாகிக்
கோள்வென்று நோய்வென்று கூற்றையும் வென்றவர்கள்
நாளென்றுங் காண்பார் நலம்.

## 8

## அம்பாள் அநுபூதி

காப்பு

தொந்திக் கணநா யகனைத் தொழுவோர்க்
கெந்தப் பணியும் எளிதா குமதாற்
சிந்தித் திடுவோ மவனைத் தினமும்
வந்தித் தடைவோம் பெருவாழ் வதுவே

நூல்

அம்மா வெனவந் தொருசேய் கதறச்
சும்மா வுளதா யிலையே வுலகில்
எம்மா லியலா துபிறந் திடவே
அம்மா வெமையாண் டருளிக் கணமே. 1

ஆதா ரமுமற் றிடுமா வடியார்க்
கேதா னுறவா கிடுமெய்ப் பொருளே
நாதா வெனவச் சிவனை மருவும்
மாதா மயிலா புரிகற் பகமே. 2

பாடும் பணியும் மலர்கொண் டிருதாள்
சூடும் பணியும் தினதா ருருளே
நாடும் நினைவும் நலியாச் சுகமும்
வீடுந் தருவா யெனையா ளுமையே. 3

மைந்தா வெனவந் தொருநா ளிரவிற்
றந்தா யருளைத் தமியே னுளிரச்
செந்தா மரையா ளொடு வாணிபுகழ்
எந்தாய் மதுரா புரிமீ னவளே. 4

ஆதிப் பொருளே அறிவா கியமெய்ச்
சோதிப் பொருளே தருவே மணியே

வேதப் பொருளே யெனவோ தியுமை
பாதத் திணையே பணிவாந் தினமே, 5

மாயா வுலகில் மதிகெட் டெளியேன்
நோயா லழியா துளமீ துனதாள்
ஓயா துநினைந் திடவைத தருள்வாய்
தாயா யெனையா ளபயாம் பிகையே. 6

சூதுங் களவுங் கொலைசூ ழுலகில்
ஏதுந் தெரியா வெனையாண டிலையேல்
பாதம் பணிவோர் துணையா குவையோ
வேதம் புகழ்ஞா னதயா பரியே? 7

கஞ்சப் பதமீ தெளியேன் மொழியுஞ்
செஞ்சொற் கவிமா லையணிந் தருளவாய்
அஞ்சற் கவெனுங் கரமோ டொயிலாயக்
கஞ்சித் தலம்வாழ் கருணா கரியே. 8

கந்தப் பெருமா னடியே கதியாய்
வந்தித் திடுநா ளுமையாள மருவிச்
சந்தக் கவிநீ மொழிவா யெனவே
எந்தக் கவியும் எளிதா கியதே. 9

கருவாய்ப் பதிமா தமிருந் தொருநா
ளுருவாய் வருமோ ருடல்போ குமுனந்
தருவா யறிவுந் தனமும் பரமும்
வருவா யுமையே வினைதீர்த் திடவே 10

ஓடுந் திறமும் உலகிற் பொருளைத்
தேடுந் திறமுஞ் சிறிதிங் கிலையே
நாடும் பொருளும் நலமுந் தருவாய்
ஆடுஞ் சிவனார் புகழ் நாயகியே. 11

மண்ணிற் புகழும் மதியும் நிதியும்
விண்ணிற் றிகழ்வும் நிறைவுந் தருவாய்
கண்ணிற் கிமைபோ லடியா ரையெலாம்
எண்ணித் துணைகொள் இமவான் மகளே. 12

சூழுஞ் சுழலுஞ் சுடருஞ் சடுமிப்
பாழும் புவியிற் பதறிக் கதறி

வீழுங் கொடுவாழ் வையகற் றியெனை
வாழும் படிசெய் தருள்வா யமையே. 13

கல்லிற் கிசையாள் சரியைக் கிரியைப்
புல்லிற் கிசையாள் உருகித் தொழுவார்
சொல்லிற் சிசைவாள சுகமே தருவாள்
தில்லைச் சிவகா மினியே மணியே. 14

தானாய் கலைஞா னமெலாம் வரவும்
மோனா நிலையான் பெறவும் அருளவாய்
வானோர் புகழுங் கருணா கரியே
ஞானா கரியே சிவமா துமையே. 15

நூற்பயன்

அம்பா ளநுபூதி ஐம்மூன் றுமெந்நாளும்
அன்போ டிசைத்தா ரருளகண்டு—பணபோடு
செம்மதியும பெற்றழியாச் சீர்பலவும் பெற்றுமன
நிம்மதியுங் கொள்வார் நிலத்து.

## 9

## குங்கும மகிமை

அட்டாணா ]  குங்கும பஞ்சதசி  [ சாபு

குங்கும மாவது குறைகளைத் தீர்ப்பது
குங்கும மாவது குடியினைக் காப்பது
குங்கும மாவது குணமத ளிப்பது
குங்கும மாவது கொல்வினை தீர்ப்பதே. 1

விதிதனை வெல்வது விமலையின் குங்குமம்
நிதிதனை யீவது நிமலையின் குங்குமம்
பதிதனைக் காப்பது பதிவ்ரதை குங்குமம்
கதிதனை யாள்வதும் குங்கும மாமே. 2

தஞ்ச மென்றோரைத் தடுத்தாண்டு கொள்வதும்
பஞ்ச மாபாதகம் பரிந்துமே தீர்ப்பதும்
அஞ்சின பேருக் கபய மளிப்பதும
கஞ்சி காமாக்ஷியின் குங்கும மாமே. 3

நற்பத மீவது நாரணி குங்குமம்
பொற்பினை யீவது பூரணி குங்குமம்
சிற்பர மாவது சிவகாமி குங்குமம்
கற்பினைக் காப்பதும் குங்கும மாமே 4

செஞ்சுடர் போல்வது சீரான குங்குமம்
கொஞ்சு மழலைக் கொடுப்பது குங்குமம்
அஞ்சு புலன்க ளடக்கி யருள்வதும்
கஞ்சி காமாக்ஷியின் குங்கும மாமே. 5

நோயினைத் தீர்ப்பதும் நுண்ணறி வீவதும்
பேயினைத் தீர்ப்பதும் பெரும் புகழீவதும்
சேயினைக் காப்பதும் செல்வம் தருவதும்
தாயினை அர்ச்சித்த குங்கும மாமே. 6

சக்தி கொடுப்பதும் சத்தியம் காப்பதும்
பக்தி யளிப்பதும் பரகதி யீவதும்
முக்தி கொடுப்பதும் மும்மலம் தீர்ப்பதும்
சித்தி தருவதும் குங்குமம் தானே. 7

நெஞ்சிற் கவலைகள் நீக்கி யருள்வதும்
செஞ்சொற் கவிபாடுஞ் சீரினை யீவதும்
வஞ்சப் பகைவரை வாட்டி யருளவதும்
கஞ்சி காமாக்ஷியின குங்கும மாமே. 8

சிவசிவ என்றுத் திருநீ றணிந்தபின்
சிவகாமி யேயெனச் சிந்தித் தணிவதும்
தவமான மேலோருந் தரித்துக் களிப்பதும்
பவவினை தீர்ப்பதுங் குங்கும மாமே. 9

எவையெவை கருதிடில் அவையவை யீவதும்
நவவகை சகதியின் நலனைக் கொடுப்பதும்
குவிசெய் கரத்துடன் கும்பிட்ட பேருக்கு
குவிநிதி யீவதும் குங்கும மாமே. 10

அட்ட இலக்குமி அருள தளிப்பதும்
இட்டங்க ளீவதும் ஈடற்ற குங்குமம்
கட்டந் தவிர்ப்பதும் காத்தெனை யாள்வதும்
சிட்டனாய்ச் செய்வதும் குங்கும மாமே. 11

குட்ட முதலான மாரோகந் தீர்ப்பதும்
நட்டம் வராதொரு நலனைக் கொடுப்பதும்
எட்டும் இரண்டும் அறிவிததோர் வீடினை
இட்டவே செய்வதும் குங்கும மாமே. 12

பட்ட காலிலே படுமெனக் கட்டங்கள்
விட்டிடாமலே வந்துமே வாட்டினும்
பட்டான பார்வதி பாதம் பணிந்தே
இட்டார் இடர் தவிர் குங்கும மாமே. 13

சித்தந் தனைச்சுத்தி செய்வதற் கெளியதோர்
எத்துந் தெரியாது ஏமாந்த மாந்தரே
நித்தந் தொழுதனை குங்குமந் தன்னை
நித்தம் தரித்துமே வீடடை வீரே. 14

மிஞ்சும் அழகுடன் குங்கும ஆடைகொள்
செஞ்சுடராகுமோர் கஞ்சி காமாக்ஷியின்
கஞ்ச மலர்முகந் தன்னிற் றிகழ்வதும்
பஞ்ச நிதி தரும் குங்கும மாமே. 15

## 10

**நீலாம்புரி ] ஸ்ரீ காமாக்ஷித் தாலாட்டு [ ரூபகம**

*மாதா மரகதமே மாமதுரை மீளவளே*
*வேதாகமப்பொருளே மெய்ப்பொருளே கண்வளராய.*
*நீதா வெமக்கபய மென்றுநிதங் கைதொழுது*
*பாதாரவிந்தமதைப் பண்ணிசைந்தோம கண்வளராய.* 1

**மோகனம் ] [ ரூபகம்**

*மங்களையே மாதுமையே மாதா மனோன்மணியே*
*எங்குறைகள் தீர்த்தருளு மீஸ்வரியே கண்வளராய*
*சங்கரியே சாம்பவியே தாயாகும் பூரணியே*
*இங்கெனது நற்றுணையே கண்வளராய இப்பொழுதே.* 2

**நாதநாமக்கிரியை ] [ ரூபகம்**

*அம்பிகையே தாலேலோ ஆருயிரே தாலேலோ*
*நம்பினவர் பங்கிலுறை நாயகியே தாலேலோ ;*
*சண்பகப்பூ நன்மணமுஞ் சாமந்தி மல்லிகையும்*
*அன்புடனே தூவினேன ஆரமுதே கண்வளராய்.* 3

ஸஹானா ] [ ரூபகம்

*நாடினேம் நின்னருளே நாடிபல நறுமலராற்*
*சூடினேம் நின்சரணங் கதியென்றே நினபுகழைப்*
*பாடினேம் மெய்மறந்து பாடியுள்ளப் பரவசத்தால்*
*ஆடினேங் காணிலையோ அம்பிகையே கண்வளராய்.* 4

மத்யமாவதி ] [ ரூபகம்

*சொர்ணமயத் தொட்டிலிலே சிங்காரப் பந்தலிட்டு*
*அன்னத்தின சிறகடித்த பஞ்சணைகள் பரப்பிவிட்டோம்*
*இன்னிசைக் கானமுடன் ஏத்தியுன புகழுரைத்தோம்*
*கன்னியே கண்வளராய் கண்வளராய் தாலேலோ.* 5

பிலகரி ] [ ரூபகம

*அஞ்சுமுக நாயகனும் ஆடிமிகக் கண்ணயர்ந்தான்*
*கொஞ்சியுனை யணைடியந்தக் குமரனுங் கண்ணயர்ந்தான்*
*துஞ்சினன் கரிமுகத்துத் தூயோனும் பஞ்சணையில்*
*கஞ்சிகா மாக்ஷியே கண்வளராய் கண்வளராய்* 6

ஹிமமேந்திர மத்யமம ] [ ரூபகம

*செந்தாமரைக்கண்ணன் வேய்ங்குழ லின்னிசையும்*
*வெண்டாமரைமலராள வீணையின மெல்லிசையும்*
*எந்தாய எனவோதும மெய்யடியார் பண்ணிசையும்*
*தந்திலையோ துயிலுனக்குச் சாம்பவியே கண்வளராய்.* 7

எதுகுல காம்போதி ] ] ரூபகம்

*உன் கணவன் சிவனுன்றன் அன்பர்குறை தீர்க்கானோ?*
*உன்னண்ணன் கேசவனும் நின்னடியர்க் குதவானோ?*
*உன்மைந்தர் இருவோரும் ஓடிவந் துதவாரோ?*
*சிந்தையி லையமின்றித் தேவீநீ கண்வளராய்.* 8

நாயகி ] [ ரூபகம்

*அம்பல வாணருடன் ஆடியும் நீ அயர்ந்திலையோ?*
*நம்பின வன்பர்குடி காத்தும் நீ களைத்திலையோ?*
*தும்பி முகத்தவனை யீன்றும் நீ யிளைத்திலையோ?*
*அம்பிகையே கண்வளராய் கண்வளராய் தாலேலோ.* 9

தன்யாசி ] [ ரூபகம்

மாமதுரை நீயாண்டுங் களைப்பொன் றுங் காணிலையோ ?
மாவடித் தவமிழைத்தும் மருளொன்றுந் தோன்றிலையோ?
மாமயில் வேலனுக்கு மேவலினை மிளைத்திலையோ ?
தாமதம் ஆயிற்று தாயேநீ கணவளராய. 10

முகாரி ] [ ரூபகம்

தாயாக வுழைத்திட்டாய் தந்தையு மாயிருந்தாய
சேயாக எனைவளர்த்தாய் செல்வங்கள தந்தட்டாய்
ஓயாது என் குடிக்கே உழைத்தே நீ யிளைத்திட்டாய்
வாயார வாழ்த்துகின்றேன மாதாநீ கணவளராய் 11

காம்போதி ] [ ரூபகம்

என்றுமெனைத துணைகொண் டிராப்பகல் அலைகின்ருய்
கன்றினொரு தாய்போலக் காத்திட விரைகின்ருய
ஒன்றுமறி யாவெனைக் கூவியாகச் செயகின்ருய
நன்றுன்றன பணியெல்லாம் தாயேநீ கணவளராய். 12

அட்டாணு ] [ ரூபகம்

இவ்விடமு மிருக்கின்ருய் நின்னடியர் கூவுமுன்னம்
அவ்விடமு மிருக்கின்ருய் அணடமெல்லாம் காத்திடவே
எவ்விடமு மேவிநின்ருய இவ்வணணம் பணியிழைத்தும்
எவ்விதம் நீ கண்வளரா திருக்கின்ருய கற்பகமே? 13

சங்கராபரணம ] [ ரூபகம்

வெள்ளிச் சங்கிலிகள் கரணங்கள் நான்காக
உள்ளமெனுந் தொட்டிலில் நின்மலமெத்தையிட்டு
தெள்ளுத மிழ்மொழியால் தாலாட்டுப் பண்ணிசைத்தேன்
எள்ளும் பிழையாத யீஸ்வரியே கணவளராய். 14

சுருட்டி ] [ ரூபகம்

சகலாண்ட கோடிகளும் யீன்றருளுந் தாயுமையே
அகிலாண்ட நாயகியே ஆருயிரே கணவளராய் ;
பலவாண்டு வாழ்கவே நீ பல்லா யிரத்தாணடும்
எனையாண்டு கொண்டருளும் ஈஸ்வரிநீ வாழ்வாயே, 15

# 11

## அம்பாள் வார மாலை

ஞாயிறு னவைகோடி சீராயு தித்ததென
நளினமிகு பாதமதலே
நவமணிப தித்தொளிர்சி லம்புகல கலவெனவே
நலமுதவு மஞ்சலிடவே.
ஆயிரம் நாவுடைய சேடனும் பகரவறி
யாததொரு திருவடியிலே
அரியபொன் னுடையுடன் மணிமாலை பல சூடி
அபயவர தந்திகழவே:
வேயெனுந் தோளழகு மிருபெரிய தனவழகு
மெல்லிடைநெ ளிந்தவழகும்
மினலெனவொ ளித்திடு மலர்முகமு மதிநுதலு
மீன்விழியுங் கோவையிதழும்,
சாயுமொரு கொண்டையும் நாசிநத்துஞ்செவியில்
தாடங்க முந்திகழவுன
தரிசனந் தந்தெனது தறைகடீர்த் தருள்வாயே
தாயேகற் பகவல்லியே 1

திங்கள்பல கோடிகளை வீசியொளி விட்டதென
திருமுகங் கொண்டதாயே
சிவகாமி தேவியே அபிராமி அம்மையே
சீரான மீனாட்சியே,
எங்குறைக டீர்த்தருளு மன்னைகா மாட்சியே
இணையிலா வுமைவல்லியே
எங்குமுள யீசையே யீரேழு லோகங்க
ளீன்றருளும் ஜகதம்பையே,
சிங்கமிசை சீர்கொண்ட சிங்காரரூபியே
ஸ்ரீராஜ ராஜேஸ்வரீ
செப்பரிய சீலமொடு மாமயிலை மீதுறையுந்
தேனே கற்பகவல்லியே,

சய்கையற வந்தெனது சிந்தையி லிருந்துனது
தண்ணரு ளுகந்தருளியே
சலியாத வாழ்வதுவு மிகபரசெள பாக்யமுந்
தந்தருள் நீ யிற்றை நாளே. 2

செவ்வாயி தழ்க்கனியி லுலவியபுன் னகையுடனே
சீர்கொண்ட வபிராமியே
சிங்காஸ னத்தின்மிசை சீராய மர்ந்ததொரு
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ,
ஒவ்வாத வூர்தனிலெ யிந்திரியப் பேய்களுட
னுளளிருந்துறவாடியே
ஓரரசு பூண்டுவரு முண்மணிம ஞேன்மணியே
ஒப்பற்ற சித்ருபியே,
அவ்வாறி ருந்ததுபோ யவ்விய மு மும்மலமு
மளவற்ற பழவினைகளும்
அடைந்து முலுமடியேனை யீடேறுமாறு நீ
அருளது புரிந்திடாயேல்,
எவ்வாறு யிவ்வுலகி லுன்னடிய ருய்ந்திடுவர்
எந்தாயே செப்பியருளே
ஈகைமிகு வாரியே ஏழையுப காரியே
ஏகாந்த சுகவோரியே. 3

புதனுடைய வாரமதில் மதனுடைய வேகமும்
புந்திக்கி லேசமதுவும
போக்கி யிவ் வெளியனுக் கரியபர ஞானமது
போதித்தி வ்வுலகிலுன் றன்
பதமதனை நாடியொரு மனமலரைச் சூடியுன்
பக்தரைக் கூடிநிதமும்
பஜனைகள்பு ரிந்துனது பெரிய திருப்புகழ்பாடி
படிமீது வாழவருளே ;
மதிவதன திரிநயன மதுரைமீ னுட்சியே
மயிலைகற் பகவல்லியே
மாதாம கேஸ்வரியே வகிலஜக தீஸ்வரியே
மதுசூதன் தங்கையுமையே

நதிசடைய ரிடமதனி லதிகருணை யுடனமரும்
நாயகியே வபிராமியே
நானென்று நிலைகொண்ட நான்மறை முடிப் பொருளே
ஞானவா னந்தமயிலே. 4

குருவார மதிலுனது குறைவற்ற திருவடிகள்
குறிப்ப ணிந்துநின் றே
குங்குமார்ச் சனைதனைக் குறைவிலா திட்டுகை
கூப்பினே னனதம்மையே
குருவாக வந்துசிவ ஞானம தளித்தெனது
குறைகளெல் லாந்தீரவே
குன்றாத வாழ்வதுவு மிகபர சௌபக்யமுங்
கொடுத்தருள் த்கருணைமம்மா;
அருவாகி யுருவாகி யாதியாய் பொருளாகி
அத்வைத கிதரூபியாய்
அகிலஜக தீஸ்வரியு மாலடியிற் குருவுமா
யமருமொரு சிவகாமியே
தருவாகி மயிலான வுருவாகி மயிலையிற்
றவமீயு முமைவல்லியே
சத்தியபி ராமியே சச்சிதா னந்தமே
தாயேகற் பகவல்லியே. 5

சுக்ரவா ரத்திலதி சௌபாக்யதாயினியே
சௌந்தர்ய ரூபியுமையே
சோபைச்சு மங்கலையே அபயவர தச்சிவையே
ஜோதிவிடு திருவடிவிலே
சக்ரமிடு வண்டுபல மொய்த்திடு மலர்த்தொடையுந்
தாழைமல ராடையதுவும்
சரிவளையு முத்துநவ ரத்னமணிமாலையுஞ்
சலங்கை யொட்டியாணமதுவும்
விக்ரமக் கழலிடை சிலம்பொடு சதங்கையு
முடியினிற் பிறைசூடியும்
ம்ருகமதத் திலகமொடு தாடங்க நத்துமொளி
வீசிப்ர காசிக்குமாயே

வக்ரமன முடையவென் மும்மல முமொழியவே
மருவியெனை யீடேறவே
மதியுடனே நிதியருளி யிகபரமுஞ் சுகமருளு
வாயேகற் பகவல்லியே. 6

சனியினது தோஷமொடு சஞ்சலந் தந்திடுஞ்
சகலவித க்ரகதோஷமுஞ்
சந்த்ரசூ ரியர்களின் க்ரஹண தோஷங்களுஞ்
சகலசபை சாசமுடனே
முனிகளின் சேஷ்டையும் மூடரிடுமேவலும்
மூர்க்கர்புரி வஞ்சனைகளும்
மோனமா யோகியெனப் பாசாங்கு செய்திடும்
மோசகர்க ளிடுசாபமும்
பிணிவழியி லுற்றபகை விஷபிணியு மிடர்கலியுஞ்
சகலவித விக்னங்களும்
தாயேவுன் செஞ்சரண் தஞ்சமென நம்பிடுந்
தண்ணடிய ரிடமணுகுமோ
தனிமயிலி லேறிவரு மறுமுகனை யீன்றிடுஞ்
சங்கரியே சாம்பசிவையே
ஜகமூல காரணியே நிதிமூலநாரணியே
தயேகற் பகவல்லியே. 7

## 12

### ஸ்ரீ காமாக்ஷி ஸ்தோத்ரங்கள்

சங்கையற வந்துனது செஞ்சரண கஞ்சமலர்
சந்ததமு நெஞ்சிலுனியே
சங்கரிஜ கந்தொழுசு மங்கலிசு தந்தரி
சகஸ்ரதள பத்மாஸனி,
செங்கமல மேனியொடு சிங்காஸ னத்தின் மிசை
சீர்கொண்ட கௌமாரியே
சிங்கார ரூபியே சிவகாமி தேவியே
ஸ்ரீதேவி நாதேவியே.

எங்குமுள யிசையே யீரேழு லோகங்கள்
ஈன்றருளு மெனதன்னையே
என்றுமுனை வழுத்துபவ ரீடேறு மாறருளு
மெழிலுடைய ஜகதம்பையே,
கங்கையணி சங்கரன் பங்கிலுறை யம்மையே
கந்தர்தமை யீன்றவுமையே
கண்குளிர வந்துனது தண்ணருளு கந்தருள்
கஞ்சிகா மாட்சியமையே 1

எங்குமுள நின்சொருப மீதென்ப துணராது
ஏழுபிற விக்கடலிலே
இப்பிறவி பெற்றுமினி யிங்கனே வோயாது
இருவினைமு மலமாயையுள்
மங்கியுழ லென்விதியை யென்னென்று ரைப்பேனென்
மதிதனை யு மென்சொல்லுவேன்
மனமெனு மலைக்குரங் கதனிடமிம் மெய்மலரை
யளித்தவித மென்சொல்லுவேன் ;
செங்கணுடை சீரங்கர் தங்கையே மங்கையே
சீரான வபிராமியே
சிந்தாத சித்தமிசை சீர்கொண்ட பூரணியே
சீதேவி மாவாணியே,
கங்கையணி சங்கரன் பங்கிலுறை யம்மையே
கந்தர்தமை யீன்றவுமையே
கண்குளிர வந்துனது தண்ணருளு கந்தருள்
கஞ்சிகா மாட்சியமையே. 2

செங்கமல பீடமுறை சிங்கார ரூபியே
சித்ரூபி ஸ்ரீரூபியே
சிவஞான பரரூபி தாயான குணரூபி
ஜெயரூபி தயைரூபியே,
மங்களமெ யெந்நாளு மேவியரு ளாரணியெ
மதுரைவாழ் மீனாட்சியே
மாகாளி ரூபியே மாயோக ரூபியே
மாதாவி சாலாட்சியே

எங்குறைகள் தீர்த்தருளு மன்னைசிவ காமியே
எங்குமுள ஜகதீசையே
என்றுபுகழ் பாடியடி நாடுமடி யார்களுள
மென்றுமக லாதவமையே,
கங்கையணி சங்கரன் பங்கிலுறை யம்மையே
கந்தர்தமை யீன்றவுமையே
கண்குளிர வந்துனது தண்ணருளு கந்தருள்
கஞ்சிகா மாட்சியமையே. 3

எங்குநா னேகினும் யாரோடு பேசினு
மென்சரிதை யென் புகழுமே
என்றைக்கு மோதியே பொய்மையே போதித்து
இங்குழலு மென்சிந்தைதா
யெங்கெங்கு மோடியுந் தேடியுஞ் சலியாத
வின்பமிலை காணுமலே
ஏமாந்து பின்னையுஞ் சீரழிதல் நீதியோ
இதுவுனது திருவுளமாமோ ;
சிங்காஸ னத்தின்மிசை செங்கோல் செலுத்திவரும்
ஸ்ரீராஜ ராஜேஸ்வரீ
சித்தான ரூபமே சச்சிதா னந்தமே
சீரான மீனாட்சியே,
கங்கையணி சங்கரன் பங்கிலுறை யம்மையே
கந்தர்தமை யீன்றவுமையே
கண்குளிர வந்துனது தண்ணருளு கந்தருள்
கஞ்சிகா மாட்சியமையே 4

திரைகடல்க ளோடியுந் திரவியந் தேடெனச்
செவ்வனே செப்பியது போற்
றிரைமூடி யேழுபிற விக்கடலு மோடியுந்
திரவியந் தேடாத யான்
கரையேறு மாறுநீ திருவுளங் கொண்டுனது
காட்சியது தந்திடாயேல்

காணுத காமியர்கள் பொய்யென் றரற்றியே
காலங்க ழிப்பரன்ருே ?
திரையேழி னப்பானற் கதிர்காம முளவோனைச்
சிறுவா னெனக் கூவுமோர்
சிவகாமி தேவியே யபிராமி யம்மையே
சீர்வாய்ந்த மீனுட்சியே.
கறையுண்ட கண்டத்தர் அரையுண்ட அம்மையே
கரிமுகனை யீன றவுமையே
கண்குளிர வந்துனது தண்ணருளுகந்தருள
கஞ்சிகா மாட்சியமையே. 5

அம்மையே யுன்னையே நம்பியே யெந்நாளும்
அருணிறையு முனதடியிலே
அன்பவிழுன் மனமலரை ஆவலொடு சூடியுன
தரியதிருப் புகழ்பாடினேன்
இம்மதுவை யுண்டொரும யககமது கொண்டது போ
லேன்மவுனம் சாதிக்கிருய் ?
எங்குசென் ருலுமினி யேவினைவந் தாலுமுனை
யினிவிடுவ தில்லையாதலாற்
செம்மையே யாயதொரு பதவிதனை யருளியெனை
யிகபரமு ளுளாகவே
தீராத வினைத்தீர்த்துச் செல்வமது மீன்றருளிச்
சேயேனை வாழவருளே ;
சிம்மிசை சீர்கொண்ட சிங்கார ரூபியே
ஸ்ரீராஜ ராஜேஸ்வரி
செப்பரிய சீலமொடு காமபீ டத்திலுறை
ஸ்ரீ கஞ்சி காமாட்சியே. 6

ஊனெலா முதறலிட வுளமுழுது முருகிடவு
ரோமங்கள் சிலிர்த்திடவுமே

உனதரிய சன்னிதியி லரியதிருப் புகழ்பாடி
யுனதருளை நாடிநின் றேன்
யானலா லுற்றபல சேய்களுனக் குளர் எனினு
மடிமையொரு சவலையென நீ
அருமையொடு வந்தெனையும் பெருமையுட னுய்ந்தொ
அருளவிது தருணமம்மா ; [ளிர
வானெலா மளவிடும் மதுசூதனன் தங்கையே
வரைராஜ னருள் மங்கையே
மதிசடைய ரமுதுபடை யெனவருமு ளமு தருளு
மன்னபூ ரணியம்மையே
தானலா லொன்றுமிலை யெனவோதி மார்தட்டுந்
தன்மையுள மாகாளியே
தனிமுதற் சாட்சியே தவசுடர்க் காட்சியே
தாயான காமாக்ஷியே 7

மாயாபு ரந்தனிலெ வோயாது முன்றுநான்
வஞ்சனைக் கொடிகட்டியே
வைம்புலக் கடையினுள் மும்மலமு முதலாக
மனமொடுபல் வியாபாரமே
ஓயாது மைத்திட்டு லூழ்ககட னுமிஞ்சிட்டு
ஊருநர்க ளோடிநொந்தே
உய்யும்வகை யுளதெனக் கேட்டுநா னுனதடியை
உறுதியென வேநாடியும்.
நோயாலு மிடியாலு மாளாத வினையாலும்
நூலளவின் மெலிவினாலு
முன்வருங் கோளாலு மிந்திரியப் பேயாலும்
நொடியேனு மிடர்கொள்வதோ ?
தாயாக வந்துமே யாட்கொளுந் தெய்வமே
தருமமிகு பரதெய்வமே
தஞ்சமென நம்பினோர்க் கஞ்சலெனு மம்மையே
தயைமேவு காமாக்ஷியே. 8

சிற்றெறும் பூரல்கொளக் கற்களுந் தேயாவோ
சிற்றுளிகற் பாறை விளாதோ
திக்கற்ற சேய்கூவத் தாய்மனமு நோகாதோ
செப்புவாயெனதம்மையே,
பற்றறத் தினமுமுன தடியர்திருக் கூட்டமொடு
பாடியுள வன்பூறிடப்
பார்க்கவொரு கல்போல்நீ யாறனு மனமுருகிப்
பக்தர்தமை யுய்யவருளாயோ ?
சுற்றறச் சிந்தையைச் சலியாது வுன்மீது
சுருதிமுறை சிறிதுவைத்தே
சுடரான சிதெொளியைக் கண்டாலிப் பேரிருளுந்
தொலைந்துபழ வினையுமோடாதோ ?
பெற்றதா யானவொரு கற்பகாம் பிகையே
பெறுதற் கரியபொருளே
பேராத ரிக்குமவர் தீராத வினைதீர்க்கும்
பேருடைய காமாட்சியே.

பிரமனொடு நால்வருஞ் சங்கிலிக ளாகவும்
பீடம்ச தாசிவனுமாய்ப்
பெரியதொரு திருவூஞ்ச லாடியே வம்மையே
பிரமாண்ட கோடியருள் நீ,
கரணவகை நாலுமொரு ஐகமாயை பற்றியே
கலக்கமிகு மாக்கைதனிலே
காமமெனுங் கால்வீசப் பிறப்பி றப்பிற்குங்
கணக்கிலா வூசலாடேனைக்
துரிதமென வாட்கொண்டு துரியநிலை செப்பிட்டுச்
சுடரறியு மருளதருளிச்
சோதனைகள் வாராதிச் சேயிடமே யிகபரமுந்
துணையாகு வாயம்மையே :
சரணமெனு மடியார்க்கு மரணவினைவாராது
தாங்கியருள் சாவித்ரியே

சாயுஜ்ய பதவியருள் தேஜோவி லாஸினியே
தாயான காமாட்சியே. 10

கோணமற் குறையாமற் பலகலைக ளோதியுங்
குறுகியுன் பதமறியாதார்
குங்குமஞ் சுமந்துமத னன்மணமு மறியாத
கோவேறு கழுதை யன்றோ
பேணமற் புகழாமற் பிதற்றுவோர் பேச்செலாம்
பேய்களிடு கூச்சலன்றோ?
பேணவொரு தாயிலாப் பிள்ளைபோ லன்றோவுன்
பேரறிவி லாக்கல்வியே
காணமற் கண்டிடுமெய்ச் சித்தர்தமை நாடியே
கரையேறு மதி பெற்றுமே
கண்ணொடுக ருத்தினையு ணக்கையி விருத்தியுன்
காட்சிதனைக் கண்டிடுவனோ?
வீணம்ரு தங்காதி நாதமொடு கூடியே
விளையாடு குண்டலினியே
மித்தைதனை யோட்டியே வித்தைதனை யூட்டுமோர்
மேலான காமாட்சியே. 11

வாயிலாக் குழவிதன் வயிற்றின் பசியறிந்து
வாரிமடி மீதெடுத்தே
வாராவென் மைந்தனே கண்மணியே யெனவோதி
அமுதூட்டிச் சீராட்டுமோர்
தாயிலாத் தமியேனைத் தாயாக வந்துமித்
தருணமதி லாட்கொண்டுமே
தயைமேவு தாளுதவி தண்ணருளு கந்திட்டுத்
தரணிதனில் மேலாகவே
நோயிலாப் பெருவாழ்வு மிகபரசு கங்களும்
நுண்ணறிவெ ழுச்சியொடுமெய்
நூல்களின் ஞானமுந் தவவாழ்வு மேன்மையும்
நொடியிலருள் வாய்மையே

கோயிலாய்க் கொண்டுவெளி வாயிலாச் சித்தருளக்
குகையிலொரு குறைவி லருளுங்
கோமளமெ கற்பகமெ காமபீ டத்திலொளிர்
கௌரியே காமாட்சியே. 12

நிதிவேணு மென்நாளு மழிவிலாக் கதிவேணு
நிர்மலச் சிந்தைவேணும்
நேயமிகு நெறிகொண்டுநி தமுமுன தடி பணிய
நின்னருணி றம்பவேணும
மதிவேணு மாசற்ற யிகபரசு கம்வேணும்
வறுமைநோய் தீரவேணு
மஷ்டமா லக்ஷ்மிக டாக்ஷமும் வேணுமரு
மணிமாதி சித்தியுளநற்
கதிவேணுங் கருணைமிகு முனதுபுகழ் பாடியே
காலனைய டக்கவேணும்
கடுகியே வந்தெனக் கிவையெலா மீன்றருள்
கருணைநிறை யெனதம்மையே :
பதிவேணு மெனவோடி யதிமோக விழியோடு
பரமசிவ னைத்தழுவுமோர்
பரையே பரம்பொருளே பக்தருளக் கற்பகமெ
பாராளுங் காமாட்சியே. 13



# 13

## சிவசக்தி நடனம்

### சிவகாமி அகவல்

(செப்பிடு வித்தைச் சிவகாமிநாதன்)

வீட்டை விடுத்து வெகுநா ளுலகிற்
காட்டில் வாழும் கடும்புலிலி யன்னத்
தேட்டந் தேட நாட்டங் கொண்டு
கேட்டைக் கொடுக்கும் பாட்டை யூடே
நிலையிலா வாழ்வே நிலையென நம்பி
அலைகடல் மூழ்கத் தலைவிரித் தோடும்
நேயா கேளாய் நின்றே கேளாய்
கேளாய் கேளாய் சற்றே கேளாய்
காத்து நான் கண்டகூத்தது கேளாய்
கேட்டுப் பின்னர் வீட்டைச் சேராய்
தூங்காது தூங்கித் துரியத் திருக்கப்
பாங்காய் வெளியிற் பலவித நாதங்
கேட்கத் தெவிட்டா வினிய கீதம்
குடுகுடு வென்னு முடுக்கை யொலியொடு
உள்ளிற் புகுந்தென் னுறக்கம் நீக்கத்
தெள்ளிய விழியொடு வெளியில் நோக்க
ஞாலந் தன்னிற் காணு முகத்தன்
சூலந் தாங்கிச் சுடர்க்கை யேந்தி
மானொடு மழுவுங் கரத்திற் பற்றிக்
கானிடை வாழ்வான் போன்று கரியுரித்
தோலுடை பூண்டுத் தொங்கலரா வெனத்
தோளிற் சு றிச் சீறிய பாம்பொடு
நீறு திகழ்ந்த நெற்றியில் விழியும்

ஆறு பொழிந்த வணங்கொடு பிறையுந்
தலைவிரி கோலச் சடைமுடி யிட்டுத்
தலைகள் கோத்துப் பயந்தரு மாலை
அசைந்திடு மார்பி லகந்தையு மாடப்
புசங்களி லரவக் கங்கணம் பூண்டுச்
சோதிப் பிழம்பெனு மேனியிற் றிகழ்ந்த
பாதிப் புறத்திற பச்சை நிறத்தாள்
ஒருத்தியைப் பொருத்தித தரித்த செருக்கொடு
பருத்துக் கருத்த வுருத்தி ராக்கம்
சரத்திற் றொடுத்த தாரணி மார்பன்
பாரம் நிறைந்த பழமைக் கூடையுஞ்
சூரன் போலச் சுமந்து வந்தவன்
சுமைதனைத் தரையி லிட்டுச் சட்டென
அமைதி நீங்க ஆரவா ரித்துக்
குடுகுடுப் பாண்டிபோ லுடுக்கையு மடித்துக்
கூட்டங் கூட்டி ஆட்டங் காட்ட
நாட்டங் கொண்ட ஆட்டக் காரன்
செப்பிடு வித்தை செய்வான் போன்று
அப்பொழு தாங்கே அரைக்கண மாமுன்
திரண்டொரு கூட்டம் புரண்டு வரவும்
இரண்டுரு வொன்றா யிசைந்த குறவன்
சாலக் காரன் தானே யெனவும்
வேலைக் காரன் வேறிலை யெனவும்
மாயக் காரன் மார்பது தட்டவும்
வாயைத் திறந்து வியந்து குழுமித்
திரண்டவர் மிரண்டு திடுக்கிட வாங்கே
இரண்டற நின்ற வெழிலுடை நங்கையை
வேறு பிரிந்தங் கிரண்டுரு வாகித்
தானும் வேறாய் தன்றொரு பாதியாம்
மானும் வேறாய் மாயக் காட்டிக்

கூறிரண் டாக்கிப் பிரிந்த கூத்தன்
கூறினை குழுமிய கூட்டம் நோக்கித்
தூய வாட்டங் காணுவீ ரிங்கென
மாயப் பெண்ணும் மதத்தள மிசைத்துத்
தத்திணை தோமெனத் தாளம் போடப்
பதிகிடு கிடுவெனப் பரத நாட்டியம்
ஆடின விந்தையு மிசையுட னப்பெண்
பாடின விந்தையும் பகர வலதோ
தானு மாடச் சடை யு மாட
மானும் ஆட மழுவும் ஆடப்
பிறையொடு தலையிடு பெண்ணு மாடக்
கறையுமிழ் நாகங் கலங்கி யாடத்
தழலுமிழ் கண்களிற் பொரிபறந் தோடக்
குழையிடு பாம்புகள் குலுங்கி யாடத்
தாரெனு மெலும்புத் தலைகளு மாட
மார்பணி வுருத்தி ராக்கமு மாட
சூலமு மாடச் சுடரது மாட
நீலவா னுடுக்களும் நிலமும் ஆடச்
சந்திர சூரியர் தாமும் ஆட
இந்திர னொமுதற் றேவரு மாட
எனைத்துணை கொண்டோர் அனைவரு மாட
அனைத்தையும் நினைத்தவென் னுள்ளமு மாட
மந்திரக் காரன் கூத்தது கண்டு
சுந்தரப் பெண்ணுஞ் சுகித்து நின்று
இயந்திரம் போலரன இனனமு மாடிற்
பயந்திடு முலக மென்றவ ளஞ்சி
மத்திரக் காரன் கூத்தை யடக்கத்
தந்திரஞ் செய்யத் துணிந்து மங்களை
சுந்தர நடன மாடத் துடங்கவும்

இருவரு மாடும் பெருமையுங் கண்டு
உருகியுட் குளிர்ந்த வுலக மாந்தர்
சத்திக் கெதிரிடை நிற்க மாட்டா
வித்தைக் காரன் வியர்த்து நின்று
அம்மா பெரிதென் றகமகிழ்ந் தொதுங்கிச்
சும்மா விருக்கச் சக்தி நின்று
ஆக்க லளித்தல் அழித்தல் அருட்கணால்
நோக்கல் மறைத்தல் நோன்பது வாகப்
பலபல வண்டம் படைத்து ளாங்கே
பலபல வுயிர்கள் பண்புட னுயிர்த்துச்
சிவனொரு செயலுஞ் செய்யா தமரப்
புவன போகமெ லாமளித் துலகிற்
சகலரும் வாழச் சக்தி கொடுத்துப்
பகலிர வெல்லாந் தன்புகழ் பாடும்
அடியற்க் காகத் தாயவடி வாகிப்
படியிற் சகல வினையழ மிட்டுச்
சீர்பெற வைக்கும் செல்வி யாகும்
பார்வதி பாதம் பணிந்திடே.



# 14

## அம்பாள்

# ஆபத் சகாய கவசம்

(இது 2-வது மகாயுத்த சமயம் சென்னையில பீதி அதி கரித்து சனங்கள காலி செய்த போது இயற்றப்பட்டு திருவல்லிககேணி ஆஸ்திக சபையில் 3—4—1942 முதன முதலாகப பாடப்பட்டது).

**ராகம்: புன்னாக வராளி**

கலியினில் மானிடர் ஆசைமி குந்து
கணவனை மீறிட மாதர்நி னைநது
கடவுளு மேதென ஏளன மிஞ்சி
கண்டவர் யாவரும விணடிலர் போமென
கணடது காதலும் மஙகையு மேயென
கனவிலு நனவிலு மதியையி ழந்து
கவடுகள் பலபல புரியநி னைநது
கணக்கி லாமலெ பணததை நாடியெ
கனத்த பாவம திழைதது மேபுவி
தனில்வினை மிகவாகி

கரவுடை நாடுகள் போரது கொண்டு
கடலிடை மேலொடு கீழிலும் வந்து
கலமவை நூறுட னுயிர மங்கு
கணடவி னுடியில் விணடவை மூழ்கிட
துண்டுக ளாகிட குணடுகள் வீசிட
கடலினில் மனிதர்க ளுயிரையி ழந்து
மதலைகள் வனிதையர் பலருமி தந்து
கணக்கி லாமலெ பிணத்தை மீன்வகை
களித்து மேயுணும் விதிககு ளாகிடு
கதியொடு புவிமீதே

பலவித சேனைகள் நேரெதிர் கொண்டு
பலவித ஆயுத மோடுதி ரண்டு
உதிரமு மாறென வோடவு மங்கு
மண்டைக ளாயிரம் விண்டிட தீயுமிழ்
குண்டுக ளாருயிர் கொண்டிட வீசியும்
வலுவுடை உரையொடு தழலுமிழ் கின்ற
பலவித யிரதமும விரைவொடு சென்று
வதைத்து யானையு மொழித்து பூமியி
லழுத்தி சேனையை நசுக்கி மானிடர்
பிணமலை யதுவாக

பறவைகள் போலவி மானமு மங்கு
பலபல வானுயர் வீதியில் வந்து
படியினில் மானிடர் பீதிய டைந்து
பண்டம தோரிட மைந்தரு மோரிட
மங்கைய ரோரி மென்றவாரோடிட
படியினி லுறைபவர் கதறிவி ழுந்து
முடியுட லுருபுகள் சிதறியு ருண்டு
பதைக்க பாணமு மெடுத்து வீசியெ
பலத்த தீயினி லனைத்தும் வேகவும
வெறிகொளு மிதுநாளில

தலமதி லேதுணை நீயென நம்பி
மலர்கொடு தாளினை பூசைபு ரிந்து
வருமடி யேனையு மோர்புய மின்றி
சம்ப்ரம மாய்வெகு சுந்தர வாழ்வது
தந்தெனை யாள்வது முன்கட னுமிது
சவுரிய மதுதரு பொருளது மின்றி
தரணியி லுதவிடு மொருதுணை யின்றி
தவிக்கு மேழையி னிடத்தி லேயொரு
வலத்தி லேபல புறத்தி லேயொரு
துணையது வெனவாகி

தனதொரு மகவினை தாயுமு கந்து
இமையென நிதமொரு காவலபு ரிநது
ஒருவித வினையுபவ ராதுமு னின்று
தங்குதல் போலெனை யனபுகொள வாயினி
சங்கடம் யாவுமொ ழிந்திடு மாறருள்
கருணையி லிணையிலி யெனவரு முனறன
இருசரண் மருவிடும் அடியனை யினறு
கணக்க வேநிதி கொடுநது மேயெனை
சகத்தி லேவெகு ப்ரசித்தி யாகவெ
உனதருள் புரிவாயே;

மலைமக ளாரணி பூரணி யம்மை
வலமிடம் நாரணி வாணியிருந்து
ஒருகொலு வாகிய கோலம டைந்தை
வணடின ரூபிணி சண்டினி யாமளை
குணடலி கோமளை விணடுபி ஞனவள்
மரகத வடிவுடை எழிலுடை நங்கை
நிருமலி பயிரவி பரசிவ மஙகை
அடுத்த சேயினை எடுத்து பால்தரு
பெருத்த நாயகி பரகரு பாநிதி
எனவரு மபிராமி

மதியறை சூடிய கார்குழ லம்மை
முழுமதி யாமுக மோடித ழினகண
உலவிடு மோர்நகை யோடு திகழ்ந்த
வணடது போல்விழி கொணடிடு மோர்சிவை
அணடமெ லாமருள் மங்கள நாயகி
மருவிடும் அடியரி னருகிலி ருந்து
வறுமையு மொழியவே பொருளது தந்து
இகத்தி லேயொரு பரத்தி லேசுக
மிழைத்து மாயையு மொழித்து மேயருள்
எனதுள்முறைவாழ்வே

ஐந்தாம் பாகம்

ஸ்ரீ காமாக்ஷியைநம

# தேவீ கிளித்தூது சதகம்

## தூது போவெனல்

சொன்னத்தைச் சொல்லுமொரு செல்லக்கிளியே—நான
சொல்லும்மொழி யம்மையிடஞ் சொல்லுகிளியே-அந்த
அன்னத்தைப் போலவொரு தூதுகொண்டுமே—என்றன்
அன்னையிட மென்னைப்பற்றிச் சொல்லு கிளியே. (1)

எண்ணவரி தானபவ மிழைத்ததினுல்—கிளியே
எண்ணவரி தானபல பிறவிபெற்றேன்—இனி
மண்ணின்மிசை மானிடனு மாகப்பிறந்தும்—அன்னை
வடிவினைத் தெரியா திருக்கலாகுமோ. (2)

காவிக்கழ விணையிடைக் களித்ததுபோய்—இந்தக்
காரிருட்பு வியினிடைக் கலங்கி நின்றே—மிகக்
கூவிக்கூவிக் கூவிமனம் சலித்தனன் யான்—என்றன்
குறைகளனைத்தும் பகர்வாயோ கிளியே? (3)

பாரிலிந்தப் பாலகனைப் பறக்கவிட்டோ—அம்மை
பரசிவ மயல் கொண்டு மயங்கி நின்ருள்?—இனிப்
பாரினிற்பி றந்திடவும் நான்மாட்டேன்—அவள்
பாதமதைத் தந்திடநீ சொல்லுகிளியே. (4)

பாடிப்பாடிப் பாடியிதைச் சொல்லு கிளியே—எனைப்
பாதமலர் மீதணையச் சொல்லு கிளியே—இதைக்
கோடிக்கோடிக் கோடிதரஞ் சொல்லு கிளியே—உனைக்
கோடிக்கோடிக் கோடிநமஸ் காரமிடுவேன். (5)

இடித்திடித் திடித்தம்மை செவிதனிலே—இதை
எடுத்தெடுத் தெடுத்துச்சொல் என்றன் கிளியே—புகழ்
படித்துப் படித்தவளின் பாதம் பணிந்தேன்—இதைப்
படித்துப் படித்துச் சொல்லு பச்சைக் கிளியே. (6)

பக்தர்க்காக வேண்டிப்பாரில் அவதரித்தாள்—ஒரு
வாக்கில்லாத மூகனுக்கும் வாககு மளித்தாள்—முனம்
பக்தன்சொலைக் காககவேணடிப் பாழிருள்தனைப்—பரி
வாகவேதான் நல்லநில வாக்கி நின்றாள. (7)

அழுதபிள்ளைக் காகமுனம் பாலுமூட்டினள்—தன்னை
அணடினபேர் யாவருக்கும் அபயநதந்தாள்—தன்னைத்
தொழுதிட்ட பக்தருக்குச் சுவையுமானாள்—தனித்
தூயமுதற் பொருளெனப பெயருங் கொணடாள். (8)

வாயில்லாச் சித்தருளக் கோயில்கொணடாள்—வேறு
வகையிலாப் பக்தரிடங் காவல்கொணடாள்—அவள்
தாயில்லாப் பிள்ளைதனைத் தடுத்தாணடாள்—எனச்
சாற்றுமொழி கேட்டிலையோ தங்கக கிளியே? (9)

கேட்டதைநீ அம்மையிடஞ் சொல்லவேண்டும்—எனக்
கேட்டுக் கொணடேன் உன்றனைநான வேண்டிக்
[கிளியே—என்றன்
வாட்டமதை யம்மைக்குநீ எடுத்துசசொலலி—என்றன்
வருத்தங்கள் தீரத்தருள்வாய் வர்ணக கிளியே. (10)

கனவதனில் வந்தாலென்றன குறைகூறவே—துளிக்
கவனமது மென்றனக் கிருநதிடாதே—அன்றி
நனவதனில் அம்மையெதிர் வந்திடாலோ—நான்
நவிலுவது மினனதெனத் தடுமாறுவேன். (11)

வாயில்லாக் குழவிதன் பசியறிந்தே—அனனை
மதுவுடை யமுதினைக் கொடுப்பதுபோல்—இந்தச்
சேயின்குறை யனைத்தையும அவளறிந்தே—அருள்
செய்தாலன்றிக் கதியில்லை சொலலு கிளியே. (12)

## அறியாமை கூறல்

வேதமொரு நாலும்சொல்லும் விதமறியேன்—கிளியே
மேலான சாஸ்திரங்கள் ஏதுமறியேன்—யோக
நாதநிலை கண்டுமது வுணடுமறியேன்—ஞான
நன்னிலைகொண் டென்னையா னறிய வறியேன். (13)

வாதங்கள் கூறிப்பிறரை மிஞ்சவறியேன்—அஷ்ட
வணிமாதி சித்துகளைச் செய்யவறியேன்—அம்மை
கீதங்கள்சங் கீதத்துடன் பாடவறியேன்—பிறா
கேடடுமகி ழக்கதைகள் சொல்ல வறியேன (14)

ஆடம்பரப் பூஜைதனைப் பண்ணியறியேன—நான்
அரியபெருந் தருமங்கள் செய்து மறியேன்—பல
வேடந்தனைப் பூணடுலகிற் பேசவறியேன்—கிளியே
வீரங்கள்கூறிப் பிறரை மிஞ்ச வறியேன. (15)

## அறிந்தவை கூறல்

அமலமா மொருசிந்தை கொண்டுலகிலே—என்றன்
ஆங்கார வேகமதை யடக்கிக் கொண்டே—அமமை
கமலையங் கயற்கண்ணி சாட்சியுள்ளாளே—எனக்
காரியங்கள் பலன்வேண்டா திழைத் திடுவேன்; (16)

அன்னியமாம் பெண்களென்றன் அன்னையேபோல்—மற்றும்
அன்னியபு ருஷருடன் பிறந்தார்போல்—பின்னும்
அன்னியவு யிர்களை நான் என்றனுயிர்போல்—எண்ணும்
அநுபவம் சிறிதுள்ளேன் அம்மை க்ருபையால்; (17)

என்றனுயிர் என்றனுடல என்றன்பொருளும்—இன்னும்
என்றன்செயல் என்றன்விதி என்றன் கதியும்—இனி
உன்றனது என்றே நிதம் அர்ப்பணம் செய்தே—இந்த
உலகமயற் கடந்திடச் சிறிதறிவேன், (18)

ஆத்மார்த்த மாயம்மையைப் பூஜைசெய்தே—அவள்
அருளினைப் பெறநிதம் வேணடிக் கொணடே—பர
மாத்மாவைக் கண்டுகொள்ளும் வகையருளித்—தாயே
மகனென்னை ஆதரிப்பாய் என்று வேண்டுவேன்; (19)

சாட்சியென யிவ்வுலகை யான்பார்த்து—ஜக
தம்பைசிவ சங்கரிக டைக்கண மலரின்—துளி
வீக்ஷணமுங் கிட்டுமோவென் றெந்தநாளும்—அவள்
வீறுகழல் நம்பியே நான் புகழ் பாடுவேன்; (20)

தாமரை யிலைதனிலே தங்குந்துளிபோல்—நான்
ஸமுஸாரக் கடலிடைத் தனித்து நின்றே—அவள்
நாமஸங கீர்த்தனமே நாளும்பகர்ந்தே—அவள்
நளினம லர்ப்பதமே நாடி நின்றே—நிதம்; (21)

## அம்பாள் துதி

வேதங்கள் நாலும்புகழும் பராசக்தியே—அதி
வீரமுட னறுபத்து நாலு பீடத்தில—உன்றன
பாதங்கள் விசேஷமாகிப் ப்ரதயக்ஷமாயே—பாடும்
பக்தர்தமை ரக்ஷிக்கவே வந்தவமமையே; (22)

## 64. சக்தி பீடங்கள்

கோலாபு ரத்துள்ளமகா லக்ஷ்மிதேவியே—அந்தக
கோகரணந் தனனிலுளள பத்ரகாளியே—ஒரு
நீலபர்வ தத்திலுளள நீலாமபிகையே—அரிய
நேபாள தேசததிலுள்ள குஹய காளியே; (23)

கேதாரத்தி லுறையும்ஸ்ன மாாககதாயினீ—மிகக
கீாததிபெறற மாதுபுர ரேணுகாதேவி—எனனை
ஆதரிததுப போறறுமனன பூரணிததாயே—அநத
ஆஷாடததி லமாகின்ற ரதிதேவியே; (24)

காமபீடமதிலவாழுங் காமாட்சித்தாயே—நலல
காசியவிமுக்த முறை விசாலாட்சியே—காஷ்மீர்
பீமபீட மதில்வாழும் பீமேஸவரியே—அந்த
விமாலேசப் பீ.முறை விஸ்வேஸ்வரியே, (25)

கமலாபீட மதிலவாழுங் கமலாட்சிதேவீ—கன
கலமதனிற் கீர்ததிபெற்ற வுகரா தேவியே—அந்த
விமலாபீட மதில்வாழும் பீமாதேவியே—விய
பிநாகுல பீட முற்ற ஸ்வயம்பவியே, (26)

ஸ்ரீநகரமுறை ஜாம்பு நதேஸ்வரியே—அரிய
திருச்சந்தர கலைவாழும் கௌசிகி தேவீ—அந்த
ஸ்ரீகிரியில சீலமுற்றச் சாரதா தேவீ—அந்த
ஸ்ரீரக்த தந்த்ரிகைவாழுந் துர்ககா தேவியே; (27)

இங்குலைய தனில் வாழும் ஜ்வாலா முகியே—சீன
தேசந்தனி லுள்ள நீல ஸரஸ்வதியே—அந்தச்
சங்குகர்ன மதிலுள்ள த்வனீஸ்வரியே—திருச்
சாகம்பரி வாழுமந்தப் பிராமரியே; (28)

சண்டமுண்டி ப்பீடமுறை தண்டினித்தேவீ—அந்தச்
சாங்கரிபீ டத்துமகா காளவமமையே—ஒரு
மண்டலேசப் பீடம் வாழுஞ் சண்டகி தேவீ—அந்த
மணிதவீப மதிலவாழும் புவனேஸ்வரியே; (29)

அரிச்சந்த்ர மதில் வாழுஞ் சந்த்ரிகா தேவீ—அந்த
அமரேசப் பீடமுறைச் சண்டிகா தேவி—வெகு
அருமையான புஷ்கரத்துக் காயத்ரி தேவி—அந்த
ஆம்பிராத கேஸவரத்துச் சூக்ஷுமாதேவீ; (30)

அர்த்தகோடி கையிலுள்ள ருதராணி தேவீ—அந்த
அடகாசப பீடமுறை மகாநதகையே—ஒரு
உதபலாக்ஷீபீடம வாழுஞ சுவாஞட்சியே—திருத
தூலகேஸவ ரததிலவாழும ஸதூல கேஸவரி: (31)

காலஞ்சத்தி லுள்ளவொரு காளிகா தேவீ—அநதக்
காமயோனிப் பீடத்திரி புரபைரவீ—வெகு
சீலமுடன கயைவாழும மஙகளாம்பிகே—அந்த
ஸ்ரீநைமிச வாஸியான லிங்கதாரணீ (32)

மாகோடத்தில் மகிமைமிகு மகுடேஸ்வரியே—திரு
மகாலய மதிலுள்ள மகாபாகையே—அந்த
மகாசலத் தேஜோமய யோகேஸ்வரியே—திரு
வஸ்திராபு ரத்தில்வாழ் பவானி தேவியே· (33)

வைத்திஞத மதில்வாழும் வகலா தேவியே—அந்த
மத்யமா பிதத்தில்வாழ் சர்வாணி தேவியே—அந்த
பத்ரகர்ணி கையிலுள்ள பத்ரீ தேவியே—ஒரு
பைரவத்திற் கீர்த்திபெற்ற பைரவித் தேவீ; (34)

குருக்ஷேத்ரந் தன்னில்வாழும் ஸ்தாணுப்ரியையே—திருக்
குரண்டலப் பீடத்திரி சந்தியா தேவீ—அந்தப்
புருகதை பீடம்வாழும புஷ்கராடசியே—ஒரு
பூதிஸதான முறைப்பரா பூதியமமையே; (35)

வேதாரணய மதிலவாழுந் துர்க்கா தேவியே—திருப்
பிரபாச பீடமவாழும் புஷ்கரேக்ஷணீ—யாரும
ஓதவரி தானககசி யேகாம்பரியே—அந்தத்
துளஜாபுரந தன்னிலுள்ள துர்க்கா தேவியே; (36)

விநதியா சலததுறைநி தமபா தேவியே—அதி
வீரமுடன சபதஸருஙகர வாழுந தேவியே—வெகு
அநதமுள ஐப்யேஸவரத திரிசூலியே—சக
லணடலத்தில வாழுமபிர சணடா தேவியே; (37)

மகிமையுடன மதுரைவாழும மீனாட்சிததாயே—அதி
மகததான ஸ்தாணுபீட ஸ்தாணவீதேவியே—அந்த
நகுலந்தனனிற் கீர்ததிபெற்ற நகுலேஸவரியே—மெய
ஞானிக ளுளததமாநத பரமேஸவரியே; (38)

## இதர பீடங்கள்

இநதச்சகதி பீடமல்லாற பின்னுமபல வாம—திரு
க்ஷேத்திரஙகள வாழுஞ்சிவ காமியமமையே—எந்தன்
கந்தாதமைத கநதருளும பாரவதி தேவீ—அநதக
காருணய லாவணயமிகக லலிதாமபிகையே; (39)

அணடமபல வீனறவகிலாணட நாயகீ—திருக
கடவூரிற கீர்ததிபெறற அபிராமியே—கறைக
கணடனைத திருமணமுங கொணட கௌரியே—மயிலைக்
கபாலியைப பூஜையிட்ட கறபக வலலீ, (40)

திருவொறறியூர் வாழுமவடி வுடையம்மையே—அநதத
திருவோற்றா ருறையுமபால குஜாம்பிகையே—அருந்
திருவானமி யூரிலவாழுஞ் சொககநாயகீ—அநதத
திருககழு குனறத்திரி புரசுநதரீ, (41)

திருவருணை வாழ்பீத குஜசமபிகையே—அந்தத்
திருபபாதிருபபுலியூர தோகை யமபிகே—அருந்
திருககோயி லூரிறபருகன ஞயகியம்பா—தில்லைச்
சிதம்பரம் வாழுஞ்சிவ காமி யம்மையே; (42)

திருவிடைம ருதூர்வாழும் மூகாம்பிகையே—அந்தச்
சீகாழியில வாழுநதிரு நிலநாயகீ—அந்தத
திருநாகையில வாழுகின்ற நீலாயதாக்ஷீ—அருந்
திருநெய்த தானமுறைகின்ற பாலாமபிகையே; (43)

மங்கையற் கரசி மஙகை நாயகியம்பா—அந்த
மைவாாகுழ லமமைவாழ வநத நாயகீ—வெகு
சிங்கார வலலிமாணிகக வலலியமமையே—திருச
சிவானந்த வலலிதசே னமிர்த வல்லியே; (44)

வண்டார்குழ லம்மையூற லுமையம்மையே—திரு
வருணஜடை யீஸவரியே அபயாமபிகையே—திரு
வெணகாடினிற பரமமவிதயா நாயகியமபா—திருந
வேறகணணி யம்மையகில லோகாமபிகையே, (45)

கருணாமபிகையே அரிய காநதிமதியே—திருக
காளததிஞா னபபூஙகோதைக கலியாணியே—அருந்
தருமஸம வாாததனீபா வதவாததனீ—பெருந
தபோதனியே அரிய நீல ரஞசனியே, (46)

கனகாம்பிகையே மதுர வசனாமபிகையே—அருங
கனனியா குமரிஸோம கலாநாயகீ—கதமப
வனாமபிகையே திரி புராமபிகையே—அநத
மங்களாமபிகே அரிய சௌந்தராமபிகே. (47)

கோகி லாமபிகே சுகநத குந்தளாமபிகே—அரிய
கோமதியம்பிகே பருகத குசாமபிகையே—அந்த
மோகாமபிகையே அரிய வேதாமபிகையே—அந்த
யோகாம்பிகையே மெய ஞானாமபிகையே; (48)

வேதமுடி யாகுமொரு ஆதிபொருளே—அநத
மேருசகர பிந்துவாழுந திரிபுரையே--உனறன்
பாதபக்தி கொணடோாகுடி காககுந்துணையே''—எனப்
பாடிப்பாடி யுருகுவது மட்டும அறிவேன் (49)

## அம்பாளிடம் சொல்லும் விஷயங்கள்.

இவையெல்லா மமமைககுநீ எடுத்துசசொல்லி—அவள்
எழிலமிகு பதமதைக கொடுககச் சொல்வாய்—தவச்
சுவைமிகு பதவிபெற் றிகபரமும்—நான
சுகம்பெற வருள்செய்யச் சொலலுகிளியே. (5

தனித்துவழிக் குற்றதுணை யெனவாகியே—எனைத்
தடுத்தாண்டருளச்சொல்வாய் தாயிடம நீயே—அந்த
மனிதப்பி றவியது போகு முனனமே—பர
மாதம ஞான மதருளச் சொல்லுகிளியே. (51)

என்றனபகை யனைத்தையு மொழிககச் சொலவாய்—
இன்னும்
என்றன்குற்ற மனைத்தையுமக்ஷமிக்கச் சொலவாய்—
[இங்கு
என்றன்செய லுககுத்துணை யிருககச சொலவாய்—திவ்ய
தெரிசன மெனககுத்தந தருளச் சொலவாய. (52)

கூற்றுவனைத துரத்தியே காததிடச் சொல்வாய்—இங்கு
குருவென வநதெனககும அருளசசொலவாய—உளக
கூற்றுக ளனைத்தையுமே ஒழிககச சொலவாய—சதவ
குணமே நான் கொணடுவாழ அருளசசொலவாய. (53)

## கிளியை வேண்டல்

அருமையாய் அம்மைவலக கரமதிலே—கிளியே
அமர்கின்ற வுனககிதை அம்மைக்குச் சொலல—இங்கு
ஒருதுளி கஷ்டமது முனககில்லையே—இனி
ஓடிப்பறந திதனைநீ சொல்லு கிளியே. (54)

ஒய்யார மாகநட மாடுகிளியே—வெகு
உல்லாஸ மாகவிளை யாடுங்கிளியே—அந்த
ஐய்யான னுஙகருது மன்னை யருகில—எனறும
அழியாதி ருநதுகானம் செயயுங கிளியே. (55)

முப்பததுமுக கோடிதேவா போற்றி செய்திடும— அநத
முழுமுதற் பொருளாகு மீனுடசித்தாயை—மறை
செப்பற்கு மரியதான சீலமுளளாளை—நிதம
சேர்ந்துவிளை யாடுபாகயம பெறறகிளியே (56)

அருணகிரி யானவநு பூதிககிளியே—எனறன்
அமமையப யககரத்தை மேவுங்கிளியே—வெரு
அருமையாக விருககினற அநத விடத்தே—என்னை
அணுகிட வுன்னைப்போல வாககிடாயோ (57)

உனனைப்போல வாககமன மில்லையானால—இனி
யோசித்து நீ திகைத்திட வேணடாம் கிளியே—என்னை
உன்கழுத்தின மணிபோலக் கட்டுவாயானால் —நாண
உன்றனது பூதிதனைப் பெற்றுவிடுவேன்; (58)

கழுத்தி லென்னைக் கட்டிக்கொள்ளக் கஷ்டமிருந்தால்—
[என்னைக்
காலிலொரு தாளமெனக் கட்டிக் கொள்ளுவாய்—
[அன்னை

அழகதனைக் கண்டபர மானந்தத்திலை—வெகு
ஆனந்தமாய நிர்த்தமிடும் சந்தக்கிளியே, (59)

அப்படிநீ செய்தாயானல் பச்சைக் கிளியே—அங்கு
அரியகலை வாணிவீணை வாசித்திடவும்—அந்த
அற்புதத் திருமடந்தை கருது வாசிக்க—நான்
அருமையுடன் தாளமிட்டு ஆடிக்களிப்பேன், (60)

அதுவுமே முடியாதெனச் செப்புவா யானல்—வெகு
அரிதாய்ம லாநந்தமொரு புஷ்பமெனவே—என்னை
இதமுடனே அம்மையிடம் எடுத்துச் சென்றே—அவள்
இங்கிதப்ப தந்தனிலே விடுத்துச் செல்வாய். (61)

பச்சைக்கிளி யென்றம்மைதன் பச்சைக்கரத்தில—வெகு
பக்ஷமுடன் பாடிநிர்த்தம் ஆடுங்கிளியே—அந்த
பச்சையழகிக் கருகில நீயிருந்தபோ—துன்னைப்
பார்க்கமுடி யாதவளோ டொன்ருயிருந்தாய். (62)

என்னபாக்யம் பெற்ருய் பஞ்ச வர்ணக்கிளியே—அம்மை
எழிற்கரந் தனனிலேநீ திகழ்ந்திடவே—அவள்
சொன்னமொழி யெல்லாம நீயே சொல்லுகிளியே—
[உன்றன்
சொல்லுமவள் சொல்லுமொரு சொல்லுதா
[னன்ருே? (63)

## அம்பாள் திருவடிவு

அழகேயுருவாய்வந்த அருமைக் கிளியே—அம்மை
அழகினைச் செப்புவாய் நீ பாடிக்கிளியே—அவள்
அழகிலொரு சிறிதேமன மதனுக்குண்டோ—அவள்
அடியிணைச் சிவப்புமந்த தாமரைக்குண்டோ—
[அவள் (64)

நுதலழகு அந்தமுழு மதிக்குமுண்டோ—கருங்
குழலழகு அந்தக்கரி வண்டுக்குமுண்டோ—அவள்
இதழினெரு சிவப்பந்த கோவைக்கு முண்டோ—அவள்
இடையின்மெலி வந்தவொரு வல்லிக்கு முண்டோ?
[அவள் (65)

புருவத்திற்கு நிகரிந்த்ர தனுசு மாகுமோ—அந்தக்
குமிழநாசி யழகினைச சொலலவலதோ—அவள்
இருவரிசைப் பற்களமுநதுக கோததசரமோ—அவள்
இருதனவி சேஷமதைச சாற்றவலதோ?—அம்மை(66)

முததுநவ ரத்னமணி மாலையணிநதே—நலல
முலலமலலி சணபகபபூ ரோஜாமாலையோ—டந்த
நத்துடனே போட்டியிட்ட தாடகஙகளும—உயர்
நகைகளும் பூணடுநறபொன் ஞடையுடனே (67)

இரத்தினம குடமதில மதியணிந்தே—அவள
இளையகழுத திறறிகழ்நத மாஙகல்யமுடன—மிகச்
சுருஙகு மிடைதனிலே ஒட்டியாணமும—அநத
ஜோதிகக ரங்களிலே வளையணிநதே, (68)

பாதககம லங்களிலே பளிச்செனவே—பரவும
பாதஸரங் களும மணிக கொலுசுகளும—சிலம்பு
நாதங்களுக கொததவுயர் மெட்டிகளுமே—அவள்
நளினமிகுந தளிரவிரல் களிற்பூணடுமே, (69)

## குறைகூறும் சமயம்

இந்தவிதஞ் சீருடனே இருபககமும—அநதச்
சீதேவியும நாதேவியுஞ் சிஙகாரமாக—நல்ல
அந்தமுடை ரமபையாகள நடனமிடவே—வெகு
அருமையுடைத திருககொலு கொணட நேரத்தில்,(70)

பரமசிவன் பககததிலே மேவிநிற்குமபோ—தந்தக்
பாலகுகன அமமையடி மீதிருககுமபோ—தந்தக்
கரிமுகனுங் கண்டுகுதித் தாடிநிற்கும்போ—தவள
காமதேனு வோடுவிளை யாடு நேரததில, (71)

கருவளைக்க ரத்தாலுனைத் தடவியிடுமபோ—தவள்
கருணைக கடாக்ஷமுனக களிததிட்டபோ—தென்றன
சரிதைகளை யம்மைககுநீ யெடுததுச சொல்வாய்—கிளியே
சத்தியமாயச் சொலலவேணும் ஜாநிக கிளியே (72)

## சொல்லும் வகை

இங்குமங்கும் ஓடிச்சொலலு நேரிலே சொல்லு—நின்று
இங்கிதமாய் மிகமனம் இரங்கிச் சொலலு—கரம்
தங்கியிருக்கும்போது தணிந்துசொல்லு—செழுஞ்
சரணக மலங்களைத் தடவிச் சொல்வாய்' (73)

ஓங்காரத் தொனியிட்டு ஒடுங்கிச் சொல்லு—ஒரு
ஹ்ரீங்காரத் தொனியிட்டு நெருங்கிச் சொல்லு— அந்தக்
காங்கேயன் ஞமத்தைக் களித்துச் சொல்லு— வெங்
கறையுண்டன் ஞமத்தைக் கூவிச் சொல்லு, (74)

நாடியவள் விக்ஷணத்தை நாடிச்சென்று—அவள்
நன்மைதரு சன்னிதியிற் பறந்துசென்று—புகழ்
பாடுமென்னைக் கரையேறப் பரிந்து சொல்லு இதைப்
பறந்து பறந்து மிகப் பரிந்து சொல்லு, அம்மை (75)

## அம்மை வேறு கவனமுற்றல்

பரமசிவன் மீதுகாதல் கொண்டதினலோ—அன்றிப்
பாலகுகன் மீதுகொண்ட பாசத்திஞலோ-பிள்ளைக்
கரிமுகனின் மீதுகொண்ட ஆசையிஞலோ—அண்ணன்
கார்முகி லரங்கன்விசு வாசத்திஞலோ—அன்றிக் (76)

கலைமகளின் திருமகளின் நேசத்திஞலோ—அந்தக்
கலகமிடு நாரதரின் கானத்திஞலோ—பெரும
அலையெனவே மோதுமன்பர் கோஷத்திஞலோ—என்றன்
அபயக்குர லிடந்தெரி யாததிஞலோ, (77)

இத்தனைசொல் லியுங்காது கேளாதுபோனல்—அம்மை
செவ்வித முருகிற்சிற கடித்துப்பற—அன்னை
மெத்தவும் விழித்துக்கோப மதனைக் கொண்டால்—அதைக்
கோவையோ வென் றய்யமுற்றேன் என்று சொல்லு
[வாய் (78)

அம்மைமிகக் களித்துனை மேலுங் கேட்டால்—இந்த
அடியனைப் பற்றிநல்ல வார்த்தைகள் சொல்லி— என்னை
இம்மையிலும் மறுமையிலும் செம்மையளிக்கும—பதம
இணைதனைக் காதிடவே யிப்படிச் சொலவாய் (79)

## சொல்லு முறை

பாரினிலே வொருபாலன் உன்னைப் பாடிஞன—அதைப்
பார்த்துமே நான் கேட்டுவரப் போயிருந்தேன—அவன்
பேரதனைக் கேட்டாலுன்றன் தாஸன் என்கிறன—அவன்
பெரியோரைக் கண்டாலுன்றன் பெருமை கேட்கின
[றன்—அவன் (80)

கனவிலுமோர் நனவிலுமுன் சேவை நாடுறன்—எந்தக்
காலத்திலும் உன்றன்பாதம் போற்றி செய்கிறன்—ஒரு
மனதுடனே உன்மந்திரஞ் ஜெபித்திடுறன்—அன்றிப்
பக்தருடன் சேர்ந்து கொண்டு பஜித்திடுறன்—
பின்னும். (81)

உன்கதைகள் கேட்கமிக வாசையுள்ளான்—நிதம்
உன்றன் கோயில் சூழமிக வானந்தங் கொள்வான்
[—தாயே
கனவிலநீ வந்தாலே மிகக் களித்திடுருன்—உன்றன்
கருணுக டாக்ஷமதை நாடி நிறகிருன—அன்றி (82)

உன்ருலேதான் இவவுலக மென்று சொல்கிருன்—துணை
உனனையல்லாற் பின்னையாரைக் கொளவேனெனகிருன்
—மேலும்
உன்கணவன, உன் தனயன், உன்னணணனையும்—உனறன
தோழியாகள், பக்தரையும் போறறிசெயகிருன, (83)

இல்லறங்க ளுற்றிருநதே அகத்துறவாய்—உன்னை
இடைவிடா நினைக்கிருன கருணைபெறவே —அவன்
நல்லறமது வென்றுமே நலலறஞ செய்து—உனனை
நாடிபபாடிக் கோடிநமஸ் காரம செய்கிருன, (84)

கணடிப்பாக வுனறனருள கூட்டவேணடும்—எனக
காலடியைப பிடிததுமே கேட்டுக கொணடான—அவன
வேணடுதலை யுனறனிடம சொலலுகினறேன—என
வேகமாக வநதேனுனறன் சனனிதியிலே, (85)

ஆகையா லமமையே நீயே மனமிரஙகி—அநத
அடியனுககு னதருளைத தநதருளுவாய்—அவன்
சாகாதிநதப புவியிலே ஜீவனமுகததையை—சகல
சௌபாககியமும பெற்றிடவே கருணை கூாவாய் (86)

நமபினேரைக கைவிடநீ மாட்டாயாதலால—அவனை
ஞானம பெறக கைவிடாதே காததருளுவாய—
[கொஞ்சம்
வமபு செயதே னெனறுனககுக் கோபம் வேணடாம-பகதன
மனநிலை சொலலவே நான வநதேனெனறு சொல; (87)
இனனும் பல விதமாயும இங்கிதமாயும—சொலலி
என்றனனை யருளினைக கூட்டி வைப்பாய—அம்மை
சன்னதி மகிமைகணட சீலககிளியே—தனம
தன்தனம தநதோ மெனவே யாடுங்கிளியே. (88)

## கிளிப் புகழ்

கிணின்கிணின கிணினகிணின கிணினகிணென்றே—அம்மை
கீர்த்தனஙகள் பாடிப்பாடி யாடுங்கிளியே—திருப்
பணியெனவே அம்மைதிநப புகழைநிதமும பாடும்
பக்தர்தமை முத்திபெறக் கூவுங்கிளியே. (89)

கூடிக்கூடிக் கூடிநிதந் திருப்புகழை—மிகக்
கூவிக்கூவிக் கூவிப் பாடுந் தொண்டரைநாடி—எட்டா
மாடியிலே வேலனம்மை மடியிலுள்ளான்—இங்கு
வாரும் வாரும் வாருமெனக் கூவுங்கிளியே. (90)
முருகனருள் பெற்றாலம்மை யருள் எளிதே—என
வுலகுக்கி சைக்க வம்மைக் கிளியானேயோ?—எட்டு
மிரண்டுங் கொண்டிருவரையும் போற்றி செய்வீரேல—
[கிட்டும்
இகபர சுகமெனக் கூவுங் கிளியே. (91)
சுகபரம மரைக்குருவாயக் கொண்டதினாலே—இந்தச்
சுகனென்னும் பேரினைநீ பெற்றாய் என்றால—அவா
சுகநிலை யின்னதெனச் சொல்லநீயே—நல்ல
குருவாய வந்தருளவாய்நீ சோலைக்கிளியே, (92)

## கிளியின் பெருமை

பாலகுகன் தந்தைக்குப தேசமிட்டபோ—தங்கு
பார்ததம்மையின் கையிருந்து கேட்டகிளியே—அதைச்
சீலமுடன் எனக்குப தேசமிடவே—என்னை
சீடனெனக் கொண்டிடுவாய செஞ்சொற்கிளியே (93)
சிவஞான மனங்குளிரச் செபபுங்குகனின—சிந்தை
தித்திக்கத் தித்திக்கச் சந்தத் திருப்புகழைத—தினம்
குவித்துக் குவித்துச சொல்லிக் கிளியாகிநீ—அம்மை
குளிரக் கரந்தனிலே குந்தித்து நின்றாய. (94)

## கிளியைப் போற்றல்

தேவாதி தேவாகளுமே காணவறியா—அந்தக
சிவஞானப் பதவிபெற்ற சீலக்கிளியே—உனைப்
பாவாலும் பணியாலும் போற்றி செய்குவேன்—அம்மை
பாதவருள் கூட்டிவைப்பாய் பைம்பொற் கிளியே (95)
எந்நாளும் போற்றி செய்வேன் என்றன் கிளியே—கொடிய
எமபயந் தீர்த்தருள்வாய் செம்பொற் கிளியே—நான
நன்றாகப் பாடியுனைப போற்றி செய்குவேன—சிவ
ஞானமதைத் தந்தருளவாய் ஞானக் கிளியே. (96)
பஞ்சவாணத் தாருமம்மை பதஞ்சேரலாம்—எனப்
பஞ்சவாணங் கொண்டனையோ பச்சைக்கிளியே-அந்தக்
கஞ்சிகா மாட்சியருள் பெற்றிடமுனம—தேவர்
கானமதில உனவடிவு கொள்ளவில்லையோ? (97)
தங்கக் கிளியே எனக்குச் சொந்தக் கிளியே—முனம்
அருணகிரி யாகிநின்ற சந்தக் கிளியே—வெகு
துங்கக் கிளியே கயற்கண மங்கைக் கிளியே—அருள்
பொங்குகிளியே கொண்டை கொண்ட கிளியே. (98)

சுந்தரிதன் பதமதனைக் காணவேண்டில்—குரு
    சொன்னத்தைச் சொல்லத் தெரிய வேணுமன்றோ
                                                                                —அந்த
சுந்தரக் குணமதுவே எனகருத தந்து—யான
    சுகம்பெற வருள் செயவாய் ஜோதிக கிளியே (99)

சோலைக் கிளியே எனது பாலைக் கிளியே—வெகு
    தூயக கிளியே துரிய வேளைக் கிளியே—ஞான
காலைக கிளியே மோக மாலைக கிளியே—எனது
    காயக கிளியே உள்ள மாயக கிளியே (100)

## வாழ்த்து

வாழ்கவேநீ வாழ்கவேநீ வாகைக் கிளியே—பல
    வர்ணங்களுங் கொண்ட வெகு மகிமைக கிளியே
                                                                                —இன்னும்
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க வாழ்க கிளியே—அம்மை
    வடிவுடைக கரநதனிலே வாழ் கிளியே



ஆறும் பாகம்

# ஸௌந்தர்யலஹரீ

(தமிழ மொழி பெயாப்புப் பாககள்)

சக்தி யுடனசிவன சோந்துல கீன றனன
சக்தியின றிச்சிவன சறறு மசைவனோ?
அத்த னரியயன் போறறுமெந தாயுனனைப்
பக்திகொண டேததமுற புணணியம வேண்டுமே. 1

உன்பாதத் தூளிக ளொனறுகச சேர் ததிட்டுப
பண்பாகப பஙகயன பார்கள படைத்திட்டான
அனபாகத் தாஙகமால ஆயிரஞ் செனனியால
சங்காரித் தேநீறு பூசினன சம்புவே. 2

ஞானச் சுடராகி மாயை தவிாத்திட்டும்
ஈன மதியாககுச் சிததந தெளிவிததும
தீனர் களுக்குசசிந தாமணி யாய்பபவ
மானசன் மககட லேததுமத் தூளியே. 3

வரமு மபயமும வானவா தங்கள்
கரமுத திரைகொணடு காட்டுவ ரனறிச
சரணங களாலவை தநதருள உனறன
கருணைக கிணையுணடோ கஞ்சிகா மாக்ஷியே. 4

தனனை நிதந்தொழு மனபர்க திதஞ்செயும
உனனைப் பணிநதுமால மோகன ரூபியாய்
முன்னஞ் சிவனை மயககினான மாரனும
தனனை முனிவருஞ் சேவிககச் செய்தானே. 5

கடைககண ணருளாலக் காமன் தனிததே
நடததி ரததனெறல நாணளிப் பூவிற்
பிடிதது வசந்தன வரப்பஞ்ச பாணம்
விடுத்துல கெல்லாமே வெற்றிகொள் வானே. 6

அங்குசம் பாசமும் ஐம்புட்ப பாணமும்
செஙகரும் புச்சிலை யுங்கொண் டிடைகொஞ்சும்
தங்கமுத் தொட்டியா ணம்பூணடு மெங்கள்முன்
திங்கள் முகத்துடன் தோன்றுவாய் தேவியே. 7

அற்புத மான வமுதக் கடலிடைக்
கற்பகஞ் சூழ்மணித வீபச்சிந் தாமணி
யிறசிவ பஞ்சத் தரன்மடி மீதொளிச்
சிற்பரை யின்சேவை செய்தவர் சொற்பமே. 8

ஞாலம் புனல்கனல் கால்வீசும் புங்கொண்ட
மூலம் முதலாறு வாதார முந்தாணடி
சாலச் சகத்திரத் தாட்சும லந்தன்னிற்
கோலச சிவன்கூடும் குண்டலினித் தாயே. 9

கூடிக் களித்தவுன் பாத வமுததில்
நாடியெழுபத்தீ ராயிரந் தோயத்தபின்
ஓடிமுன போல வுறங்கமு லந்கனனைத்
தேடு மராநிகாக் குணடலி னிததாயே. 10

சக்தியி னைந்துஞ் சிவனது நான்குடன
சககிர மொனபது மெணதளம் பத்தாறும்
அததளம் பூபுரம் மேகலை மூ ருமுன்
சக்கிரக கோணம்நாற் பததிறு லாகுமே. 11

கிரிமக ளுன்னெழிற் கேற்றபொருள் தேடிப்
பிரமன முதற்கவி வாணரு மோய்ந்தார்
அரியவுன் சீரும் அடையவிண் மாதர்
அரனுடன் ஐக்கிய மாக நினைப்பரே. 12

லீலை யறியாக் குருபிக் கிழவனும
பாலை கடாக்ஷமும் பெற்றிடிற பாவையர்
சீலை நெகிழபபைங் கூந்த லவிழநதிடுங்
கோலத் துடனவன பினனம் விரைவரே. 13

மூலமைம் பத்தாறு நீரைம் பதிரண்டு
மேலறு பத்திரண டக்கினி ஐமபததி
ஞலுகால் வானெழு பததிரண டாக்கினை
நாலறு பத்துக் கலைமேலுன் பாதமே. 14

அரைமதி சேர்முடி அம்புலி மேனி
வரமு மபயம்வெண மாலையும நூலும்
கரமொளிர்த் தாயை ஒருதரம போற்றிற்
பெருகிடுந் தேனினுந் தித்திககும வாக்குமே. 15

கவியுளத தாமரைக் காதித்த ஞகுஞ
சிவையுனைச் சேவித்தோா சிங்காரம பொங்குஞ்
சுவைமிகும் வாணியின் வாககூற்று நாளுஞ்
செவியுறுஞ் சீலர் மகிழ்வுறச் செய்வரே. 16

வசனீ முதலாய வாகதேவி சூழ
வசிககு முனைதமொழும் மாநத ருலகில
இசைமகட செமமணம வீசபபா வாணர்
வசனமு டனபெருங் காவியஞ செய்வரே. 17

பதியும விசுமபுஞ சிவககசசெய் திட்ட
உதிககு பருணனை யொகருஞ்செம மேனி
நிதமுந தொழுவோரை ஊாவசி போன்ற
விதவித மாதரும வேணடித தொழுவரே. 18

உன்காம ராஜபீ ஜததைஜ பித்திட்டு
உன்பாதமேததிடு முததமர் நித்தமும
பணபாக முப்பாரின பாவையா அனபுபெற்
றினபாக வாழ்வரே எனனருநதாயே. 19

சநதிர காந்தப் பதுமைபோற் பாவிதது
வநதித துனைநித்தம் வாழத்திடு மன்பர்கள்
எநதச சுரங்களும போககவல் நோககுடன்
நஞ்சர வுககுக கருடனபோ லர்வரே. 20

மினனற் கொடிபோற் சகத்திரக் கஞ்சம்வாழ்
அனனையுன பாதத தமல மனதுடன
தனனையும போக்கித தவஞ்செயு மன்பர்கள்
இனன முதவெள்ளத் தென்று மிருப்பரே. 21

பாாத்தருள எநதாய் 'பவானிநீ' யெனபவர்
ஆர்ததிகள தீர்ததிட்டு மிநதிரன் மாலயன
நோத்தி யுடனவேணடும் சாயுச்ய மீநதருள்
கீாததி மிகுநதேவி ஸ்ரீ சகர வாசியே. 22

நெற்றிக்கண பாதி மதிக்கனக் கொங்கையாற்
சறறு நெளிந்த இடையதும நோககிடில்
பறறு மிடம்போதா தசசிவன் பாகமும்
முற்றும் பரவிச் செழித்ததுன் செமமையே. 23

ஆக்கும் பிரமனுங் காக்குந் திருமாலும்
நீககுமு ருததிரன் மூவா லயித்திடக்
காககும் மகேசனும் ஒன்றுஞ் சதாசிவன்
ஆக்கநின பூருவில லாக்கினை கேட்பனே. 24

பங்கயன் மாலும பரமனும் கூப்பியுன்
பங்கயப் பாதங்கள் தமமுடி வைப்பரால்
பங்கய மாமுன்றன் பாதங்கள் போற்றிடில்
பங்கயன் மால்பர மன்பூசை யாகுமே. 25

பங்கயன் வாடும்நா ளந்தகன் வீழும்நாள்
சஙகுடைச செம்மால் லயித்திட் டிருககுநாள்
பிங்கல னிநதிரன் மாறும் பரளயநாள்
மங்கலை யுனனேடு ஆடுவன ாசனே. 26

எனசொல்லுன் மந்திர மென்பணி முத்திரை
எனகதி நினவலம என்னுண வுனனேமம
என துயில நின்சேவை எல்லா முனதென
எண்ணஙகொண டேத்த விசைந்த நின்பூஜையே. 27

மங்கள மீயு மமிர்தமே யுண்டாலும்
பங்கய னிந்திர ஞர்லய மாகுவர்
சங்கரன நஞ்சுணடும் நாளும நிலைப்பதும
சங்கரித் தாயேநின தாடங்க மாண்பன்றே! 28

சீலை நீயோடிச் சிவனை யழைக்கையில்
''மாலின முடியிது வானோர் முடியிவை
காலிற் படாது செலதாயெ''னச் சேடியர்
சாலப பரியுஞ்சொற் கோலநற் கோலமே. 29

சீலம மிகுநதவுன செஞ்சரண் நினறெளிர்க்
கோலவெண சிததிகள சூழுன்னை வேறினறிச்
சாலத் தவஙகொணடு தானுககு கணடிடிற்
காலத்தீ யனனவாக காலததி காட்டுமே 30

எட்டெட்டுத் தந்திர மீந்தபின் னீசனா
மட்டிக ளாயிங்கு மாந்தா மயங்கவே
கட்டுப பட்டம்பிகை யிட்டததுக கேயவர்
எட்டுட னேழாகும ஸ்ரீவிததை தந்தாரே. 31

கஏவும்ஓ காரஈங் காரல காரஹ்ரீம்
ஹஏவும் ஸகார ககார ஹலஹ்ரீமும்
ஸஏவும ககாரல காரஹ்ரீ முஞ்சோந்து
காதியாம் பஞ்ச தசியாமுன் மந்த்ரமே, 32

காமபீ ஜமபுவ னேச்வரீ பீஜமும்
க்ஷேமமாய் லக்ஷ்மீ பீஜமுனே சேர்த்துன்
நாமச்சிந் தாமணி கொணடுச் சிவாகனியில்
ஓமமுஞ் செய்வருன் னுத்தம பக்தரே. 33

சிவனுட னென்றுஞ்ச மானமுங் கொண்டாள்
நவவித வ்யூகமும் அம்பிகை கொண்டாள்
சிவசகதியே சேஷன் சேஷியு மாமால்
சிவனுமச் சக்தியு மென்றுமொன் றுமே. 34

சங்கரி முக்குணக் கண்கள்மூன் றுஞ்சீராய்ச்
செங்கண் கருங்கண்நல் வெணமை தருங்கண்ணுய்
பங்கயன் மாலுட னீசனை ஈன்றிடப்
பொங்கும குணமூன்று மாகவே தோன்றுமே. 53

வெணணிறச செந்நிறக் கார்நிறக கணகளால்
புணணியத தீரத்தனுசெஞ் சோணமமைக காளிநதீ
வெணணிறக கஙகையு மெம்வினை தீரக்கவே
எணணி யருளினுய எநதா யிதுமெய்யே. 54

ஆக்குவாய் கணதிறந தணட மனைத்தையும்
நீககுவாய் மூடிககண நீயிமைப போதினில
ஊககக முங்கொணட துன கணணிமை யெனறுமே
காககவே கொடடாமெதன றாகிததே னமமையே. 55

காதோ டளாவிய கணகள தமைப்பற்றி
ஏதோ கோளசொல்லுமெ னககயல நீரபுகும்
சீதேவி நற்பகல் நீலோத் பலம்நீத்து
மாதா வுனகஞ்ச மலாககண புகுவாளே. 56

காட்டிலும் நாட்டிலும காயும மதியேபோல
தேடடமில லாததீனச சேயெனை யுனகணணின்
நாட்டததி லாழததி நலமுநதந திடடாலுன
மேட்டிமை குனறுமோ மீனுக்ஷி யமமையே 57

நீளும மலாககணணும் நேராயச செவிசேர
வாளைநேர்ப பொட்டுபர தேசமும நோககிடில
வாளி மலாப்பூட்டி மனமதன பாரெலலாம்
ஆளவே கைககொணட விலலொககு மெந்தாயே. 58

கனனங்க ளில்தாட கங்கள்நாற் சகரமாய்
மின்னுமுன் செம்முகந தேரான வீரத்தால்
பொனமதிச சகரம புவிததேருங் கொளளரன
தனனேடும போரகொளள முநதினன் காமனே. 59

பாணியால் மொணடுன்றன் பாலமொழி யுணடுண்டு
வாணி தலையசைக் குமபோது காதினில
பூணும் குழைகள ஐணஐண வெனமுூர்த்துப்
பேணும கிளிமொழித் தாயேசர் வாணியே. 60

முத்து நிறைந்திடும மூங்கி லெனும் நாசி
முத்தொன் றிடகலை யால்வெளிப் பட்டொளிர்
நத்தென வாகி நலந்தர வேணுமே
சக்தி யிமகிரி ராஜகு மாரியே. 61

அம்பிகைச் செவ்விதழ்ச் சீரினை யொப்பிடிற்
செம்பவ ழஞ்சற்று நேரெனச் செப்பலாம்
பிம்பப் பழம்ப்ரதி பிம்பமா னாலும்வீ
சம்பங்குச் சோலையும் தாராது தாயேகாண். 62

வண்ண மதிமுகப் புன்னகை யாம்நில
வுண்ணஞ்ச கோரந்தெ விட்டிப் புளிவேண்டி
வெண்ணாணில வாங்கஞ்சி யள்ளி யுணுமெனின்
வண்ண முரைத்திட வாக்குணடோ வம்மையே 63

பேணிச் சிவலீலை நித்தஞ்சொல லிச்செம்மை
காணுமுன் செமபருத் திககுநேர் நாவில் வாழ்
வாணியின் வெணணிறம் மாறி மதிப்பிலா
மாணிககம போலவள் தோனறுவ ளெந்தாயே. 64

சண்டைவென றுப்பாகைச் சட்டைநீத் தேவநத
விண்டுவி சாகனு மிந்திர னுஞ்சிவச்
சண்டநிர் மாலியஞ் சற்றுமவேண் டாதுநீ
யுணடுமிழ்த தாம்பூல முண்டு களிபபரே. 65

அச்சிவ லீலைகள் வாணியாழ் வாசிக்க
மெச்சிச் சபாஷெனு மீனாட்சி நின்சொல்லின்
நற்சுவை யாழைப பழிததலால வாணியி
லசசையால வீணைக குறையிட் டொளித்தாளே. 66

புததிரி யென்றிம வான்றொடு மோவாயைப்
பத்தினி யெனறுமுத தந்தரச சங்கரன
நித்தமும் கையினாற் பற்றும் பளிங்கினை
ஒத்த முகப்பிடி எனனென றுரைப்பதே. 67

கஞ்சமு கத்துக்குத் தண்டெனுங் கண்டமுன்
பஞ்ச முகன்கட்டிக் கொஞ்சச் சிலர்த்தது
கொஞ்சி யதிலாடுந் தூயவெண் மாலையும்
கொஞ்சங் கருத்த தகுருவா லம்மையே. 68

சங்கீத கீதங் கமகங் கதியுமாஞ்
சிங்கார ரூபச் சிவகாமித் தாயேவுன்
மங்கல்ய நாண்கண்ட ரேகைமூன் றாக்கியே
சங்கீத் முக்ராம வெல்லைபோற் செய்ததே 69

அஞ்சு முகன்றலை ஆய்ந்த நகங்கண்டு
அஞ்சிப் பிரமனும் மிஞ்சத தலைநான்கும்
கஞசததண டொததநின நற்கரம நான்கையும்
தஞ்சமென் றேததினன தாயேகா மாட்சியே. 70

கஞசததை மிஞசுமுன செந்நகச் சோபையைச்
செஞசொல் லெடுததுநாம செப்பலு மாகுமோ
கஞ்சமுஞ் சீதேவி பாதத்தின செமமையாற்
கொஞ்சமும் காணட்டு மச்சோபை எந்தாயே. 71

பங்கிட்டுப் பாலுண்ணக கந்தன் கணபதி
பொஙகுமுன் கொங்கையை மூத்தோனதன் குமபமாய்ச்
சங்கிதது மேல்நீவக கணடோா நகைககுமக்
கொங்கைக ளெங்கட்கு மங்கள மீயவே. 72

மங்கையுன் கொஙகைகள மாணிககக கும்பங்கள்
அஙகு நிறைபபா லமிாத மதே னெனின
செஙகைவே லனகண ந ா ந று மிலானும்பெண்
சங்க மறியாக குமரரா யுளளாரே 73

கொஙகை நடுவொளிாக குமபமுத் துச்சரஞ்
செஙகனி வாயித மூாற்சிவந் துட்புறம
எஙகும பலவாண மாயசிவன தீரததைத
தஙகி யுரைப்பது போலவு மாயிற்றே 74

அம்பிகே வாணி மயமாகும நின்னருங
குமபத தனததூ றும்கூீர வமுதமாம்
குமபத தனங்களின பா லுணட மேன்மையாற்
சம்பந்த னுங்கவி மாரி பொழிந்தானே 75

கோபச் சிவன்நெற்றிக கணசுடர் சூழ்ந்திடுந்
தாபமுந தாங்காது மாரனுன் ஆழ்மடு
நாபி வீழந்தபோ தெழுநத கருமபுகை
நாபிக கமலத்து ரோமமு மானதே. 76

காளத்தி யீசனின் காமங்கொள் ளம்மையே
காளிநதி யினதிரை போல்ரோம ரேகையுன்
கோளத் தனங்கள நடுச்சிக்கி நீலவான்
மீளவுன் நாபிக் குகைப்புக்க வாறே 77

பூமொட்டுக் கொங்கைவாழ் ரோமக கொடிவளர்
பூமியாம நாபி யிரதிவா ழிலமக
காமனே மககுணடங கங்கைதன செஞ்சுழல
சோமனு தாததவச் சித்திப பிலமாமே. 78

பாரத் தனங்களைத தாங்கா வளைநதுமே
சோருங் கொடியிடை ஆற்றங்கரைமரம
நேருள தாயினும நித்தமும வாழகவே
பார்புகழ் சகதியென தாயினருளாலே. 79

இழைநது மிழைநதுமார் பங்கிக கிழிய
எழுந்த கனகம்நேர்கும்பத் தனஙகள
விழமெல் லிடைநைய்ய ரேகைகள மூன்றுல்
அழுநத வமைத்தன ஞேமாரன் தாயே. 80

இந்தப் படியை மறைக்கப் பருத்திடும்
அநத மிகுநதநி தமபப்ர தேசமுன்
தந்தை யிமவான் அளிதத வகலமா
விந்தையாம சீதனம் பார்வதி தேவியே. 81

செம்பொன் கதலியை விஞ்சிக கஜஙகளின
தும்பிகைகை விஞ்சுமச்சோபைத் துடையுடன
சம்புவை நித்தம் பணியக் கடினமாய்
கும்பத்தைவிஞ்சி முழங்காற்சில தோன்றுமே. 82

உம்பர் முடிச்சாணை கொண்டந கம்பத்தும்
அம்புக ளாய்நின் கணைககாலாந தூணியிற்
சம்புவை வென்றிடக் காம னமைத்திட்டான்
அன்பு மிகுந்த வகிலாண்ட யீசையே. 83

வேதநான கும்தம் முடிமீது வைப்பதும்
மாதவன் சூடாம ணிக்குச்சீ ரீவதும்
நாதன் முடிகங்கைக் காதார மாகுமுன்
பாதஙகள் எனசிர மேல்வைப்பா யம்மையே 84

பத்தினி பாதமு தைத்து மலர்ந்திடும்
உததியா னததசோ கத்தினைக் கண்டரன்
மெத்தப் பொறுமைகொள் மேன்மையாம் பாதங்கள்
நித்தமும் போற்றுவேன் என்னையா ளம்மையே. 85

பித்தன் பிதற்றித்தன பத்தினி பாதத்தால்
நெத்தியில் மொத்துண்ட போது சலங்கையின்
சத்தஞ் ஜயகோஷ மாய்மத னுக்கரன
தைதத்முள் நீக்கிப் பழிவாங்க லானதே. 86

கஞ்சம் பனிக்கஞ்சும் ராத்துஞ்சும் செம்மகள்
கொஞ்சமே வாழ்வளங் காணுலுன செஞ்சரண்
கொஞ்ச மிமயத்தில் கூட்டும பொருளென்றும்
கஞ்சத்தை மிஞ்சி மலர்ந்ததெப் போதுமே. 87

ஆர்த்திகள் தீர்ப்பதும் அன்றரன் அம்மிமேல்
நேர்ததியாய வைதததும் செல்வந் தருவதும்
கீர்ததி தருமுள்ளந தாளினைப் பாவாணர்
போத்திடும் ஆமை முதுகென்ற தென்னவோ? 88

தேவர்க்குச் சற்றீயும் கற்பக மஃதின்றி
தேவமா தர்கரங் கூப்பி வணங்குங்கால்
தேவி திருநகத் திங்கள்சூழ் செஞ்சரண்
யாவர்க்கு மெல்லாமும் ஈனறு நகைக்குமே. 89

கற்பகப் புட்பங்கள் போல்மது பொங்கிடும்
பொற்புடை நின்சரண போற்றி முழுகிடும்
நறபுல னைந்தொடு நல்மன மறுமாய்ப்
பெற்றகால் வண்டெனப் பேணி மகிழ்வேனே. 90

உன்னடை யொக்க நடக்கவு மெண்ணியே
அன்னங்கள் உன்னிரு வண்ணப் பதமுறை
சொன்னச் சலங்கையின் கிண்கிணி ஓசையை
உனனிஉன் சீர்நடை ஊகித்துத் தேருமே. 91

பங்கயன் மாலொடு ருத்திரன் ஈசனும்
மங்கள மாய்மஞ்சக் கால்களு மாயினர்
அங்குச் சதாசிவன் ஆசனமாகி யுன்
சிங்காரக் கண்ணுக்குச் செம்மை யளித்தானே. 92

கும்பத் தனம்சுருள் கூந்தல் பருத்தநி
தம்பங் கொடியிடைப் புன்னகைச் செம்மேனி
அன்புத் திருவுளம் யாவுந் திரண்டதோர்
அம்பிகை யாயரன் தண்ணருள் பூத்ததே. 93

மங்களை யுன்திரு மஞ்சனப் பேழையாந்
திங்கட் களங்கமுங் கஸ்த்தூரிப் பிம்பமே
மங்களப் பன்னீர் கலைப்பச்சை கற்பூரம்
பங்கயன் நித்தங் குறைய நிறைப்பனே 94

பஞ்ச முகச்சிவன் பட்ட ம...
சஞ்சலச் சித்தத்தார் காணவொண்ணுதவள்
அஞ்சியெண சித்தியோ டிநதிர ஞருளர்
தஞ்சமென்றேரே தரிசிக்க வலலாரே. 95

கற்றவர் நாவில் கலைமகள் வாழ்குவள்
உற்றவர் வீட்டில் அலைமகள் தங்குவள்
பற்றி யணைதல்நீ யச்சிவ னஃதலால்
மற்றுக் குரவகத் துக்குமஃ துணடாமோ. 96

கலைமக ளென்பர் கலைகளில் வல்லோர்
அலைமக ளென்று மறைகுவர் மற்றோர்
மலைமக ளென்பர் மகாதவர் யார்கரும
தலைமையாய் நின்றச் சகமாயை நீயே. 97

ஊமைக்கும் வாக்கீயு முத்தமமா மந்த
நாமகள் தாம்பூலம் நேரெனு முனபாதத
தாமரைத் தீர்த்தம் பருகியே எனறுநான
க்ஷேமமு டன் ப்ரம்ம ஞானமடைவேனே. 98

சிதேவி வாணியுஞ் சேர்ந்தே அருள்வதால்
மாதேவி பக்தர்கள் மனமத ரூபராய்
ஆதாயம பெற்றுப் பசுபாசம் நீத்திட்டு
வேதாந்தங் கண்ட பிரமமே யாவரே. 99

ஆதவ னுக்கிடும் தீபவா ரத்திபோல்
சீத மதிககிடும் சீதநீ ராககியம்போல்
மோதுங் கடலுக் கவன்நீரே தந்தாற்போல்
நீதரு வாக்காலிப் பாமாலை செய்தேனே. 100

ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ ஸம்பூர்ணம்

சுபம்

ஏழாம் பாகம்

ஸ்ரீ காமாக்ஷ்யைநம :

# 1. சீர்பாத வகுப்பு.

**தோடி அல்லது பைரவி]** **[கண்ட சாபு**

**தனனதன தனனதன தனனதன தனனதன**
**தனதன தனனதன**
**தனனதான தானதன.**

அகரமுதல் உகரமிடை மகரமுடி யெனவருமோர்
அரியதொரு பொருளதனி
னுரையாகி வாழ்வதும்,

அரியசதுர் மறைகளிவை யருமையினி லருமையென
அநவரத முறையிடுமொ
ரரிதான மாநிதியும்,

அரிபிரம ரானுடனெ மகபதியும் அடிகளெள
அடலுடனெ ஒருபரம
சிவபீட மேறுவதும்,

அதனிடையி லுலகுகளை யருளவல தவவடிவொ
டழகுமிகு பதுமமெனு
நிலையாகி மேவுவதும்,

அமரர்பதி யொடுசகல வமரர்களு முடல்குறுகி
அநுதினமு மலர்களுட
னடிபேணு மாதரவும்,

அவனிதனி லுளசகல முனிவர்களு மனமகிழ
அவர்களிரு நயனமிடை
அடையாள மாவதுவும்,

அசைவறவெ நினையுமவ ரிருவினைமு மலமுமற
அவர்களுள மதைமருவி
அழகாயு லாவுவதும்,

அமலமன துடனடிய ரிகபரமு மருள்பெறவெ
அரியபு மொடுநிதமு
மகலாது பாடுவதும், (1/1)

இகசுகமு மொருபரம சுகமுமருள் தருவதென
எளியனக மதைமருவி
இனிதாயு லாவுவதும்,

எளியன்முடி யதனையுமெ தனதெனவெ கருதியென
திருவினைமு மலமுமற
இசைபாட ஏவுவதும்,

இரவுபக லெனதுவல மிடமதிலு மிருபுறமும்
எவர்பகையு மெளியனிட
மணுகாது பேணுவதும்,

இரவினிடை துயிலதனி லினிமைமிகு கனவுகளி
லெளியனமன மதுகுளிர
வினிதாயு லாவுவதும்,

ஏமபடரு முயிர்கவர யெனதுமுனம் வருமளவி
லெதிரொகொ டவர் சிதறிவிழ
யவர் மார்பில் மோதுவதும்,

இடர்கலிகள் பிணிகளுட னெதுவினையு மெதுபயமு
மெளியனிட மொருபொழுது
மணுகாது சூழுவதும,

இருணிறையு முலகமிசை வழியறிய வகையில்எனை
இணையிலொரு பதமுறவெ
துணையாகி வாழ்சுடரும,

இனிமையுட னடிமைபுகழ தனிலரிய வருள்சொரிய
இளகியதி லனவரதம்
அருளாகி வாழ்வதுவும், (½)

மகிமையொடு தருமமிகு மகபலியின முடியதனை
மருவியதி லருளுடனெ
அடியாக ஏகுவதும,

நடுநடுவில் முதலைகவர் கரியலறல் விடுமளவில்
வரதவடி வுடனதனி
னுயிர்மீள வோடுவதும்,

தலைமொழி யதனைவிடு தவறுமுகு மிரணியனை
வனபதியின் வடிவுகொடு
யவன்மாரபை யீருவதும்,

கபதிதன மகிமைதனை முழுதுமுணர் இளைவனுயிர்
மடியவென வருமறலி
உயிர்மாய வீசுவதும்,

தலையமு குரலதுவெ வருமளவி லருமையொடு
மதுரமிகு வமுதமுட
னொருகாழி மேவுவதும்,

ஏழாம் பாகம்

ஸ்ரீ காமாக்ஷியைநம :

# 1. சீர்பாத வகுப்பு.

தோடி அல்லது பைரவி] [கண்ட சாபு

தனனதன தனனதன தனனதன தனனதன
தனதன தனனதன
தனனதான தானதன.

அகரமுதல் உகரமிடை மகரமுடி யெனவருமொர்
அரியதொரு பொருளதனி
னுரையாகி வாழ்வதும்,

அரியசதுர் மறைகளிவை யருமையினி லருமையென
அநவரத முறையிடுமொ
ரரிதான மாநிதியும்,

அரிபிரம ரானுடனெ மகபதியும் அடிகளெள
அடலுடனெ ஒருபரம
சிவபீட மேறுவதும்,

அதனிடையி லுலகுகளை யருளவல தவவடிவொ
டழகுமிகு பதுமமெனு
நிலையாகி மேவுவதும்,

அமரர்பதி யொடுசகல வமரர்களு முடல்குறுகி
அநுதினமு மலர்களுட
னடிபேணு மாதரவும்,

அவனிதனி லுளசகல முனிவர்களு மனமகிழ
அவர்களிரு நயனமிடை
அடையாள மாவதுவும்,

அசைவறவெ நினையுமவ ரிருவினைமு மலமுமற
அவர்களுள மதைமருவி
அழகாயு லாவுவதும்,

அமலமன துடனடிய ரிகபரமு மருள்பெறவெ
அரியபு மொடுநிதமு
மகலாது பாடுவதும், (1/4)

இகசுகமு மொருபரம சுகமுமருள் தருவதென
எளியனக மதைமருவி
இனிதாயு லாவுவதும்,

எளியன்முடி யதனையுமெ தனதெனவெ கருதியென
திருவினைமு மலமுமற
இசைபாட ஏவுவதும்,

இரவுபக லெனதுவல மிடமதிலு மிருபுறமும்
எவர்பகையு மெளியனிட
மணுகாது பேணுவதும்,

இரவினிடை துயிலதனி லினிமைமிகு கனவுகளி
லெளியனமன மதுகுளிர
வினிதாயு லாவுவதும்,

எமபடரு முயிர்கவர யெனதுமுனம் வருமளவி
லெதிரொகொ டவர் சிதறிவிழ
யவர்மார்பில் மோதுவதும்,

இடர்கலிகள் பிணிகளுட னெதுவினையு மெதுபயமு
மெளியனிட மொருபொழுது
மணுகாது சூழுவதும்,

இருணிறையு முலகமிசை வழியறிய வகையில்எனை
இணையிலொரு பதமுறவெ
துணையாகி வாழ்சுடரும,

இனிமையுட னடிமைபுகழ தனிலரிய வருளசொரிய
இளகியதி லனவரதம
அருளாகி வாழ்வதுவும், (½)

மகிமையொடு தருமமிகு மகபலியின முடியதனை
மருவியதி லருளுடனெ
அடியாக ஏகுவதும்,

மடுநடுவில் முதலைகவர் கரியலறல் விடுமளவில்
வரதவடி வுடனதனி
னுயிர்மீள வோடுவதும்,

மதலைமொழி யதனைவிடு தவறுமுகு மிரணியனை
வனபதியின் வடிவுகொடு
யவனமாாபை யீருவதும்,

மகபதிதன் மகிமைதனை முழுதுமுணர் இளைவனுயிர்
மடியவென வருமறலி
உயிர்மாய வீசுவதும,

மதலையமு குரலதுவெ வருமளவி லருமையொடு
மதுரமிகு வமுதமுட
னெருகாழி மேவுவதும்,

மதலைகண பதியுடனு மருமைமிகு முருகனொடு
மணிகள் கல கலவெனவெ
விளையாடல் கூருவதும்,

வனமதியிடை யழகுமிகு பழயவடி வடையவென
வரியதொரு தவமியல
முனைமீது ஏறுவதும்,

மகபதியொ டருமைமிகு மவைதனிலொர் நடனமிட
மகிழ்வுடனெ பெரியதொரு
நடமாடி யாடுவதும், (3/1)

உகமுடிவி லரியரனு மயனுமக பதியுடனெ
உளசகல வயிரமிய
திருநீறு காணுவதும்,

உளபொருள்களிவையொழிய எவையுமில வெனுமறிவை
உளபடியெ யருளவல
குருவாகி மேவுவதும்,

உலகிலொரு கொடியெனவெ யலையுமெனை வளரவிடு
ஒருபொருளு முறுதுணையு
மெனவாகி வாழ்வதுவும்,

உயர்பெறுமொ ருலககுரு அடிகருதி யுடன்வரவெ
ஒருநதியின மணலினிடை
அடையாள மானதுவும்,

ஒருகுமரி வடிவுகொடு மதுரைதனி லரசுபுரி
உவகைமிகு மரசனிட
திருமார்பி லாடினதும்,

உலகிலரி தெனுநகரி லதிகருணை வடிவுகொடு
உளவிருளை யகலவிடு
முயர்காம கோடியெனும்

உமையமலை குமரிகுண தரிகவுரி பரசிவையு
முதுமறையி னடிமுடியு
மெனவாகி யோர்சிவனின்

ஒருவடிவில் அரைவடிவி யெனவொளிரும் அழகுடனெ
உலகமுழுத ருளியருள்
**சிவகாமி சீரடியே.**

— —

உ

காமாட்சி துணை

# 2. கடைக்கணியல் வகுப்பு

கேதாரகௌளம, அலலது பிலகரி, ஆதிதாளம்.

தனதத னநதன தனதத னநதன
தனதத னந்தன தனதத னநதன.

எனைத்தி னநதினம வளர்க்க வும்பத
மிணைக்க வுந்தயை செழிதது நின்றதும,

எனககு கந்தொரு தினததி லநதமொ
டெணைகக ரஙகொடு வணைகக வநததும,

எனககு வநதொரு குநதது வங்கிளை
இரக்க முஙகொடு களிதது வந்ததும,

எதற்கு மஞசுவ தொழிதது வந்திடு
வெணசசி றநததொ ரருட்சொ ரிநததும,

எனக்கு கநதிக பரததி லுஞசுக
மிழைதது யென்றுமெ ளுளததி ருநததும்,

எதிர்தது வநததொ ரெமகக ணஙகளை
எதிாதது நின்றெணை யணைதது நின்றதும,

இணைப்ப தந்தனை யுளதது எனபுட
நினைககு மன்பர்த முளதத மாநததும,

இனிதத செந்தமிழ் புகழ்ப்ப தஙகளை
இசைககு மன்பரை யழைதது நின்றதும, ($\frac{1}{4}$)

வனத்தி லநதமொ டினிதது வநதொரு
மனதது டன்தவ மிழைதது வநததும்,

மணதத சண்பக மரதத மாநதடி
வழுத்தி வந்திடு சுரர்ககு கநததும்,

மதத்து டன்பெரு செருக்கு டன்திரி
மனகரு ரங்கினை யடக்கி வென்றதும்,

மதத்தை யுந்திரி புரத்தை யுத்தெறி
மகத்து வங்கொளு மியற்கை கொண்டதும்,

மதித்து என்செய லனைத்தை யுஞ்ஜெயம்
வரப்ப ரிந்தருள் கொழித்து நின்றதும்,

மறைத்த விந்திரிய விருட்டை வென்றனை
மலர்ச்சி கொணடிட வமைகரு மன்பதும்,

மனத்தை யுங்கவ ரியற்கை கொண்டதி
மகத்து வங்கொடு மொளித்து நின்றதும்,

வருத்த முற்றவி திருத்த முந்தரு
மருட்க ளஞ்சிய மெனத்தி கழ்ந்ததும், (½)

அனைத்தை யுந்தரு மியற்கை கொண்டுல
கனைத்தை யுமபயி லருட்டி கழ்ந்ததும்,

அருட்பி ழம்பறு முகத்தை யுங்கர
மணைக்க வந்தருள் படைத்து நின்றதும்,

அசைத்த தும்பியு மொடித்த தந்தமும்
வகித்த தந்தியை யழைத்து நின்றதும்,

அயிற்க ரங்கொளு மருட்கு மரந்தையை
அழைத்து வன்பொடு களித்தி ருந்ததும்,

அவைத்த லந்தனில் நடித்த சம்புவை
அழைத்த சுந்தர முடைத்து நின்றதும்,

அழைத்த சங்கரர் பதத்தி லன்பினை
யமைத்து வந்துமெ சுகித்தி ருந்ததும,

அளித்த றங்களை வளர்த்து கஞ்சியி
லருட்சொ ரிந்திடு சிறத்தை கொண்டதும்,

அவித்தை யென்றொரு விருட் சிதைந்திட
அருட்பெ ருந்தகை யெனச்சி றந்ததும் (2)

கனத்த கஞ்சியி லினித்த மர்ந்தவள்
கவித்து வந்தரு மருட்சு ரந்தவள்,

கருப்பு தண்டமு மலர்த்த அம்புமெ
கரத்தி லன்பொடு பிடிதத்தி ருந்தவள்,

களிதது வந்திக பரத்தி லுநதுணை
கதித்து வந்தெனை யுயர்தத வநதவள்,

கதிகசு மம்பிகை விதிகசு மம்பிகை
கயற்க ணம்பிகை யெனததி கழ்ந்தவள்

கருதத கொண்டையும் நெளிதத வந்தமும்
கனத்த குங்கும தனததுடனதிகழ்,

கனிதத செஙகனி யிதழ்சசி றந்தவள்
கரததி லுஙகினி பிடிததி ருந்தவள,

கருதத வண்டென வொளித்து வன்பரை
கவர்ச்சி கொண்டிடு வனப்புடன் திகழ்

கயற்றி னங்களி னியற்கை கொண்டொளிர்
கயற்க ணம்பிகை கடைககண ன்புமே.

# 3. திருக்கொலு வகுப்பு

மத்யமாவதி அல்லது சாவேரி : ஆதி.

அரவொடு யிளமதி நதியணி சடையினர்
அணைந்து வலமே யிணைந்த தொருபால்

அருமறை களுமருள் ஒருசதுர் முகவனும்
அடங்கி யெதிரே வணங்க வொருபால்

அம்மையுட னப்பனும் ஆருயிர்த் தோழனும்
ஆபத்ச காயகியு மானகலி யாணவனை
ஆரணிபு ராதனி அகிலஜக காரணி
வாணியொடு நாரணியும் போற்றும் மகாராணியே. 7

ஸனாதன சுவாஸினி ஸௌபாக்ய தாயினி
ஸர்வாங்க சுந்தரி ஸர்வகுண பூஷணி
ஸர்வசுப தாயினி ஸர்வசுக தாயினி
ஸர்வபரி பூரணி ஸௌந்தர்ய ரூபிணி
அனாதிமுத லாதியென வேதமொரு நாலுமிக
வோதுமிரு செஞ்சரண் தஞ்சமென நம்பிடும்
அன்பருள வாஸினி மங்களவி லாஸினி
அம்புஜ விலோசனி அன்னபூ ரணியம்மையே
வினாயக மகாமய நிராமய தயாபர
விஜயாம் பிகைக்ரவுரி அபயாம் பிகைக்குமரி
வேண்டியபோ திங்கடியர் வேண்டுவன யீந்தருளும்
மீனாட்சி காமாட்சி மேலான கமலாட்சியே
மனாதீத நாயகி குணாதீத மோகினி
மயிலைகற் பகவல்லி மாணிக்க வுமைவல்லி
மந்திரமுந் தந்திரமும் யந்திரமுந் தாண்டியுள
மலமற்ற சித்ரூபி மாதாம காதேவியே. 8

கஞ்சிவாழ் காமாட்சி மாமதுரை மீனாட்சி
காசியுள்வி சாலாட்சி கௌமாரி கமலாட்சி
கருணாம்பி கைப்பிரிய வசனாம்பி கைச்சகல
ஜகதாம்பி கைக்கனக லலிதாம்பி கைக்கவுரி
அஞ்சுபீ ஜங்களே மூற்கூட மாகவும்
ஆறுகடு வாகவும் நாலுமுடி யாகவும்
அமைந்ததிரி கூடமாம் பஞ்சதசி மந்தரமென
வந்தவடி வாம்பிகை மாதுவிஜ யாம்பிகையே
சஞ்சலஞ் சூழுலகி லஞ்சலெனு மபிராமி
ஸௌபாக்ய தாயினி ஸௌந்தர்ய ரூபிணி
சந்த்ரசே கரிகவுரி யிந்த்ரநீ லக்குமரி
சாம்பவித்ரி யம்பகி சகம்புகழ் சுமங்கலை

பஞ்சமா பாதகமும் பஞ்சுபோ லோடவருள்
பார்புகழ் பராபரி க்ருபாகர மனோகரி
பஜித்தடி வழுத்துமொரு பக்தர்க்கி ரங்கியருள்
பாலையு நு கூலையே பார்வதிம காதேவியே. 9

ஹரிஹர புத்திர னு மன்றுமெய்க் காவல்கொள
ஆனந்த மாய்ப்பதும ஆசனம மர்ந்துமே
அருந்தவ மிருந்திடு சுமங்கலை சுதந்தரி
அம்பா பவானி அருளான சிவகாமியே
புரஹரன் பங்குறை புராதன தபோதனி
புந்திக் கிலேசமொடு காயக்கி லேசமும்
போக்கியருள் நாரணி மாதாம னோன்மணி
பூமகளும் நாமகளும் போற்றும் பராசக்தியே
ஒருதரம் தாயேயென் றுள்ளத் துணர்ந்தோதும்
உத்தமர்க் கருணிதியே ஒப்பற்ற கற்பகமே
ஓங்கார ரூபியே ஔதார குணரூபி
உம்பாபுக முபயகே ஆயிஜக தம்பிகே
திரிபுரந் தீயெழச் சினந்திடு தரியம்பகி
சிங்கார ரூபுணி ஸ்ரீ சக்ர வாஸினி
சீதேவி பூதேவி சிறந்திரு புறந்திகழு
சிம்மாச னத்துறையி ராஜரா ஜேஸ்வரியே. 10

லலிதா மகாதேவி சாதுர க்ஷகதேவி
சம்புமோ கித்திடுஞ் சாவித்ரி தேவியே
லாவண்ய காருண்ய லலிதாங்க நாயகி
நாதாந்த வேதாந்த யோகாந்த ஜோதியே
கலியாண குணரூபி காதயாய னித்தேவி
கௌமாரி வாராகி கங்காளி யிந்த்ராணி
கதம்பவன வாஸினி சிதம்பர விலாஸினி
காளிகா தேவிகா யத்ரிபஞ் சாக்ஷரீ
அலர்மேல் வளர்மாது கலைமாது வாணியும்
அகலாது போற்றிடுமி ராஜரா ஜேஸ்வரீ
அங்கிங் கெனுதபடி எங்குமுளச் சோதியே
ஆனந்த மயமான அம்பைகா மாக்ஷியே

பலகாலு மடிபேணும் அடியர்குடி காத்திடும்
பாரந்தனைத்தனது தோளிற் சுமந்தருளும்
பாலையநு கூலமைய யாளுமயி லாபுரிக
பாலியிட பாகமுறை மாதாம காதேவியே. 11

ஹ்ரீங்கார பீஜத்தி னுள்ளுறைச் சக்தியே
சிதசக்தி சிவசக்தி முழுமுதற் சக்தியே
ஹிமாசல குமாரியபி ராமிசிவ காமியுமை
இங்கிதாம் ருதவசனி பங்கஜா ஸனிவிமலையே
ஸ்ரீங்கார மந்திரச் சிதேவி சாபமறத்
திருமேனி தந்திட்ட ஸ்ரீ கஞ்சி காமாக்ஷி
சிங்காரி கங்காளி வாராகி சாமுண்டி
சிம்மமிசை சீர்கொண்ட இராஜரா ஜேஸ்வரி
ஓங்கார பீடத்தில் ஒய்யார மாயொளிரும்
ஓம்ஐம் க்லீம்ஸௌம் பீஜாக்ஷ ரப்பொருளே
உன்மணி மனோன்மணி ஓங்குசிந் தாமணி
ஓட்யாண பீடத்துச் சௌபாக்ய தாயினியே
காங்கேயன் சண்முகன் கந்தன்க்ரு பாகரன்
கார்த்திகே யன்மகிழச் சகதிவே லீந்தருள்
கலியாணி கமலாக்ஷி காத்யா யனித்தேவி
காதிவித் தைக்கரசி கருணைகரக் கவுரியே. 12

ஸகளசௌ பாக்கியப் பஞ்சதசி ரூபிணி
சௌந்தர்ய ரூபிணி சர்வாங்க மோகினி
ஸகஸ்ரதள பத்மமிசை வாஸமிடு நாரணி
சம்புமோ கிதத்திடும் சம்பூர்ண நாயகி
அகிலஜக தம்பிகே அன்பருளச் சந்த்ரிகே
ஆனந்த மாயன் று காதம்ப வனமேகி
அருந்தவ மிருந்திடு வரந்தரு பெருந்தகை
அபிராம நாயகி அருணஜடை யீஸ்வரி
நிகில நின்மல நிராமய நிரஞ்ஜன
நிரந்தர சுகந்தரு சுமங்கலை த்ரியம்பகி
நிட்கலச் சித்ரூபி புட்கலச் சிவரூபி
நெட்டிலைத் திரிசூலி சிட்டபரி பாலியே

நகுலேஸ்வரீ சகல புவனேஸ்வரீ ஞான
பரமேஸ்வரீ பரம யோகீஸ்வரீ கௌரி
நாரணன் சோதரி நான்மறைக ளேத்திடும்
நளினமிகு வல்லிதிரு மயிலைகற் பகவல்லியே. 13

கருணைக ரிக்கவுரி கனகாம்ப ரிக்குமரி
கமலாஸ னிப்பவதி கமலலோச னியுவதி
காந்திம திக்கமலி காத்யாய னித்தேவி
காமயோ னிட்பீடத் ரிபுரபை ரவிதேவியே
அருணைச லத்துறை யுண்ணாமுலை யமைப்பரை
அரியாச னத்திலமர் அம்பைகா மாக்ஷியே
ஆபத்தில் வந்தெனது பக்கத்தி ருந்தருளும்
அகிலஜக தீஸ்வரி அம்பைபர மேஸ்வரியே
சரணமே கதியென்று சார்ந்துதொழு மன்பர்க்குச்
சகலசௌ பாக்யமருள் சந்த்ரசே கரிவிமலி
சாஙகரீ பீடத்து காமாள வம்மையே
சாகம்பரிப் பீடப் பிராமரித தேவியே
கரணாதி கட்குமைம் புலனாதி கட்குமே
எட்டாத மாண்புடைச் சீலியபி ராமியே
காலஞ்ச பீடதநுக் காளிகா தேவியே
காளத்தி வாழ்ஞானப் பூங்கோதை யம்மையே 14

லக்ஷகோ டியண்ட பகிரண்ட மீன்றருள்
லலிதா மகாதேவி சாவித்ரி தேவியே
லயித்திடு மனத்திடை யுதித்தன வளித்திடும்
லாவண்ய காருண்ய லலிதாங்க நாயகி
இக்ஷுகோ தண்டமும் எழிலோடு மலர்க்கணையும்
இடர்களையு மங்குசமும் பாசமுங் கொண்டொளிரும்
ஈஸ்வரி மனோகரி எந்தாய்க்ரு பாகரி
இந்த்ராக்ஷி கமலாக்ஷி நீலாய தாட்சியே
பக்ஷமோ டெந்தாயுந் தந்தையுந் தானாகிப்
பயந்திர வந்தெனக் கபயங் கொடுத்தருளும்
பார்வதிப ராசக்தி புராதன மகாசக்தி

பஞ்சநிதி தந்தருளு மம்பைகா மாக்ஷியே
பிக்ஷையாண் டிக்கமுது தந்தன்ன பூரணியாய்
விளங்குசிவ காமியபி ராமியுமை காளியமை
பிமேஸ்வரீ சகல காமேஸ்வரீ விமல
விஸ்வேஸ்வரீ சண்டி சாமுண்டி வாராகியே 15

ஹ்ரீங்கார நாகமுட னிதயசம லத்தில்வாழ்
சிங்கார ப்ருங்கிபங் காருகா மாக்ஷியே
எங்குமுள ரேணுகா தேவிசந்த் யாதேவி
ருத்ராணி சர்வாணி ப்ரம்மநி ருவாணியே
ஓங்கார ரூபியே உக்ராணி தேவியே
உத்பலா க்ஷிப்பீட சுவர்ணைக்ஷி தேவியே
உமாம கேஸ்வரீ ஜாம்புநத யீஸ்வரீ
குசுமாம்பா தேவிமகு டேஸ்வரித் தேவியே
ஐங்கார ரூபியே பஞ்சதசி ரூபியே
அகிலாண்ட நாயகி ஆதிபர மேஸ்வரீ
அம்புஜா க்ஷிக்கவுரி புஷ்கார க்ஷிக்குமரி
ஜ்வாலா முகிதேவி சாரதா தேவியே
க்லீங்கார ரூபிசு த ரூபிசிவ ரூபியுமை
ஸ்ரீசக்ர வாஸினி மங்கள விலாஸினி
என் றுமுன் செஞ்சரண் தஞ்சமென நம்பினேன
இகபர சுகந்தந்து என்றுமெனைக் காத்தருளே. 18

## ஸ்ரீ மகாலக்ஷ்மி தண்டகம்

ஓம் ஸ்ரீம் மகாலக்ஷ்மி மாதாம காதேவி
மதுசூத னன்மார்பில் வாழுமக ராஜியே
மன்னருந் தேவரும் மாலோனும் பிரமாவும்
வாயார வாழ்த்திடும் நாரணி மனோன்மணி 1

சௌபாக்ய தாயினி சௌந்தர்ய ரூபிணீ
சாதுசம்ரக்ஷணி தாரித்ரிய தவம்ஸனி
சர்வாங்க சுந்தரி சர்வசுக தாயினி
சர்வசுப தாயினி சர்வகுண பூஷணீ 2

சர்வஜகன் மோகினி சர்வபரி பூரணி
சர்வபிணி நாசினி சர்வமிடி நாசினி
சகஸ்ரதள பத்மமிசை சீர்கொண்ட கோமளா
சனாதன சுவாஸினி மங்களவிலாசினியே 3

தனதான்ய லக்ஷ்மி வீரமா லக்ஷ்மி
சந்தான லக்ஷ்மி சர்வஜக லக்ஷ்மி
சர்வஜய லக்ஷ்மி சர்வகஜ லக்ஷ்மி
சகலசம் பத்தருளு மாதாமங் களரூபியே 4

மங்கள மெலாமருளு மன்மதசொ ரூபிணி
எங்குறைகள் தீர்த்தருளு மீஸ்வரீக் ருபாகரி
மலர்தூவி யடிபேணு மடியார்கள் மனதார
வேண்டிய வரங்கள் தரு மம்மைவர லட்சுமி 6

பங்கஜநி வாஸினி பங்கஜவி லாஸினி
பங்கஜவி லோசனி மாதுபங கஜவல்லியே
பங்கஜா ஸனிவிமலி இலங்குதார் ருதவசனி
பந்தங்கள் நீக்கியருள பார்புகழ் சுமங்கலியே 7

பதுமனு பப்பிரிய லலிதாங்க மோகினி
பாதங்கள் போற்றிநிதம் தஞ்சமென வந்தோர்க்
பதுமநிதி சங்கநிதி மற்றுமுள நிதியருளும் [குப்
ப்ரஸன்ன வதனத்தேவி ப்ரத்யக்ஷ பரதேவியே

சித்தியொடு முக்தியுஞ் சின்மயா னந்தமும்
பக்தியொடு சக்தியும் பரமஜய மங்களமும்
சித்தமல சுத்தியுப சீருலக போகமும்
நித்தமு மெனக்கருளி யெந்தவெனைக் காத்தருளே



## ஸ்ரீ சரஸ்வதி தண்டகம்

சகலக லாவல்லிச் சாரதா தேவியே
சம்பூர்ண ஞானமுளச் யாமளா தேவியே
சதுர்முகன் தேவியே சாதுசம் ரக்ஷகி
சந்ததமும் பாவாணர் நாவிலுறை வாணியே
அகிலமெல் லாம்புகழும் அறிவான தெய்வமே
வாக்கிலா மூகற்கும் வாக்கருள் காரணியே
அரியயன் முதலானோர் போற்றிசெயுந் தேவியே
ஆனந்த வாரியே அகிலஜக தீஸ்வரியே
சகலவித நாதமுஞ் சப்தஸ்வ ரங்களுடன்
சகலவுல கங்களும் லயித்திடு மிசைத்தொனியை
தானுமெ முப்பியொரு வீணகானஞ்செய்யும்
அம்மணி மனோன்மணி ஆருயிர்த் தேவியே
சகமெலாம் போற்றுமொரு முகவிலா சத்துடனே
வெண்தா மரைமலரில் வீற்றருளும் பூரணி
தாயே சரஸ்வதியே சகலசுக தாயகியே
சரணம் சரணமே தந்தருள் நின்னருளே.

## ஜயமங்களம்

மோகனம் அல்லது பியாக் ] [ ஆதி அல்லது சாபு

ஜயஜய ஜயஜய கணநா யகனே
ஜயஜய ஜயஜய வடிவே லவனே
ஜயஜய ஜயஜய நடரா ஜனுமே
—ஜயமது சூதனனே

ஜயஜய ஜயஜய ஜயமா ருதியே
ஜயஜய ஜயஜய ஜயஜா னகியே
ஜயஜய ஜயஜய ஜயரா மனுமே
—ஜயமக மாயையுமே

ஜயஜய ஜயஜய ஜககா ராணியே
ஜயஜய ஜயஜய ஜயநா ரணியே
ஜயஜய ஜயஜய ஜயபூ ரணியே
—ஜயவபி ராமியுமே

ஜயஜய ஜயஜய ஜயமோ கினியே
ஜயஜய ஜயஜய ஹரிசோ தரியே
ஜயஜய ஜயஜய எனதா ருயிரே
—ஜயஜய மீனவளே

ஜயஜய ஜயஜய பதுமா ஸனியே
ஜயஜய ஜயஜய கலைவா ணியுமே
ஜயஜய ஜயஜய பிரமா புரம்வாழ்
—சிவை ஜக தீஸ்வரியே

ஜயஜய ஜயஜய கருணை நிதியே
ஜயஜய ஜயஜய சிவகா மினியே
ஜயஜய ஜயஜய மயிலா புரிவாழ்
—தருவெனு மாமயிலே

ஜயஜய ஜயவெனு மடியா ருறவே
கதிதரு மெனவரு மடியேன் நிதமெ
சகமதி லிகபர சுகமோ டெழிலாம்
—ஒருபெரு வாழ்வுறவே

சகலமு மருளொரு துணையாய் உறைவாய்
கனவிலு நனவிலு முனையே நினைவேன்
சடுதியி லெதனிலும் ஜயமே பெறவே
—அருள்புரி வாயுமையே.

## ஸ்ரீ காமாட்சியம்மைத் திருவந்தாதி

கஞ்சி நகர்வாழ் கருணைக் கடலெனுங் கற்பகமே
நெஞ்சி லொருபோ துமுனை மறவா நெறியுடனே
தஞ்ச மெனவந் தடியேனுனையே சரணடைந்தேன்
அஞ்ச லெனவந் தபய மளித்தெனை ஆண்டருளே. 1

அருளா லுலக மனைத்து மளித்துன தன்பெனுமோர்
பொருளா லவற்றைப் பரிவுடன் போற்றிடும் பூரணியே
மருளால் மயங்கி மதிகெட் டுலகில் வருந்துமென்றன்
இருளா மறிவின்மை நீக்கி யருள்வாய் எழிற்பதமே. 2

பதமே கதியென நாளு முருகியுன் பண்கள்யே
நிதமே பொழியும் அடியார்க் கழியா நிதியருளி
இதமே புரியுங் கருணை மிகுஞ்சக தீஸ்வரியே
மதமே பிடித்தலை வேளையுங் காத்தருள் வாழவைத்தே 3

வாழ வுலகி லடியேன் வளமுடன் மாவடியார்
சூழ வுனது புகழினை யோதியென் தொல்வினைகள்
வீழ வுனது திருவருள் சேர விதித்தருள்வாய்
காழி மதலைக் கமுதமன் றூட்டிய கற்பகமே. 4

கற்பக வல்லிநீ காமாட்சி யம்மைநீ கண்குளிரச்
சொற்பனத் துற்றுத் தரிசனந் தந்த சுமங்கலிநீ
சிற்பரை நீசிவ காமிநீ தேவர்கள் தேவியுநீ
அற்பனெ னக்குமுன் னுரரு ளீவாய்நீ அன்புடனே, 5

அன்பு மிகுத்திடு மம்மைநீ அப்பன்நீ ஆருயிர்நீ
இன்ப மிகுத்த எழிலார் பதமருள் ஈசையுநீ
என்பு ருகப்புகழ் பாடு மெளியே னிடர்தவிர்த்துத்
துன்ப மணுகாக் கதிதந் தருள்வாய் சுகமெலாமே. 6

சுகமெலா மன்பர்க் களித்திடுஞ் சோபைச் சுமங்கலியே
சகமெலா மீன்ற வருட்பெருஞ் சோதிச் சுடர்விளக்கே
இகமெலா மென்றன் துணையாகி மாய விருளகற்றி
அகமெலாம் நீயே நிறைந்து குளிர்விப்பாய் அம்மையின்றே 7

அம்மா வெனவங் கொருசேய் கதறி யலறிடவுஞ்
சும்மா விருந்திடுந் தாயுமிங் குண்டோ துதித்துனையே
எம்மா லியன்றள வேத்திடு மென்னு மிரங்கிலேயோ.
பெம்மான சிவன்பா லமர்ந்துல கங்களைப் பெற்றதாயே. 8

பெற்றவோர் தாயினுஞ் சாலப் பரிந்துமே பேரடியார்க்
குற்றமா நோய்தீர்த் தவர்க்குற்ற வாழ்க்கைத் துணையென
வாய்ச்
சற்றுமே வாடாப் பதமீந்திட் டென்றுமே தாங்கிடுவாள்
பொற்ற மரையாளும் வாணியும் போற்றும் புரந்தரியே. 9

புரந்தரி போற்றி புராதனி போற்றி புவிகளீந்த
நிரந்தரி போற்றி யெனநிதம் போற்று நிமலருக்குப்
பரந்தனிற் பேறு மிகந்தனிற் சீரும் பயந்திடுவாள்
சுரந்தருள் பாலிக்குஞ் சோலை மிகுந்த சுமங்கலியே. 10

மங்களச் சொற்களாற் பாமாலை சாற்றி மகிழ்ந்துநிதம்
பங்கயப் பாதம் பணியு மெளியேனைப் பார்தனிலே
திங்களின் வெண்பிறை யாயிரங் கண்டு திகழ்ந்திடவே
அங்கயற் கண்ணியுன் றாரருள் வேண்டும் அமோகமாயே.

மோக மகலப் பழவினை யகல முற்றுமென் றன்
சோக மகல மிடியு மகலத் துணைபுரிந்து
போக மிகுதத பெருவாழ் வளிதெனைப் போற்றிடுவாய்
யோக நிலைகொண்ட காமாட் சியம்மையா முத்தமியே. 12

உத்தம வாழ்வு முயர்கதி யும்பாரி லுன்பதமே
நித்தமு நாடு நெறியு மழியா நிதியதுவும்
மெத்தவும் பெற்றிங் கடியே னொளிர விதித்தருள்வாய்
முத்தியை நாடு முனிவ ருளம்வாழ் மோகினியே 13

மோகனப் புன்னகை யுந்துயர் தீர்க்கு முகமலரும்
கோகன தச்செஞ் சரணுங் குறைதீர்க்குங் குங்குமமும்
போகம ருள்திரு நோக்குந் திருமேனிப் பொன்னழகும்
வாகன மாஞ்சிம் மமுமொரு நாளு மறந்திலனே. 14

மறவே னுனையென் றும் மாராஜி மீனாட்சி மாண்புளநின்
உறவே யினிவேணடு வேனிங்கு யான்செய்த ஊழ்வினைகள்
அறவே யெனக்குன் றாரருள் தந்துநீ யாண்டிருக்கத்
துறவே யெனக்கிங்கு வேண்டுமோ செப்புவாய்
தூயவளே 15

தூய மனமுந் துயரொழிந்த சீருஞ் சுகமனைத்து
மாய பெருவாழ்வு மிங்கு பெறவுமக் காசையுண்டேல்
மாய விருணீக்கி வற்று நிதியீந்து வாழவைக்கும்
தாயி னடிபோற்றி யாவு மடைவீர் தடையிலாதே. 16

தடையிலா தெப்பணி யுஞ்சய மாகுந் தகுந்தவொரு
படையிலா தெப்பகை யும்பறந் தோடும் படிதனிலே
முடையிலா தெப்பொரு ளுந்தானே சாரும் முனிவர்சூழாம்
இடைவிடா தேத்து முமையா ளருள்தா னிருந்திடுமேல். 17

இருந்திப் பிறவியிற் பேறு பெறவுமக் கிச்சையுண்டேல்
திருந்தப் புவனங்க ளீன்றவத் தேவிபாற் சிந்தையெலாம்
பொருந்தப் பணிந்து புகழ்பாடி யகம் புளகிதமாய்
பெருந்தற் பரமா மடிபோற்றிக் காண்பீரப்
பேற்றினையே. 18

பேற்றைப் பெறலாம் பெருமை பெறலாம் பிறவியெனும்
ஆற்றைக் கடக்கு மருள்பெற லாமுமை யண்டிவரும்
கூற்றைக் கடிந்து விரட்டிட லாமிக் குவலயமாம்
சேற்றைக் கழித்து கருத்தெலாம் தாய்பாற்
றிகழ்ந்திடுமேல். 19

திகழ்வார் புவியிற் சுரர்கட்கு மேலாய்த் திருவடைந்தே
மகிழ்வார் மனைவியு மக்களுஞ் சூழவே மாநிலத்தே
புகழ்வாகி யுள்ளங் குளிர்ந்திடு வார்தாயின் பொற்பதத்தை
நெகிழ்வா கிநெஞ்சம் நிதமுந் தொழவே நினைத்தவரே. 20

நினைத்த பொழுதினில் வந்துமிடி தீர நிதியளிப்பாள்
மனத்தி லமர்ந்த கவலையெலாந்தீர்ப்பாள மாநிலத்தே
தனித்த வழிக்குத் துணையாகி சாலவுந் தாங்கிடுவாள்
அனைத்து மளிகருங்கா மாட்சி யெனவொளிர்
அம்பிகையே. 21

அம்பிகை யேநான் மறைகள் முடிவாகும் ஆரணியே
கும்பிடு வோர்குடி நாடிக் குறைதீர்க்குங் கோமளமே
உம்பரு மேநாடி யென்று மடிபோற்று முத்தமியே
நம்பிடு வேனுனை யேநான் வருவாய் நலந்தரவே. 22

நலந்தருஞ் சாலத் தனந்தரும் வாக்கு நயந்தரும்நற்
குலந்தரும் கல்வி தரும்வானோர் போற்றும் குணந்தருமித்
தலந்தனில் மேலாங் கதிதரும் என்றுந் தளர்ந்திடாத
பலந்தரும் காமாக்ஷி யம்மைக் கடைக்கண்ணின்
பார்வையதே. 23

பார்வை பதனுற் பரகதி தந்தருட் பார்வதியே
ஆர்வ முடனுனை நாடிப் புகமு மடியனுக்கு
நேர்வ துதான்நன்றோ தீதோ வறிந்திலேன் நின்னடியே
சார்வ தலாலொன்று மேமை யறியேன் தரணியிலே. 24

தரணி தனிலெழு கோடிமா மந்திர சக்தியுமுன்
சரண மடைவார்பால் சாலப் பணிந்து சரணடையும்
புரண நினதரு ளோங்கித் திகழுமப் புண்ணியர்பால்
மரண வினைதா னணுகுமோ தாயே மஞேன்மணியே. 25

மணியே மரகத மேமது ராபுரி வாழுமையே
அணியே அடைக்கல மேமறை யோது மரும்பொருளே
பணிவே னுனைத்தின மேபரி வாகிப் படிதனிலே
துணையே புரிந்தெனை நீகாத் தருளே துரந்தரியே. 26

துரந்த ரியேதூ மணியே சுகமீயுஞ் சுந்தரியே
நிரந்த ரியேநின் மலையே நிலையாம் நிதியருளும்
புரந்த ரியேபூ ரணியே புவியீயும் புண்ணியளே
வரந்த ரவேவந் தருள்வாய் எனையாளும் வண்ண முமாய். 27

வண்ணம் பொழியு முமையாள் வனச மலர்ப்பதத்தை
திண்ணந் திகழு மனத்தொடு நாடித் தினந்தினமும்
கண்ணுங் கருத்துமாய்ப் பூசித் திடுவோர் கவலையற்றுப்
பண்ணும் பணிகள் சயமாய்த் திகழ்வரே பார்தனிலே. 28

பாரும் பரவுல கும்போற் றுங் கோலப் பதமளிப்பாள்
கோரும் பொருளுங் குறையா நிதியுங் கொடுத்திடுவாள்
சாருங் கொடுவினைகள் சாடிக் களைவாள் சவிகையுடன்
பேருந் தருந்தாயைத் தேடித்திரிவீர் பேயெனவே. 29

பேய்க்கும் பிணிகட்கு மஞ்சார் நமனுக்கும் பீதிகொள்ளார்
தேய்க்கும் வறுமைக்குங் கோளுக்கு மஞ்சிடார்
தீக்குமஞ்சார்
வாய்க்கும் பகைக்கஞ்சார் அஞ்சார் புலிகட்கு
மன்னவர்க்கும்
தாய்க்குப் பெருந்தா யபிராமி செஞ்சரண் சார்ந்தவரே. 30

சார்ந்த வினை தீரும் சஞ்சலம் தீரும் சகந்தனிலே
நேர்ந்த விடர்தீரும் வெம்பிணி யுந்தீரும் நின்மலமாய்த்
தேர்ந்த மனமுடன் டாளென தென்னுஞ் செருக்குமுற்றுந்
தீர்த்து தினமுமே தாயைத் தொழுதிடுஞ் சீர்வருமேல். 31

சீரா யிருசரண் நாளும் புகழ்ந்திட்டுச் சிற்பரையின்
பேரா யிரமும் பரிவுடன் பாடியப் பேரருளை
நேரா யடைந்து திகழ்ந்த புனிதரே நின்றவினை
வாரா தொழிந்து பரகதி யும்பெறுவர் வையகத்தே. 32

வையமது போற்றும் பெருவாழ்வும் வற்று வளமதுவும்
பையவரு காலனைக் காய்ந்து கடியும் பலமதுவும்
நையவிடு நோயும் நொடியதும் வாரா நலமதுவும்
தையலுரு வாகுமென் தெய்வமே நீயருள் சாலவுமே. 3

சால நிதியுண்டாம் கோல மதியுண்டாம் சக்தியுண்டாம்
ஞால மெலாம்புகழ் வாழ்வுண்டாம் மற்றும் நமனெனுமக்
கால னணுகாக் கதியுண்டாம் சீருண்டாம் கற்பகமாம்
நீல நிறச்சக தம்பைபா லன்புள நெஞ்சினர்க்கே. 34

நெஞ்சின் கவலைநீக் குஞ்சஞ் சிதமெலாம் நீறதாக்கும்
வஞ்ச மிலாமன மாக்கும் வளமிகும் வாழ்வுமாக்கும்
பஞ்ச நீதியாக்கும் பாரிற் பரமாக்கும் பாங்குடனே
மிஞ்சு மெழிலுற்ற மீனாட்சி யம்மையின் மீன்விழியே. 35

விழிக்குத் துணையாமே தாயேநின் பாதங்கள் மெய்ம்மைநிறை
மொழிக்குத் துணையாமே நின்திரு நாமங்கள் முன்பிழைத்த
பழிக்குத் துணையாமே நின்திருத் தோளும் பயமிகுந்த
வழிக்குத் துணையாமே நின்திரி சூலமும் வாளதுமே. 3͏3

வாள்பட் டொழிந்தது பண்டா சுரன்குலம் மாதுமையாள்
தோள்பட் டொழிந்தது இங்கென் குடிச்சுமை தூயதேவிக்
காள்பட் டொழிந்த தடிமையாம் வாழ்வெலாம் அம்பிகை
யின்
தாள்பட் டொழிந்த திங்கயனிட்ட தலையெழுத்தே. 37

தலையி லெழுதிய வாறுமென் றோராதே தாரணியில்
நிலையு மிலாவேண்டும் வேண்டு மெனவே நினைவுமாகி

அலையு மடியேனை யாட்கொண் டருளல் அழகுனக்காம்
மலையின் மகளா யவதரித் திட்ட மரகதமே. 38

மரகத மேமா மணியே வரமீயு மங்களையே
புரகர னின்பங் கிலுறை எழிலாரும் பூங்கொடியே
நரகம திற்றவீ யாமல் மறைநாலும் நாட்டுகின்ற
பரகதி தந்தெனை யாள்வாய் பரையே பகவதியே. 39

பகவதி யேபார் வதியே பரையே பரம்பொருளே
மகபதி யுந்திரு மாலும் மலரோனும் வந்தனைசெய்
சுகவதி யேசுந் தரியே எழிலார் சுமங்கலையே
சகமதி லென்மிடி தீர்த்துச் சுகவாழ்வு தந்தருளே. 40

தந்த பசிக்குப் பரிந்து வமுதூட்டுந் தாயினைப்போல்
வந்த வறுமை தவிர்க்க நிதிகூட்டும் வள்ளலைப்போல்
நொந்த பொழுது தவுமொரு நண்பன்போல் நோக்கியெனைச்
சொந்த வுறவுகொண் டாள்வா யிதுநாளே சுந்தரியே. 41

சுந்தரச் செஞ்சரண் நாளும் பரிந்து துதிப்பவர்க்கு
மந்திர முந்தந் திரமு மருந்துமாய் மாநிலத்தே
அந்தமுட னுயிர மாம்பிறை காணு மருளருளி
இந்திர போகமெ லாமீந்து காப்பாள் இமயவளே. 42

இமய வளேயென் தாயே வுலகமெலா மீந்திடுமோர்
உமய வளேவொப் பரிய கதியீயு முத்தமியே
சமய மதில்வந் தடியார் குறைதீர்க்குஞ் சாம்பவியே
தமிய னெனைக்காத் தருளித் தவிர்ப்பாயென் சஞ்சலமே. 43

சஞ்சலஞ் சாரு முலகிற் கதியின்றித் தாயுனையே
தஞ்சமென் றேயுன் திருவடி நாடிச் சரணடைந்தேன்
அஞ்சலென் றேவந் தபய மளித்திவ் வவனிதனில்
கொஞ்சமுந் தீமை யணுகாச் சுகமே கொடுத்தருளே. 44

கொடுப்பதில் தாயே வுனக்கிணை யாவர் குறைவராது
தடுப்பதில் தானுனக் கீடிங் கெவராம் தவித்திடுங்கால்
அடுத்தருள் செய்வதும் நீயே பவக்கடல் ஆழ்ந்தவெனை
எடுத்தருள் செய்து கரையேற்றிக் காப்பதும் ஈசைநீயே. 45

ஈசையே என்று மடியா ருளம்வாழ் இமயவளே
ஆசையே யாகி நினதடி என்றும் அருமலரால்
பூசையே நாளும் புரியுமென் சிந்தையிற் புக்குநிற்கும்
மாசையே நீக்கிப் பரகதி தந்தருள் மாநிலத்தே. 46

மாநிலந் தன்னில் நலம்வரி னுந்தீதே வந்திடினும்
நானிதற் காளே யிலையென நீயிங்கு நன்றறிவாய்
தேனினுந் தித்திக்கும் பேறீயுந் தாயே நினைமுழுனே
நானினைந் தேத்தினேன் வாழ்விவாய் போற்றிட நாற்றி
சையே 47

நாற்றி சையும்போற் றுமொரு நலமீந்து நாளுமுனைப்
போற்று மதியு மருளி மறைநாலும் போதமெனச்
சாற்று மரிய பதமீந்து காத்துச் சகந்தனிலே
ஏற்ற மிகுத்த பவிசுதந் தாளவாய்நீ இப்பொழுதே. 48

இப்பொழு தென்னைப் பொருளாய் மதிதரு ளீந்ததனை
எப்பொழு தும்நான் மறவேன் எனையாளு மீசையுனை
முப்பொழு தும்பூசிப் பேன்காலன் என்பால் முனைந்துவரின்
அம்பொழு தென்னை யணைத்துப் பயந்தீர்ப்பாய் அஞ்சலென்
றே. 49

அஞ்ச லெனவந் தடியாரைக் காக்கு மரும்பொருளே
தஞ்ச மெனவுந் தடியே னுனையே சரணடைந்தேன
பஞ்ச நிதியும் பவிசும் புகழும் பரிந்தருள்வாய்
கஞ்சி நகர்வாழ் கலியா ணியெனுங் கருணைமாதே. 50

கருணையே பூத்திட்ட காமாட்சி யம்மையுன் கஞ்சமலர்ச்
சரணமே வல்வினை யுப்பகை யுஞ்சற்றுந் தாக்கவொணு
அரணுமே யாமென் றடைக்கல மாயினே னன்புடனே
தருணமே வந்தெனைக் காத்தருள் தாயே தயாநிதியே. 51

நிதிபெற லாம்நின் மலச்சிந் தைபெறலாம் நேரிலாத
கதிபெற லாங்கா சினியிற் சிறுதுங் கலக்கமிலா
மதிபெற லாம்மாண் புறவாழ் வுறலாம் மாநிலத்தே
பதிபெற லாம்பார் வதியாள் பதத்தினிற் பக்தியாமேல். 52

பக்தி யிலார்க்குப் பரகதி தானேது பார்தனிலே
சக்தி யிலார்க்குச் சுகவாழ்வு தானேது சாம்பவியின்

சித்தி யிலார்க்குத் திருவேது பேரேது தேகமுடன்
முக்தி யுமாமோதான் தேவி யருள்காணு மூடருக்கே. 53

மூடரு மிங்கு முழுது முணர்ந்த முனிவராவர்
காடரு மிங்கு கலையெலாம் கற்ற கவிஞராவர்
பாட வறியாப் பதருமே பண்டிதப் பண்படைவர்
நாட நலந்தரு மம்பிகை பாதங்கள் நண்ணுவரேல். 54

நண்ணுதல் வேண்டு முமையாள் திருவடி நாடிநிதம்
எண்ணுதல் வேண்டு மிடைவிடா தென்றுமே யிசையினை
பண்ணுதல் வேண்டும் பரிவுடன் பூசை படிதனிலே
கண்ணது காக்கு மிமைபோன்ற தாயருள் காணவேண்டில்.
56

காணக் கலிநீக்குங் காமாட்சி யம்மைக் கழலிணைகள்
பேணப் பெருநிதி யாங்குங் குமத்தைப் பிரியமுடன்
பூணப் பிணிநீங்கும் நாற்பத்து மூன்றும் புகழுடைய
கோணத் துநின்றுளைப் போற்றுவார்க் கென்றுங் குறைவி
லையே. 56

குறைவற்ற செல்வமும் நோயற்ற வாழ்வுங் குவலயத்தே
நிறைவுற்ற மாண்பும் நிமல மனமும் நெருங்கிடுமே
கறையுற்ற கண்டத்தர் பாலுற்ற வம்மைக் கழலிணைகள்
நெறியுற்று நித்தமும் போற்றி மகிழுறும் நேயருக்கே. 57

நேய மிகுத்திட் டுடல் குழைந் தென்பெலாம் நெக்குருக
தூய மனத்துடன் துர்க்கையை நாளுந் தொழுதிடுவோர்
ஆய கலைக ளறுபத்தி நான்கு மறிந்துலகிற்
காய முடன் வீடுகாண்பா ருலகோரின் கண்முனமே. 58

கண்ணுங் கருத்துமா யிங்கெனைக் காப்பாள் கடுகளவு
பண்ணுந் துதியைப் பெரிதாய்க் கருதிப் பயனளிப்பாள்
எண்ணும் பொழுதிலென் முன்னமே வந்து எனக்கருள்வாள்
மண்ணுஞ் சுரருல கும்போற்று மாதாவா மாதுமையே. 59

மாதா மரகத மேமது ராபுரி வாழ்மகளே
நீதா வெனக்க பயமென வோது நிமலருக்குன்
பாதா ரவிந்த மளித்துப் பயம்நீக்கும் பார்வதியே
வேதா கமப்பொருள் காணவே யீவாயுன் வித்தையதே. 60

வித்தையு மீவாய் வினயமு மீவாய் வியனுலக
மித்தையுந் தீர்ப்பாய் மிடியையுந் தீர்ப்பாய் வேதமோதும்
சத்தையுங் காணும் வகையீவாய் சாலத் தனமீவாய்
சித்தையு மிங்கு சிவமாக்கு வாய்தாயே செந்திருவே. 61

திருவே திரிபுரை யேசிற் பரையே சிவசதியே
தருவே தனமரு ளுஞ்செம் மணியே தயைசெழிக்கும்
உருவே உலகமெ லாந்தந் தருளு முவமையிலாக்
குருவே குணக்குன்றே வாராயுன் றொருள் கூட்டிடவே 62

கூடிக் களிப்பீ ருமையா ளடியாரைக் கோலமுடன்
நாடித் துதிப்பீர் நலந்தரு மங்கள நாயகியைப்
பாடிப் பரவச மாவீர் பகவதி பண்களையே
சூடிச் சுகிப்பீர் சுமங்கலை யாந்தேவி குங்குமமே. 63

குங்கு மமேகுறை தீர்க்குங் குடிகாக்குங் கோலமுடன
பொங்கு நிதியீயும் புந்தி தளராப் பொலிவருளும்
தங்கு தடையின்றித் தாயி னருள்கூட்டுந் தாரணியில்
எங்கு மதிப்பு மெழிலும் நிறையு மிதந்தருமே. 64

இதந்தரு மிவ்வுடல் வீழுமுன் தேவியி னீடிலாத
பதந்தரும் பாரிற் குறையாத் தனந்தரும் பண்புதரும்
மதந்தருங் கோரக் குணம் நீக்கி சாந்த மனமுந்தரும்
சுதந்திர வாழ்வுந் தருமபி ராமியின தூவடியே. 65

அடியிணை நாளும் நறுமலர் தூவி யருச்சனையே
படியினிற் சாலப் புரியு முமையாளின் பக்தரிடம்
மிடியெனும் பாவி யொருபொழு தும்வாரான்
வெவ்வினைகள்
நொடியினிற் சாம்பரு மாகி யகலுமே நோய்களுமே. 66

நோயென் செயும்வெவ் வினையென் செயுமெமைநோக்கிவந்த
பேயென் செயுங்கொடுங் கோளென் செயுஞ் சுடும்
பித்தர்களின்
வாயென் செயும்பகை தானென் செயுமெமை வாழவைக்கும்
தாயின் சலுகை நமக்கே யிருக்கச் சகந்தனிலே. 67

சகந்தனிற் சீரும் புகழுங் குறையாத் தனமதுவும்
அகந்தனி லென்று மகிழ்ச்சியும் பூரண வாயுளதும்

முகந்தனிற் சோபையுஞ் சோக மகன்ற வுயர்கதியும்
உகந்தினி தீவாள் அடியார்க் கபிராமி ஓடிவந்தே. 68

ஓடும் மனத்தை வுமையாள் பதங்களி லோச்சிடுவீர்
தேடும் தனத்தை அடியார் தமக்கே செலுத்திடுவீர்
பாடும் திறத்தை பகவதிக் கேகீர் படைத்திடுவீர்
நாடும் திருவருள் தானே வுமக்கு நலமிதுவே. 69

இதுவென்று சுட்டியே காட்ட வியலுமோ இன்னுமிங்கு
அதுவென்று சாற்ற வியலுமோ யாது மலாதவொன்றை
எதுவென்று கூற வியலு மெழிலா யெவைகளுக்கும்
பொதுவென்று எங்கும் நிறைந்து விளங்கும்
பொருளினையே. 70

பொருளுறும் மங்கள வாக்குறும் சீருறும் பொய்ப்புவியின்
மருளறும் மாசறும் சஞ்ச லமுமறும் அந்தகார
இருளறும் முன்வினை தீரும் பிறப்பு மிறப்புமறும்
அருளுறுஞ் சித்த முழுதுஞ் செலுத்திடி லம்மைபாலே. 71

அம்மையே வுன்னையே நம்பிநான் நாளு மடிபணிந்தேன்
இம்மையே நீயென் றுயிர்த்துணை யாய்நின்று யீடிலாத
செம்மையே யாய பதமீந் திருவினை தீரவைத்து
மெய்மையே யானவாழ் வீந்திங்கு நீக்கென் விதிதனையே. 72

விதிதனை யென்மதி யால்வென்று யிங்குநான்
வேண்டுமொரு
நிதிதனை யுமபெற் றொளிரவும் நின்பாத நீழலுறுங்
கதிதனை யுந்தந் தெனைக்காத் தருள்வையோ கற்பகமே
நதிதனை யன்னபொய வாழ்வி னிருள்நீக்கும் காரணியே. 73

காரணி யேநான் மறைகள் புகழ்ந்தேத்தும் நாயகியே
ஆரணி யேவடி போற்று மடியார்க் கருள்கொடுக்குங்
காரணி யேமா கருணை வடிவான கற்பகமே
பூரணி யேதந் தருள்நற் கதியோடு பொனனையுமே. 74

பொன்னைப் பெறவேண்டிற் போகம் பெறவேண்டிற்
பூரணமாய்
முன்னை வினைதீர வேண்டி லிங்ஙனே முக்திவேண்டில்

தன்னை யறியவும் வேண்டிற் சகம்புகழ் சக்திவேண்டில்
அன்னை பதந்தொழு தின்றே யடைவீர் அனைதுதையுமே. 75

அனைத்து மளித்துன் னருளா லவைகாக்கும் ஆயுனையே
நினைத்து தினமும் வழிபடு மேமையை நீநினைத்து
தனத்தின் பெருக்கும் தரணியிற் சீரதுந் தந்தெனது
மனத்தி லமர்ந்திட் டருளிவாய் என்று மகிழ்நானே. 76

நானென்று மார்தட்டி நம்முளே வாழுமோர் நாயகியை
வானென்றுங் காலென்றுந் தீயென்றும் நீரென்றும்
பாருமென்றும்
ஆனென்றும் பைந்தரு வென்றும் மணியென் றும் ஆரமுதத்
தேனென்றுங் கூறித் திரிவதாற் சீராமோ சித்தமுமே. 77

சித்தஞ் சிவமாக வோர்மருந் திங்குணடு தேவிதனை
நித்தந் தொழுது வுடல்பொரு ளாவியும் நின்மலைக்கே
தத்தஞ் செயுமன மாய்யான் எனதற்றுச் சாலவுமே
சுத்தந் திகழு மொழுக்கமுட னின்சொலே சொற்குணமே. 78

குணத்திற் சிறந்தோரைத் தெய்வமாய்வானோருங்குடும்பிடுவர்
பணத்திற் சிறந்தோரைத் தெய்வமாய் போற்றுவர்
பாருளோரே
மணத்திற் சிறந்த மலர்கொண்டு பூசித்தேன் மாதுமையே
கணத்திற் பணமுங் குணமுங் கொடுத்துக்கா
கண்ணிமைபோல். 79

கண்ணை யளித்தது காமாட்சி தேவியைக் காண்பதற்கே
பண்ணை யளித்தது பார்வதி பண்பினைப் பாடுதற்கே
மண்ணை யளித்தது சீர்பெற்று மும்மல மற்றிடவே
எண்ணியிவ் வண்ண முனதா ருள்காண்ட தெந்தநாளோ.

நாளென் செயும்பகை யென்செயு மிங்கு நவவகையாம்
கோளென் செயும்வெவ் வினையென் செயுமென்றுங்
கோலமுடன்
வாளொன் றினையேந்திக் கண்ணிமை போற்காக்கு
மாதுமையாள்
தாளென்றுங் கருது நாமிங் கெதற்குந் தயங்கிடோமே. 81

தயங்கிடோம் காலனுக் குந்தந் திரஞ்செய் சமர்த்தருக்கும்
மயங்கிடோம் மந்திர மாய மலைகண்டும் வல்வினைக்குப்
பயந்திடோம் நாளுக்குங் கோளுக்கு மஞ்சோம் பகைவரிடம்
நயந்திடோம் காமாட்சி யாரருள பெற்றிட்ட நாமுமிங்கே.82

நாமே நமக்குப் பகையும் நலந்தரும் நண்பனுமாய்
ஆமே யெனமறை யோது வதாலிங்கு அன்புடனே
பூமேல் மகளுங் கலைமகளும் போற்றும் பொற்புளாளை
நாமே யெனவெண்ணிச சித்தந் தெளிந்தலே நன்மையாமே.83

நன்மை யெதுவென்றுந் தீமை யெதுவென்றும் ஞாலமதில்
புன்மை யறிவுள நாமிங் கறியோமே பொற்பளிக்குந்
தன்மை யுளதா யபிரா மிநீயேதான் தஞ்சமென
மென்மலர்ப் பாதமே பற்றினேம் ஆகாது வேறுநம்மால். 84

நம்மா லியலா தியலாது தாயான நாரணியே
அம்மா அமுதே அருளே தருவே அடைக்கலமே
பெம்மா னரனிடப் பெண்மணி யேயெனப் பேசிடாது
சும்மா விருந்திங் கசையாத தீபம்போல் தூங்கிடவே. 85

தூங்காத தூக்கமென் பார்சோதி யெனபார் துரியமென்பார்
ஓங்கா ரமென்பார் பலவென்பார் ஒன்றென்பார்
உண்மையென்பார்
ஏங்கா திவற்று ளுமையாள் பதத்தும தெண்ணமெலாம்
பாங்கா யமைத்திடிற் கிட்டுமே மெய்யாம் பலமெலாமே. 86

பலமே கருதாது பண்ணுமோர் பூசையே பார்தனிலே
நலமே தருமென று சாததிரஞ் சாற்றிடும் ஞானமுடன்
நிலமேற் பொருளொன்றும் வேண்டா தபிராமி நேயமதே
தலமேல் விரும்புவோர் மாணபுடன் வாழ்வரே
தாயுடனே. 87

தாயைத் தனிமுதற் சாட்சியாந் துங்கத் தருவதனை
மாயப் பிணிக்கு மருந்தெனு மந்திர மாமணியை
தூயப் பெருவாழ் வளிப்பாளை நித்தந் தொழுதிடுவோர்
காயத் துடன்விடுங் காசினியிற் சிருங் காணுவரே. 88

காணுவீர் கண்களாற் காமாட்சி யம்மைக் கழலிணைகள்
பேணுவீர் பண்களாற் பார்வதி தேவியை பெண்பழிக்கு
நாணுவீர் யானென தற்றிருப் பீரன்பர் நட்பினையே
பூணுவீர் நன்கு பெறுவீர் இணையிலாப் பூதியதே. 89

பூதி பெறவேண் டிலிங்கு புகழ்வேண்டிற் பொன்னைவேண்
டில்
மேதி னியில்நெடு நாள்வாழ வேண்டில் விதியகன்று
தீது மகலவும் வேண்டில் தொழுவீர் திருவருளும்
ஆதி பராசக்தி காமாட்சி தேவியா மன்னையையே. 90

அன்னை யிருரரு ளெவ்வாறே யிங்குமக் காகிடுமேல்
பொன்னும் பெறலாம் புகழ்பெற லாம்பூதி பெற்றிடலாம்
தன்னை யறியு மறிவுற லாமபாரில் தானிழைத்த
முன்னை வினைதீர்ந்து காணலா மக்காய முக்தியுமே. 91

முக்தி யளித்திடும் மும்மலமுந் தீர்த்திடும் மோகனமாஞ்
சக்தி யளித்திடுந் தாய்போலத் தாங்கிடும் தாரணியில்
பக்தி யளிக்கும் பரகதி யீயும் பலவிதமாம்
சித்தி யளிக்குஞ் சிவகாம நாயகி சிந்தனையே. 92

சிந்தித் திடுவீர் சிவகாமித் தாயைத் தினந்தினமும்
வந்தித் திடுவீர் மாதுமையாள் பாத மலரிணைகள்
இந்தப் பிறவியிற் பேறடைந்து நாளு மெழிலடைவீர்
சந்தத் திருப்புகழ் பாடும் பகவதி தாசராயே. 93

தாசராய்த் தாசருக் குந்தா சருமாய்த் தரணிதனில்
மாசிலாத் தூய மனத்தராய் என்றுமே மாதுமையாள்
நேசராய்க் கோலக் குணத்தராய் நிற்கும் நிமலருக்குப்
பேசவே மாட்டாப் பெரும்பேறு தானுய்ப் பிறந்திடுமே. 94

பிறந்தவ ரென்று மிறப்ப துறுதியே பின்னுமிங்கு
இறந்தவர் மீண்டும் பிறப்ப துமுறுதி யென்றிருக்கச்
சிறந்த பதமீயுந் தாயின் திருவடிச் சீரதனை
அறிந்திங் கிறவாத பேற்றைப் பெறற்பே றறிவுமாமே. 95

அறிவை யறிவ தறிவென்பார் சான்றோர் அவனிதனில்
இறைவி யருளின்றி யெவ்வா றறிவார் மியம்பிடுவீர்

மறைவு முதிப்பு மிலாள் அபி ராமியை வாழ்த்திடுமோர்
செறிவு மிகுத்திங்கு சாலப் பெறுவீரச் சீரறிவே. 96

சீரறி வுற்றாலுஞ் செம்பதங் காணார் செகந்தனிலே
ஆரறி வுற்றாலு மாகா துமையாளின் ஆரருளே
பேரறி வுற்றதாய் பாதத்தே பக்தி பிறக்குமந்த
ஓரறி வுற்றா லலாது விளங்காதே உண்மைதாளே. 97

உண்மை யுரைத்து வுறுதி மிகுத்து வுளமதிலே
வெண்மை மிகுத்து வெகுளி யொழித்து விருப்பமருள்
தண்மை மிகுத்த வுமையாள் திருவடித் தாசராகில்
பெண்மை மிகுத்த அருப்பெரும் பேற்றினைப் பெற்றிட
லாமே. 98

பெற்றிடு வாரெச் சுகமும் பரமாகும் பேற்றையுமே
பற்றொடு தாயி னடிபோற் றுமடியார் பார்தனிலே
சற்றுமே வாடா மனமுற் றிணையிலாச் சக்தியுடன்
முற்றுமே தீதற்று வாழ்வார் புகழ்ந்திட மூவுலகுமே, 99

மூவுல கும்போற்றுங் காமாட்சி யம்மையை முற்றும்நம்பி
ஆவியு டற்பொரு ளர்ப்பண மாக்கி அருமலர்கள்
தூவிநி தம்பாதம் போற்றித் தொழுதிடுந் தூயருக்கே
தேவியி னாரருளுஞ்செம் பதமுந் திருவுமாமே. 100

திருவைத் தருவாளச் செந்தா மரைவாழ் திருமகளே
மருவிக் கலையறி வூட்டி யருள்வாளவ் வாணியுமிவ்
விருவர்க்கு மேலா மிகசுக மீந்திங் கிணையிலாத
கருவிற் பிறவா கதிதருந் தாய்வாழ்வாள் கஞ்சியிலே. 101



## காமாக்ஷி கலிவெண்பா

அஞ்ச லெனவந் தடியாரை யாட்கொள்ளுங்
கஞ்சி நகர்வாழுங் கற்பகமே     நெஞ்சிலுனை
எந்நாளு மேத்தும் எளியேனை ஏற்றருள
நந்தா எளிதுவன்றோ நாரணியே     பொன்னுனை
பூமகளும் போற்றும் புனிதையே பூரணியே
நாமகளும் போற்றும் நலமிகுத்த     கோமகளே
தானவரை வாட்டியுன் செஞ்சரண் தஞ்சமெனும்
வானவரை வாழ்வித்த மங்களையே     யானெனது
முற்றும் தவிர்த்த முனிவருளத் தாமரையைச்
சற்றும் பிரியாத சாம்பவியே     குற்றமெலாஞ்
சாலப் பொறுத்துத் தயைகூருந் தாயேநின்
கோலப் பதமிரண்டுங் கும்பிட்டு     ஞாலமிசை
எந்தத் திசையிலுமே யீடிலா நின்னரிய
சந்தத் திருப்புகழே சாற்றிநிதம்     வந்திக்குந்
தண்ணடியார்க் குற்றவினை சாடிக் களைந்தவர்தம்
எண்ணமெலா மீடேற வைத்தருளுந்     தண்ணளியே
அத்தி முகத்தோனு மாயெனவே போற்றுமொரு
சக்தி மிகுத்தொளிருஞ் சாம்பவியே     முக்திதரு
வேலோனும் போற்றிசெயும் வேத முடிப்பொருளே
மாலோனின் சோதரியாம் மாதுமையே     மாலாகிச்
சங்கரனை மேவிச் சகமெல்லா மீன்றருளும்
மங்களையே மாதா மனோன்மணியே     இங்கெனது
சித்தமிசை சீர்கொண்ட சிங்கார ரூபியே
அத்துவித மெய்ப்பொருளா மம்பிகையே     உத்தமியே
ஊழ்வினை முற்று மகற்றியிங் கொப்பற்ற
வாழ்வினை யீயு மரகதமே     ஏழ்வகையாந்
தொந்தப் பிறவித் துயர்நீக்கித் தூயகதி
இந்தப் பிறவியி லீந்தருளுஞ்     சுந்தரியே
ஆக்கல் அளித்தல் அருளல் மறைத்தலொடு
நீக்கல் வினைபுரியும் நித்தியளே     ஊக்கமுடன்
கண்ணிமைபோற் காக்குங் கருணைமிகுங் கற்பகமே
பண்ணிசைபோ லெங்கும் பரவியருள்     புண்ணியளே

வேண்டுமவர் வேண்டியதை வேண்டியவா றீந்தவரை
ஆண்டுநிதங் காக்கு மரும்பொருளே          தாண்டவமே
ஆடுநட ராஜனுட னாடியிட பாகமதை
நாடுமபி ராமியென நாயகியே          பாடுமவர்
மாசை யகற்றியென றாவலர்க்கு நிதியீந்து
ஆசை மிகுந்தவரை யாட்கொள்ளும்          ஈசையே
எண்ணுறப் போதென் கனவிற் சுமங்கலியாய்க்
கண்ணுறக் கண்டவோர் காட்சியைநான்          எண்ணேனோ ?
சின்னக் குழவியென வாக்கியப்பு மீதிட்டு
இன்னமுத மூட்டியவோ ரினகனவு          முன்னேனோ ?
கட்டி யணைத்துக் கடைக்கண்ணின் னோக்கதனாற்
கொட்டிக் குளவிபோ லாகியிங்          மட்டிக்கு
பாதப் புகழ்பாட வேதப் பொருளகாண
போதம் புகட்டியதும் பொய்யலவே          மாதுமையே
அம்பிகையே ஆருயிரே அன்பருளக் கற்பகமே
நம்பிடுவோர்க் குற்றவொரு நற்றுணையே          எம்பிழைகள்
முற்றும் பொறுத்தருளி மும்மலமுந் தீர்த்தருளி
சற்றுந் தயங்காது தாங்கியிங்கு          குற்றமிலாத்
தூயப் பெருவாழ்வு தந்தருளுஞ் சுந்தரியே
மாயப் பிணியகற்று மாமணியே          ஆமெனவே
மண்ணவரும் விண்ணவரும் மாலயனு மிந்திரனுந்
திண்ணமுடன் போற்றுந் திரிபுரையே          வண்ணமுடன்
சோகமெலாந் தீர்த்தருளுஞ் சோபைச் சுமங்கலையே
மோக மெலாந் தீர்க்கு முழுமுதலே          ஏகமாய்
நித்தியமாய் நிட்களமாய் சச்சிதா னந்தமுமாய்
சத்தியமாய் சாலவுலகெல்லாமாய்          சக்தியுமாய்
சித்தாகி எங்குஞ் சடமாகிச் சித்தமுறைச்
சத்தாகி முத்திக்கு வித்தாகி          எத்திக்கும்
நீக்கமற வேநிறையு மெய்ப்பொருளே நிட்களமே
நோக்கதனாற் பேற்றை நொடியிலருள்          பாக்கியமே
தன்கனவி லேமனது காண்பானுங் காட்சியுமாய்
நன்கதனின் சக்தியினால் நாட்டிடினும்          அங்கதனின்

அத்துவிதங் குன்று தமைந்திருக்கு மாபோன்று
சித்தான சத்தியமாஞ் செம்பொருளே மெத்தவும்நீ

சொற்பனங் காணுமொரு யீசனுமாய் இவ்வுலகு
பற்பலவு மாகிப் பரந்திடுவாய் கற்பகமே

மண்ணுமாய்த் தண்ணுமாய் வாயுவாய்த் தீயுமாய்
விண்ணுமாய் இந்திரிய மைந்துமாய் எண்ணமாய்

இன்பமாய்த் துன்பமாய் எல்லாச் செயலுமாய்
அன்புமாய் அனைத்துமாய் ஆகிநின்ற அம்பிகையே

எப்பொருளும் நின்பொருளாய் எச்செயலும் நின்செயலாய்
இப்படியுன் சீரிருக்க மெய்த்துறவிங் கெப்படியாம்?

பொன்னார் திருமேனிப் பூங்கொடியே நின்னெழிலை
என்னால் எடுத்தோத விங்காமோ அன்னையுன்

மென்மலர்நேர் மேனியுங் கார்குழலும் பொன்முடியும்
புன்முறுவல் பூத்துப் பொலிவுற்ற இன்முகமும்

வாணுதலுக் கேற்ற வளைபுருவ மத்தியத்திற்
காணுமொரு குங்குமத்தின் கண்ணியமும் பேணவெனப்

பொங்குங் கருணைக் கயல் விழிகள் பொற்புடனே
எங்குமுள வன்பர்க் கிரங்கியருள் மங்களமும்

கன்னக் குழிக்கிசைந்த நாசிக் குமிழ்மீது
வன்னச் சுடர்விடுக்கும் வச்சிரமும் மின்னுமிரு

தாடங்க மாண்பதுவும் புன்முறுவற் செவ்விதழுங்
கோடன்ன கொங்கையின் கோமளமும் சுடற்ற

மார்பினிடை முத்துநவ ரத்னமணி மாலைகளுங்
கார்வண்டு மொய்க்குமலர்த் தார்களொடு சீர்வடிவில்

செக்கச் சிவந்தபொற் சீலை யணிந்துமதற்
கொக்கப் படிந்தொளிரும் அங்கியுடன் மிக்கவுமே

மின்னிட் டிடையதனில் மெத்தச் சலங்கையுடன்
பொன்னொட்டி யாணமொடு பொன்வளைகள் மின்கரத்தில்

அங்குசமும் பாசமு மஞ்சுமலர்ப் பாணமும்
செங்கரும் புத்தனுசுஞ் சேர்ந்தொளிரப் பங்கயமாம்

செஞ்சரணிற் கொஞ்சுஞ் சிலம்புஞ் சதங்கையும்
பஞ்சமுக னும்பரவு பாதமதும் கெஞ்சுருகிப்
பாடுமடி யார்களிடர் தீர்த்துமிடி நீக்கிநிதி
கூடுமொரு பேற்றைக் கொடுக்குமுனை நாடியே
தஞ்சமெனும் நாயேற்குச் சற்கதிநீ தந்துதவி
அஞ்சலென ஆட்கொண் டருள்.

## அஷ்ட மூர்த்தி சௌபாக்ய அஷ்டகம்

### கணபதி

மங்கள தாயக விக்னவி நாயக சுரகண ஸேவித சிவசுதனே
சங்கரி கௌரிக்ரு பாகரி சூலினி சாம்பவி தந்தருள் பால
கனே
சங்கடம் நீங்கிடச் சடுதியில் வந்துநீ சகல சௌபாக்கியம்
தந்தருள்வாய்
ஜயஜய கஜமுக மூஷிக வாகன முத்தமிழ் நாயக கண
பதியே. 1

### சண்முகன

அரன் நுதல் அறுசுடர் அறுமுகவெனவாய் சரவணப் பொய்
கையில் வந்தவனே
அரியய னரனுட னமரர்க ளனைவரும் அடிதொழு மெழி
லுடைப் பாலகனே
விரைவினில் வேலொடு மயிலினில் வந்துநீ சகலசௌ பாக்கி
யம் தந்தருள்வாய்
ஜயஜய அறுமுக குருபர சிவசுத சரவண பவகுக சண்முக
னே. 2

### சாஸ்தா

பூரணை புட்கலை யோடும கிழ்ந்துவந் தென்குலம் போற்றிட
வந்தவனே
வாரண முகவனுக் கிளையவ னாகியே வண்புலி வாகனங்
கொண்டவனே

சாருமென் துயர்களைச் சடுதியில் நீக்கிநீ சகலசௌ பாக்கி
யந் தந்தருள்வாய்
ஜயஜய ஹரிஹர புத்திர னேயொரு சபரிம லைக்கதி பித்தி
ரனே.

சிவன்

சிவசிவ ஹரஹர எனவரும் அடியர்கள் தீவினை தீர்த்தரு
ளீஸ்வரனே
பவமிகு ஜனனம ரணவினை நீக்கிடும் பகவதி பார்ப்பதி பங்
கினனே
புவிதனி லிடர்பகை பிணிகளைப் போக்கிநீ சகலசௌ பாக்கி
யம் தந்தருள்வாய்
ஜயஜய சங்கர பரமக்ரு பாகர சாம்பச தாசிவ சபாபதே.

விஷ்ணு

அடல்மிகும் அரியென அரவணை துயில்கொளு முரகரி யென
வரு மாயவனே
நொடியினி லடியர்க ளிடர்களைந் தருள்வதே நோன்பது
வாய்க்கொளும் நுண்ணியனே
சடுதியி லடிமையென் இடர்கலி தவிர்த்துநீ சகலசௌ பாக்
கியம் தந்தருள்வாய்
ஜயஜய மாதவ ஸ்ரீதர கேசவ கோகுல வாஸக்ரு பாகரனே.

இலக்குமி

பூமக ளேயென வானவர் மானிடர் போற்றிடு மெழிலு
டைப் புண்ணியளே.
மாமிடி தீர்த்தடி யார்க்கருள் செய்திடும் மாதவன் மார்
புறை மாதவியே
தாமதமின்றியென் னிடர்கலி தீர்த்துநீ சகலசௌ பாக்கியம்
தந்தருள்வாய்
ஜயஜய பங்கஜ வாஸினி யேபரி பூரணியேசக லைஸ்வரியே.

சரஸ்வதி

வாக்கினை யீந்தருள் தேவிக லாவதி மதியினில் நின்றொளிர்
சாரதையே

நோக்கத லொரு மூடனை யுங்கவி யாக்கிட வல்லவோர் பாரதியே

சீக்கிரம் வந்துநீ யென்மிடி தீர்த்துநீ சகலசௌ பாக்கியந் தந்தருள்வாய்

ஜயஜய வாணிச ரஸ்வதி யேசக தீஸ்வரி யெபர மேஸ்வரியே.

இராஜ ராஜேஸ்வரி

மங்கள தாயினி சங்கர மோகினி மஞ்சுள பாஷிணி மதிவதனீ

பங்கஜ பாதம தாலுல கங்களைப் பரிவுடன் போற்றிடுங் காமாக்ஷி

சங்கடம் நீங்கிடச் சடுதியில் வந்து நீ சகலசௌ பாக்கியம் தந்தருள்வாய்

ஜயஜய மங்கள சண்டிகையேசக தம்பிகை யேசிவ சங்கரியே.

## சகல சௌபாக்ய அஷ்டகம்

மங்கள மாலினி மன்மத ரூபிணி மஞ்சுள பாஷிணி மதி வதனீ

சங்கடம் நீங்கிடச் சடுதியில் வந்து நீ சகல சௌபாக்கியந் தந்தருள்வாய்

பங்கயன் மாலொடு பரமனும் பணிந்திடும் பதுமப தங் கொளும் பகவதியே

ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி 1

கஞ்சியில் மிஞ்சிய கருணையு டன்திகழ் கற்பக மென்னுளிர் சிற்பரையே

தஞ்சமென் றுன்சரண் சாருமெ னக்குநீ சகலசௌ பாக்கியந் தந்தருள்வாய்

அஞ்சிய நெஞ்சுட னடிகள்ப ணிந்திடும் அனபருக் கபயம ளிப்பவளே

ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 2

பூமகள் நாமகள் பூவடி போற்றிடப் பொலிவுடன் கொலு கொளும் பூரணியே

தாமத மின்றியென் சஞ்சலம் தவிர்த்து நீ சகல சௌபாக்கி
யந் தந்தருள்வாய்
கோமள முகமதிற் குறுநகை கொஞ்சிடக் குங்கும முந்திகழ்
கோமகளே
ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 3

பங்கய னுன்பதத் தூளிக ளாற்பல வண்டமும் நன்கு
படைத்தனனே
சங்குடை மாயவன் தன் தலை ஆயிரம் கொண்டவை சீர்படத்
தாங்கினனே
சங்கர னிறுதியிற் சாம்பரு மாக்கியே தன்நுத லொளிபெறத்
தரித்தனனே
ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 4

கற்பக வல்லியுங் கஞ்சிகா மாக்ஷியுங் கயற்கண்மீ னாக்ஷியு
மானவளே
சற்கதி கூடிட சஞ்சல மோடிட சகலசௌ பாக்கிய ம் தந்
தருள வாய்
பொற்பதம் போற்றிடும் புண்ணியர் கவலைகள் போக்கிய
ருள்புரி பூரணியே
ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 5

ஆதியு மந்தமு மற்றசு தந்தரி அகிலமும் தானென ஆனவளே
பாதச ரோருகம் பணியுமெ னக்குநீ பரிந்துசௌ பாக்கியம்
பல்கிடுவாய்
வேதமெ லாம்புகழ் மீன்விழியாள் பசும் பொன்னென மின்
னிய மேனியளே
ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 6

நாதமும் பிந்துவும் நாடுமெய் ஞானமும் நானென நன்குமொ
ழிந்தவளே
வேதனை நீங்கிட வெம்பிடி தீர்ந்திட விரைவில்சௌ பாக்கி
யம் தந்தருள்வாய்
போதம லாம்தரும் புண்ணிய ளேபல போகமு மீந்தருள்

ஜயஜய மங்கள கவுரிய கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 7

ஜயஜய மங்கள சண்டிகை யேஜய ஜயஜய சாமுண்டேஸ்வரியே
ஜயஜய ஜயசௌபாக்கிய சுந்தரி ஜயமகி ஷாஸுர மர்த்தனியே
ஜயஜய ஜயலலி தாம்பிகை யேஜய ஜயபுவ னேஸ்வரி பைரவியே
ஜயஜய மங்கள கவுரிம கேஸ்வரி திரிபுர சுந்தரி காமாக்ஷி. 8

## அம்பாள் நாமாவளி

### 1

ராகம்: மத்யமாவதி ] பாஹி பாஹி [ தாளம : ஆதி

பாஹி பாஹி ஓம் சக்தி மகேஸ்வரி
பாஹி பாஹி மாம் பரம கல்யாணி ;
பாஹி பாஹி பரி பூர்ண கடாக்ஷி
பாஹி பாஹி மாம் பரம தயாபரி ;
காமகோடி மா பீட விலாஸினி
கஞ்சி காமாக்ஷி மாம் பாஹி ;
காத்யா யனிமா திரிபுர சுந்தரி
கவுரி மனோகரி மாம் பாஹி ;
பாஹி பாஹி புவ னேஸ்வரி மாதா
பாஹி பாஹி பர மேஸ்வரி லலிதா :
பாஹி பர்வத ராஜகு மாரி
பாஹி பயிரவி தேவி பவானி ;
பாஹி மாம்வி சா லாக்ஷிமீ னாக்ஷி
பாஹி கற்பக வல்லிமாம் பாஹி ;
பாஹி பாஹி மாம் பர்வத வர்த்தனி
பாஹி பாஹி மாம் பார்வதி தேவி ;
சந்த்ர சேகரி மாம் பாஹி
சௌபாக்ய தாயினி மாம் பாஹி ;
பாஹி சண்டிகா தேவி மாம் பாஹி
சாமுண் டேஸ்வரி மாம் பாஹி ;
பாஹி அம்பபர மேஸ்வரி மாதா
பாஹி மாம் பாஹி அகிலாண் டேஸ்வரி ;

பாஹி மாம் பாஹி தீன தயாபரி
சம்பு மோகினி மாம் பாஹி ;
பாஹி பாஹி மா மாயா தேவி
பாஹி பாஹி மா லக்ஷ்மி தேவி
பாஹி பாஹிமா சரஸ்வதி தேவி
பாஹி மா காளி மாம் பாஹி
பாஹி மாம் பாஹி துர்க்கா தேவி
பாஹி அன்ன பூரணி மாம் பாஹி ;
பாஹி பாஹி மது கைடப மர்த்தனி
பாஹி பாஹி மகி ஷாசுர மர்த்தினி ;
சண்ட முண்டமர்த் தனி மாம் பாஹி
சும்பநி சும்பசம் ஹாரிணி பாஹி ;
பாஹி பாஹி பர ப்ரம்மசொ ரூபிணி
பாஹி ப்ரம்மாணி தேவி மாம் பாஹி
பாஹி வைஷ்ணவி தேவீ மாம் பாஹி
பாஹி வாராகி தேவி மாம் பாஹி
நாரஸிம்மி மாம் பாஹி பாஹி மாம்
ரௌத்திரி தேவி மாம் பாஹி ;
பாஹி ஐந்திரி தேவி மாம் பாஹி
பாஹி கௌமாரி தேவி மாம் பாஹி
பாஹி சிவதூதிகா மாம் பாஹி
மங்கள தாயகி மாம் பாஹி

## 2

பிளாக் ] சோடசாக்ஷரி சரணம் [ சா||

ஓம் சக்தி மாதா சரணம் சரணம்
ஓங்கார ரூபீ சரணம் சரணம்
கஞ்சிகா மாக்ஷி சரணம சரணம்
காசிவி சாலாக்ஷி சரணம் சரணம்
ஏகார ரூபீ சரணம் சரணம்
ஏகாம்பர நாயகி சரணம் சரணம்
ஈகார ரூபீ சரணம் சரணம்
ஈசைமீ னாக்ஷி சரணம் சரணம்

லலிதா மகா தேவி சரணம் சரணம்
லாவண்ய ரூபீ சரணம் சரணம்
ஹ்ரீம் கார ரூபீ சரணம் சரணம்
ஹ்ருத்பத்ம வாஸினி சரணம் சரணம்
ஹகார ரூபீ சரணம் சரணம்
ஹம்ஸ வாஹினி சரணம் சரணம்
ஸரஸ்வதி ரூபீ சரணம் சரணம்
ஸர்வ காரணி சரணம் சரணம்
கமல லோசனி சரணம் சரணம்
கற்பக வல்லி சரணம் சரணம்
ஹயக்ரீவ சோதரி சரணம் சரணம்
ஹரட்ரிய நாயகி சரணம் சரணம்
லக்ஷ்மி தேவி சரணம் சரணம்
லயமன ரூபீ சரணம் சரணம்
ஹரீம் மந்த்ர ரூபிணி சரணம் சரணம்
ஹ்ரீங்காரப் ருங்கி சரணம் சரணம்
ஸகல கலாரூபீ சரணம் சரணம்
ஸௌபாக்ய தாயினி சரணம் சரணம்
கல்யாண ரூபி சரணம் சரணம்
கவுரிய ஜேகரி சரணம் சரணம்
லலிதாங்க மோகினி சரணம் சரணம்
லகார ரூபிணி சரணம் சரணம்
ஹரீம் ஐம் க்லீம் ச்ரீம் சரணம் சரணம்
ஹ்ரீம் க்ரீம் ஐம் க்லீம் சரணம் சரணம்
ச்ரீம் மந்த்ர ரூபிணி சரணம் சரணம்
ச்ருங்காரப் ருங்கி சரணம் சரணம்.

## 3

தோடி ] பாஹி மாம் ரக்ஷமாம் [ ரூபகம்

சந்த்ர சேகரி சம்பு மோகினி
ஸ்யாம சுந்தரி பாஹி மாம் ;
சண்ட முண்டாதி சும்ப சும்பசம்
ஹார காரணி ரக்ஷ மாம் ;
மந்த்ர ரூபிம ஜேன்ம ணிப்பரப்
ரம்ம ரூபிணி பாஹி மாம் ;

மாம கேஸ்வரி சோம சேகரி
மங்க ளேஸ்வரி ரக்ஷ மாம் ;
பந்த மோசனி பாப நாசினி
பரம மங்கள தாயகி
பக்த ஹ்ருத்கம லாஸனிச்சிவ
காம சுந்தரி ரக்ஷமாம்
சுந்த ரேஸ்வரி மந்த ரேஸ்வரி
சுகுண சுந்தரி பாஹி மாம்
சோக நாசினி சுமுக பாஷிணி
சூலி பயிரவி ரக்ஷ மாம்

## 4

செஞ்சுருட்டி ] ஆதி

இமகிரி ராஜகு மாரிப வானி
ஈஸ்வரி பரம க்ருபாகரி கௌரி
அமல நாயகி அகிலாண் டேஸ்வரி
ஆரணி நாரணி தேவி மீனாக்ஷி
காம கோடிபா பீடவி லாஸினி
கவுரிம னோஹரி கந்தசிகா மாக்ஷி
சோம சேகரி துக்கநி வாரிணி
சுந்த ரேஸ்வரி ஜோதிஸ்வ ரூபிணி
மதுர மதுர சுப மஞ்சுள பாஷிணி
மகிஷா சுரமர்த்த னிபர மேஸ்வரி
மதுகை டபமர்த் தனிஜக தீஸ்வரி
மதுரா புரிவ ராஜமீ னாக்ஷி
சண்டி சாமுண்டி சாமள சுந்தரி
சகல சௌபாக்ய தாயினி தேவி
அண்ட நாயகி ஆதிப ராதனி
மண்ட லேஸ்வரி மதுர மகேஸ்வரி
சந்த்ர சேகரி ராஜரா ஜேஸ்வரி
சம்பு மோகினி சோகநி வாரிணி
மந்த்ர ரூபிணி லலிதா மகேஸ்வரி
மங்கள பைரவி திரிபுர சுந்தரி
பங்கஜ லோசனி பத்மநி வாஸினி
பரப்ரம்ம ரூபிணி பரம சுதந்தரி
சங்கர நாயகி சாதுசம் ரக்ஷகி
மங்கள தாயகி மாபர மேஸ்வரி

## 5

## அம்ப பரமேஸ்வரி

அம்பர பேஸ்வரி—அகிலாண் டேஸ்வரி
சம்புமன மோகினி—சாம்ராஜ்ய தாயினி
அம்பல நாயகி—ஆதிப ராசக்தி
அம்புஜ லோசனி—ஆனந்த ரூபிணி
சங்கர நாயகி—சாமளா சுந்தரி
மங்கள தாயகி—மாதவ சோதரி
சங்கட ஹாரிணி—சாது சம் ரக்ஷகி
துங்கம னோகரி—சூலிக பாலினி
தீனத யாபரி—திரிபுர சுந்தரி
மானஸம் ரக்ஷணி—மதுரை மீனாட்சி
கஞ்சிகாமாட்சி—காசிவி சாலாட்சி
ரஞ்சித லோசனி—ராஜரா ஜேஸ்வரி
பஞ்சத சாக்ஷரி—பரம கல்யாணி
மஞ்சுளா பாஷிணி—மங்கள கௌரி
நித்யகல் யாணி—நிர்மல சுந்தரி
பக்த பரிபாலி—பரசுக தாயினி
பாபவி மோசனி—பர்வத வர்த்தனி
பந்த விமோசனி—பார்வதி தேவி
சுந்தர வதனி—சுகுண மனோகரி
மந்திர ரூபி—மாதாம னோன்மணி
கற்பக வல்லி—கௌரி மனோகரி
அற்புத சுந்தரி—அமல மகேஸ்வரி
லலிதாங்க நாயகி—லயமன மோகினி
நீலி நிரஞ்சனி—நிமல மனோன்மணி
சூலி சுதந்தரி—பாலை பரம்பரை
பவதி பகவதி—யுவதி திரிபுரை
சிவ மனோகரி—சிவகாம சுந்தரி
பாஹி பாஹி மாம்—கஞ்சி காமாட்சி
பாஹி பாஹி மாம்—பவானி தேவி
பாஹி பாஹி மாம்—காசி விசாலாட்சி
பாஹி பாஹி மாம்—மதுரை மீனாட்சி

## 6

பியாக் ] ஜய சந்த்ர சேகரி [ சாபு

ஜய சந்த்ர சேகரி கௌரிம ேனாகரி
ஜய சுந்த ரேஸ்வரி சாமளா சுந்தரி
ஜய புவ னேஸ்வரி திரிபுர சுந்தரி
ஜய பர மேஸ்வரி தேவிசர் வேஸ்வரி
ஜயமா மகேஸ்வரி ராஜரா ஜேஸ்வரி
ஜயசம்பு மோஹினி சௌபாக்ய தாயினி
ஜய மீன லோசனி சூலிம னோன்மணி
ஜயபத்ம லோசனி தேவிப வானி
ஜயபரி பூரணி தீனத யாபரி
ஜயப்ரம்ம ரூபிணி காமக லாரூபி
ஜயசிம்ம வாஹினி மோகன சுந்தரி
ஜயமகா லட்சிமி லலிதா மகாதேவி
ஜயசார தாதேவி ஜயமகா பைரவி
ஜயகற்ப காம்பிகே ஜயமங்க ளாம்பிகே
ஜயசௌந்த ராம்பிகே கோமதி யம்பிகே
ஜயமது கைடப மர்த்தனி ஜயஜய
ஜயமகி ஷாசுர மர்த்தனி ஜயஜய
ஜயசண்டி காதேவி ஜயசாமுண்ட டேஸ்வரி
ஜயமகா லட்சிமி வாணீ ஜயஜய
ஜயஜய ஜயஜய கஞ்சி காமாட்சி
ஜயஜய ஜயஜய மதுரைமீ னாட்சி
ஜயஜய ஜயஜய காசிவி சாலாட்சி
ஜயஜய ஜயஜய பூர்ண கடாட்சி.

## எங்கள் வீட்டுத் தாயி

எங்கள் வீட்டுத் தாயி மிக நல்ல தாயி
வந்தாள் எங்கள் வீட்டுக் கொரு நல்ல நாளில்
வந்தவேளை நல்ல வேளை யாக வாயிற்று
மங்களமே எங்கள் வீட்டில் நிலவக் கண்டோம்
அந்த நாளே என்னைத் தானே ஆட்கொண்டு விட்டாள்
ஆட்கொண்ட வுடனேதானே ஆளுமாகிறாள்
எங்கள் வீட்டி லேயேஅவள் வாசம் செய்கிறாள்
என்னபெயர் என்றால் மகமாயி என்கிறாள்

களைமிகுத்தாளவளை லக்ஷ்மி என்பேன்
கரிய நிறத்தாளைக்கரு மாரி என்னுவேன்
காமவிழியா ளவளைக காமாக்ஷி என்பேன்
மீன்விழி கொண்டாளவளை மீனாட்சி யென்பேன்
தீர்க்க விழி கொண்டாளை விசாலாட்சியென்பேன்
எப்படி நான் கூப்பிட்டாலும் குரல் கொடுப்பாள்
எப்போது நான் கூப்பிட்டாலும் எதிரில் வருவாள்
எங்கள் வீட்டு வேலையெல்லாம் அவள் செய்கிறாள்
அவளன்றி வீட்டில் ஒன்றும் நடப்பதில்லை
அந்திபகல் என்னையேதான் அண்டி நிற்கிறாள்
எந்த வேலையு மெனக்குத் துணையிருப்பாள்
எங்கு செனறாலு மவள் கூட வருவாள்
என்னைக் கேளாமலே எல்லா ஏற்பாடும் செய்வாள்
இக்கட்டான வேளையிலே என்னைக் காப்பாள்
கணகாணிப் பாகவேதான் என்று மிருப்பாள்
என்னசெய்த போதிலுமே கூட விருப்பாள்
இருளில் நான் போகுமுனம் ஒளி தருவாள்
மருளிய போதென பயத்தை நீக்கி விடுவாள்
யாரோடு பேசினாலும் வேடிக்கை பார்ப்பாள்
அவசிய மற்றபோதும் அருகிருப்பாள்
ரகசியம் ஏதும் செய்ய முடிவதில்லை
ஓயாது எனகுடிக்கே உழைத்திடுறாள்
வாயார வாழ்த்திவிட்டால மகிழ்ச்சி கொள்வாள்
என்னை விட்டு கண மேனும் பிரிவதில்லை
என்குடி பாரமெல்லாமே அவள் ஏற்கிறாள்
யோக க்ஷேம மெல்லாமவள் பார்த்துக் கொள்கிறாள்
என்மக்கள் எல்லோரையுமே காத்துக் கொள்கிறாள்
எங்க விருந்தபோதும் பார்த்து வருகிறாள்
சம்பளமே அவள் ஒன்றும் வாங்குவதில்லை
அன்பான உள்ளமொன்றே போது மென்பாள்
உணவெதுவும் அவளுமே கொள்ளுவதில்லை
உபசாரம் ஒன்றே எனக்குப் போதும் என்னுவாள்
கள்ளமில்லா உள்ளமே என்வீடுதான் என்பாள்
ஏக செல்வம் உள்ளாளவள் யாருமறியார்
பாங்கி யொன்று வைத்திருக்காள் மர்மமாகவே
பணமுடை வந்தபோது பணம் தருவாள்

வேண்டும் வரை தான் அவளும் பணம் தருவாள்
முயற்சி நான் செய்யவேண்டும் என்று சொல்லுவாள்
முயன்றும் முடியாவிட்டால் தானே தருவாள்
தாயைப் போல என்னை நிதம் போற்றுகின்றாள்
மாயை அவள் போக்கெனக்குப் புரிவதில்லை
இட்டப்படி எதையும் செய்து முடிக்கமாட்டாள்
கட்டப்பட்ட பின்னர் வந்து கை கொடுப்பாள்
கேட்டதெல்லாம் மெய்யவளும் கொடுப்பதில்லை
கேட்டதில் நலமானதையே கொடுத்திடுவாள்
குறைகளைத் தானறிந்து தீர்த்து விடுவாள்
ஒன்றுமே நானவடந்து செய்வதுமில்லை
என்றுமவள் புகழையே பேசிவருவேன்
அவளையே நான் நம்பியுள்ளேன என்பதறிவாள்
மானம் போகாமல் என்னைக் காத்து வருவாள
கயவர்களைக் கண்டால் காளி போலச் சீறுவாள்
நல்லவரைக் கண்டால் முகம் மலர்ச்சிகொள்வாள்
பொல்லாரைப் பொடி பொடி செய்து விடுவாள்
தீங்கெனக் கிழைப்பவரை ஓங்கி அடிப்பாள
என்னை ஏசுவோரை லேசில் விடமாட்டாள
தாயைக் கண்டால் எல்லோருக்கும் பயமுண்டு
எமன் கூட என்முன் வரப் பயப்படுறான்
பேய்கள் என்னைக் கண்டாலோ டச்செய்துவிடுவாள்
பில்லி சூன்யம் வைப்போரைக் கொன்றுவிடுவாள்
நோயெனக்கு வந்துவிட்டால் பொறுக்கமாட்டாள்
தாயெனவே வந்து நல்ல மருந்தளிப்பாள்
வேதனை நானுற்றாலவள் வேதனை கொள்வாள்
போதனை யில்லாதபோது போதம் அளிப்பாள்
கெட்டவழி போனால் என்னை மீளப்பண்ணுவாள்
நட்டம் வராது ஐயம் மிகத்தருவாள்
கோபம் கொள்ள வேண்டாமென்று இதம் கூறுவாள்
மீறிக் கோபம் கொண்டால் புத்தி வரப்பண்ணுவாள்
காமம் கொள்ள வேண்டாமென்று கடிந்து சொல்வாள்
மீறிக் காமம் கொண்டால் அதைத் தடை செய்குவாள்
அவதியுற்ற காலத்திலே ஆறுதல் சொல்வாள்
கவலை யுற்ற காலத்திலே ஆறுதல் செய்வாள்
எங்கள் தாயைப் போலத் தாயி உலகிலில்லை

எங்கும் புகழ் பெற்றவளாம் எங்கள் தாயி
தெய்வமெல்லாம் எங்கள் தாயிக் கடங்கிவிடும்
தாயைப் போ லழகுள்ளாளைக் கண்டதுமில்லை
தாயைப் போல் பரிவுள்ளாரைப் பார்த்ததுமில்லை.
தாயைப் போலத் தாங்குவாரைக் கண்டதுமில்லை
தாயின் கண்ணைப்போலக் கண்ணைக் கண்டதுமில்லை
புன்னகையாற் கவலையெல்லாம் போக்கிவிடுவாள்
பார்வையினாற் பலநிதியும் ஆக்கிவிடுவாள்
யாரிடமும் தாயைப்பற்றிப் புகழ் பேசுவேன்
அவளைப் புகழாமல் போது போவதில்லையே
தாயைப் புகழ்ந்தா லெல்லாம் பெற்றிடலாமே.

## மங்களம்

மத்யமாவதி ] பல்லவி [ சாபு

மங்களம் சுப மங்களம் ஜய
மங்களம் முழு மங்களம் (மங்)

அநுபல்லவி

பொங்கவே சுப மங்களம் ஜகம்
எங்குமே நிதம் பொங்கவே (மங்)

சரணம்

தந்திமுகத் தேவனுக்கும் சண்முகற்கும் மங்களம்
மங்கையைத்தன் பங்கில்வைத்த சங்கரற்கும் மங்களம்
என்குறைகள் தீர்க்கவல்ல ஈஸ்வரிக்கும் மங்களம்
சங்குசக்ர மாலினுக்கும் செம்மகட்கும் மங்களம்
ஆயர்குலக் கண்ணனுக்கும் ஆஞ்சநேயத் தேவனுக்கும்
மாயரகு ராமனுக்கும் நாமகட்கு மங்களம்
நாமமோதும் மாதவர்க்கும் நான்முகற்கும் மங்களம்
காமகோடி பீடம்வாழும் தாயினுக்கே மங்களம்.

---

அச்சிட்டது: 'ஆஸாதி' அச்சகம், 12C, ராயபேட்டை நெடுஞ்சாலை, சென்னை
( தொலைபேசி : 74484 )